ஓம்.

# திருக்குறள் விளக்கம்

இதில் தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் திருவருள்செய்த

## திருக்குறள் மூலமும்

## அதற்குப் பரிமேலழகர் உரையும்

சேர்ந்துள்ளன.

### மூன்றும் பாகம்

## "காமத்துப்பால்"



இது "சித்தாந்தப்" பத்திராசிரியர்

திருவாளர் - கிருஷ்ணம்பேட்டை - குப்புசாமி முதலியார்

அவர்களால்

இ யார் மாணவர்கள்

கா. ரா. காளத்தீசுர முதலியார்,

முதலியோர் விருப்பத்தின்படி

இயற்றப்பட்டது.

1926



விலாசம் :—

கி. குப்புசாமி முதலியார்,

3/2, பிள்ளையார்கோயில் தெரு,

கிருஷ்ணம்பேட்டை,

திருவல்லிக்கேணி போ

# Opinion

I have perused a major portion of Pandit K. Kuppuswami Mudaliar's "Tirukkural Vilakkam". His work appears to be the outcome of not only a deep study of the text and its commentary but also of the accumulated experience of several years of teaching. His way of elucidating the ideas of the author as well as the commentary of Parimelalagar on the Text is inimitable. His explanations and the felicitous mode of presenting highly abstruse ideas by means of easy and familiar illustrations will, I believe,

make the work useful not only to the learned but also to those who have not a high degree of proficiency in the Tamil language and literature. It gives me great pleasure to say that his is a monumental production which proves his originality, research and scholarship. He may be said to have done a real service to the Tamil land by bringing out his edition of the moral code of Tiruvalluvar so as to suit the needs of the present time.

2. So far as I am aware he is perhaps the only one who has not only had the privilege of making a thorough study of the immortal work of Tiruvalluvar during the greater portion of his life but has also had the rare privilege of having taught it to many for several years. It is very rare that a single person with slender resources undertakes and completes a work of this kind during his life-time. His is therefore an achievement of which any man may well be proud. He has earned the gratitude of the Tamils by his untiring and self-sacrificing labour and by the novel method of presentation which he has adopted. It is my well-considered opinion that his publication deserves every encouragement at the hands of the public.

T. P. SANTHOSHA NADHA PILLAI,
*Head Clerk " C " Section,*
POSTMASTER-GENERAL'S OFFICE, MADRAS

DATED MADRAS,
*26th October*, 1926.

உ

# திருக்குறள் விளக்கம்



# காமத்துப்பால்

## களவியல்

(பரி.) இனி அப்பொருளைத் துணைக்காரணமாகவுடைத்தாய் இம்மையே பயப்பதாய வின்பங்கூறுவா னெடுத்துக்கொண்டார். ஈண்டின்பமென்றது ஒருகாலத்தொருபொருளான் ஐம்புலனுநுகர்தற்சிறப்புடைத்தாய காமவின் பத்தினை. இச்சிறப்புப்பற்றி வடநூலுட் போசராசனுஞ் 'சுவைபலவென்று கூறுவார் கூறுக; யாங்கூறுவ தின்பச்சுவை யொன்றினையுமே' என இதனையே யிகுத்துக்கூறினன். இது புணர்ச்சி பிரிவென விருவகைப்படும். எனை யிருத்தல், இரங்கல், ஊடலென்பனவோவெனின், இவர் பொருட் பாகுபாட் டினை அறம்பொருளின்பமென* வடநூல் வழக்குப்பற்றி யோதுதலான், அவ் வாறே யவற்றைப் பிரிவின்கணடக்கினரென்க. இனி அவைதம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும், பிரிவைக் கற்பென் றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதிபயப்ப உலகநடை

---

* " இன்பமும் பொருளு மறனு மென்றாங்
கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுட்
டுறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே "

என்னும் இத்தொல்காப்பியப் பொருளதிகாரம் களவியல் முதற் சூத் திரத்தால் வட நூலார் கூறும் அறம் பொருள் இன்பம் என்னும் பாகுபாட் டினை இன்பம் பொருள் அறம் எனக் கூறுவது தமிழர் கூற்றென்றும், அவ்விதம் அடையும் இன்பமானது இயற்கைப் புணர்ச்சி முதல் இருபத் தைந்து பிரிவுகளால் பகுக்கப்பட்டுள்ளது என்றும், எண்வகை மணங்களுள்

*யோடு ஒப்புமொல்வாமையு முடையவாக்கிக் கூறுகின்றார். அக் கைகோ ளிரண்டனுள்ளுங் களவாவது பிணிமூப்பிறப்புக்களின்றி எஞ்ஞான்று மொரு தன்மையராய் உருவுந் திருவும் பருவமுங் குலனுங் குணனு மன்பு முதலிய வற்றாற் றம்முளொப்புமையுடையராய தலைமகனுந் தலைமகளும் பிறர் கொடுப் பவுமடுப்பவுமன்றிப் பால்வகை பாற்றாமே யெதிர்ப்பட்டுப் புணர்ந்துவருவது. அதனை யேழதிகாரத்தாற் கூற வான்றொடங்கி, முதற்கட் டகையணங்குறுத் தல் கூறுகின்றார்.*

விளக்கம்:—பொருட்பால் இதுவென்று உணர்த்திய தெய்வப்புல வர் திருவள்ளுவனார் இனி முறையே அப்பொருளையே துணைக்காரணமா கக்கொண்டு இம்மைப் பயன் ஒன்றினையே கொடுக்கும் இன்பம்' என்ப தைப்பற்றிச்சொல்லுதற்கு எடுத்துக்கொண்டனர். இங்கு இன்பமென்று எடுத்துக்கொண்டது ஒரே காலத்தில் ஒரு பொருளால் ஐந்து புலன்க ளும் இன்பம் அனுபவித்தற்குரிய மிகச்சிறப்பினையுடைய காம இன்பம் என்பதாம். இவ்வித சிறப்பினைப்பற்றி வடநூலுள் மிகத் தேர்ந்தவ னாகிய போஜராஜன் என்பவனும் 'உலகத்துப் பல சுவை உண்டென்று சொல்லுபவர் சொல்லுக; யான் சொல்லும் இன்பச்சுவை ஒன்றே சுவையுடையது' என்று ஐம்புலனும் நுகரும் சுவையுடையதாகிய இக் காம இன்பத்தினையே பெரிதெனக் கூறினான். மேலும், இவ்வித சுவை யுடைய காம இன்பத்தினைக் காம நூல் வல்லவர் புணர்ச்சி என்றும், பிரிவு என்றும், இருத்தல் என்றும், இரங்கல் என்றும், ஊடல் என் றும் பிரித்து இருக்கினும், இவ்வாசிரியர் பொருள் பாகுபாட்டினை

---

ஒன்றாகிய காந்தர்வ மணத்தின்பாற்படுவது என்றும், தலைவனுக்கும் தலை விக்கும் நேருங் கூட்டமானது குறிஞ்சித் திணையில் நேரும் என்றும், குறிஞ் சித் திணைக்குக் கூறும் பெரும்பொழுதும் சிறு பொழுதும் கூதிரும் யாமமும் ஆயினும் பொழில் விளையாட்டு விருப்பால் ஆயத்தோடு வருதற்கு அக்காலம் பொருந்தாது ஆதலால் வேனிலையே கொள்ளுதல் வேண்டும் என்றும் அறி

இன்றேல், இனி ஊழ்வலியால் புணர்வார் என்பதைத் திருக்கோவையாருள்,

> "வளைபயில்கீழ் கடலின்றிட மேல்கடல் வானுகத்தின்
> றுளைவழிநேர் கழிகோத்தெனத் தில்லைத் தொல்லோன்கயிலைக்
> கிளைவயினீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டு தந்த
> விளைவையல்லால் வியவே னயவேன் றெய்வமிக்கெனவே

என்னும் திருவிருத்தத்தால் அறிதல்கூடும்.

## களவியல் 3

அறம், பொருள், இன்பம் என்று வடநூல் வல்லவர் வழக்கையே பின் தொடர்ந்து நூலியற்றினாராதலால், பிரிவு என்பதனுள் இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவற்றை அடக்கியுள்ளனர். அதுவன்றியும், அப்புணர்ச்சி பிரிவு என்னும் இரண்டனையும் தமிழ் நூல் வல்லவர்கள் வழக்கோடும் பொருந்தப் புணர்ச்சி என்பதைக் களவென்றும், † பிரிவு என்பதைக் கற்பென்றும் பெரும்பான்மை கருதி வகுத்து அக்களவென்பதையும கற்பென்பதையும் மிகச் சுவைபயக்கும்படி பெரும்பான்மை உலக நடையோடு ஒத்து இருக்கவும், சிறுபான்மை ஒவ்வாதிருக்கவும் கூடிய தகுதியோடு கூறுகின்றனர். இவ்வித களவு கற்பு, என்னும் கைகோள் இரண்டனுள்ளும் களவு என்பது பிணியும், மூப்பும், இறப்பும ஆகிய இவையில்லாது எக்காலத்தும் ஒரே தன்மையுடையவராய் வடிவத்திலும், அழகிலும், பருவத்திலும், குலத்திலும், குணத்திலும், அன்பிலும் ஒரு சிறிதுங் குறையாது ஒப்புமை உடையவராய் உள்ள ஒரு தலைமகனும் ஒரு தலைமகளும் பிறரால் கொடுப்பதுமல்லாமல் அடுப்பதுமல்லாமல் ஊழின்வலியால் தாமே ஒருவருக்கொருவர் எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவதாம். அவ்விதம் புணர்ந்து வரும் களவென்பதை ஏழு அதிகாரங்களால் சொல்லத் தொடங்கி முதல் அதிகாரமாகத தகையணங்குறுத்தல் என்பதனைச் சொல்லத் தொடங்கினர்.

---

† இவ்விதம் கூறும் களவு என்பதை ஒருவன் கற்பதால் ஆகும் பயன்

எதுவென்று நீவிர் ஐயுறுதல் கூடும். எனெனில்' களவு,கொலே,இணே விழைச்சு என்பனவாகிய குற்றங்களன்றோ எல்லாச் சமயத்தோர்களாலும் உலகத்தாராலும் வெறுக்கப்பட்டவை; அவ்விதமிருக்க, இதை எதற்காகக் கற்றல் வேண்டுமெனின், தெய்வப்புலவர் இங்குக் கூறும் இக்காமம் தீமை பயவாது வீடு பயப்பது ஒன்றாகும். அது எவ்விதமெனின்? ஒத்த அன்புடைய இருவர் மணங்கள் எட்டனுள் காந்தர்வம் என்கின்ற காமம் சேரும் மணங்கொண்டு அன்பு பூண்டு ஒருவர் நோய் கொண்டால் மற்றொருவர் நோய் கொண்டும்,ஒருவர் சாவாராயின் மற்றொருவர் செத்தும்போகக் கூடிய ஒத்த அன்பினராய் உலகத்து ஒழுகி அவ்வொழுக்கத்தால் இல்லறம் நடத்தி மேல் கற்பிறவி அடைந்து தவம் பூண்டு ஞானமடைந்து வீடு பேற்றினை யடைய நிற்பது ஒன்றாதலான்; அன்றியும், மேல் பரிமேலழகர் போஜராஜன் தான் இன்பச்சுவை என்று கொண்டது காம இன்பத்தினையே என்று கூறியது என்னெனின், சுவை: சொற்சுவை, பொருட்சுவை என இரண்டாயினும், அப் பொருட் சுவையானது வீரச்சுவை, பயச்சுவை, இழிப்புச்சுவை, அற்புதச்

4 **திருக்குறள் விளக்கம்**

## 109. அதிகாரம்.

---

## தகையணங்குறுத்தல்.

(ப.) அஃதாவது பொழில்விளையாட்டுவிருப்பான் ஆயம்நீங்க அதன்கட்டபியனாய் நின்றாளை வேட்டவிருப்பான் இளையார்நீங்கத் தமியனாய்வந்து கண்ணுற்ற தலைமகன் அவள் வனப்புத் தன்னை வருத்தமுறுவித்தலைச் சொல்லுதல். இது, கண்ணுற்றபொழுதே நிகழ்வதாகலின், முதற்கட் கூறப்பட்டது.

விளக்கம்:- இத்தகையணங்குறுத்தலென்பது மேற்கூறியபடி ஒரு வித வேறுபாடுமில்லாது மிக ஒப்புமையுடையவராய தலைமகன் ஒருவனும் தலைமகள் ஒருத்தியும் ஒருவரை ஒருவர் கண்டவுடனே உண்டாவதொன்றாகும். அதாவது, ஊழின் வலியால் தலைமகள் ஒருத்திக்குச் சோலையில் விளையாடும் விருப்பம் உண்டாகித் தன் தோழியரோடு சென்று தானும் தன் தோழிமாரும் விளையாடுகின்ற பொழில் ஒன்றில் புகுந்து நிற்கவும், ஏனைய தோழியர்கள் ஒவ்வொருவராய் ஊசலாடவும்,

---

சுவை, இன்பச் சுவை, அவலச்சுவை, நகைச்சுவை, உருத்திரச்சுவை, நடுவு நிலைச்சுவை என்று ஒன்பது வகைப்படும் என்றும் இவ்வொன்பதனுள் இன்பச்சுவையாவது :—

" காமவிகயங் கருதுங் காலைத்
தூவுன்னுறுத்த வடிவுந் தொழிலுங்
காரிகைகலந்த கடைக்கணுங் கவின்பெறு
மூரன்முறுவல் சிறுநிலா வரும்பலு
மலர்ந்த முகனு மிரந்தமன் கிளவியுங்
கலந்தன பிறவுங் கடைப்பிடித் தனரே "

என்றமையால், புணர்ச்சியைப்பற்றிய விருப்பமென்றும் அறிகின்றோம். இவ் விருப்பமாவது காட்சியும் குறிப்பறிதலும் நிகழ்ந்த பிறகு குறிஞ்சித்திணையில் புணர்ச்சியும், பாலைத்திணையில் பிரிதலும், முல்லைத்திணையில் இருத்தலும், மருதத்திணையில் ஊடலும், நெய்தல் திணையில் இரங்கலும் நிகழ்தல் ஒன்றும். இவ்விதம் கூறிய பொருள் பாகுபாட்டினைத் தமிழ் நூலார் அகப்பொருள் என்று எடுத்துக் கொண்டது மனத்தினிடத்தே உண்டாகும் எண்ணத்தினை அகப்பொருளென்று கூறியதாலேயாகும்.

குன்று எதிர்ச் சென்று கூவவும், ஒளி தங்கிய முத்துக்களைப்
பொறுக்கவும், குளிர்ந்த தளிர்களைப் பறிக்கவும், குற்றமில்லாத ஜலத்
தில் குளித்து முழுகவும், அம்மனைக்காய், பந்து, கழங்கு முதலியவை
ஆடவும் பிரிந்து செல்லுவர். அவ்வாறு பிரிந்து சென்றவுடன் தனியே
நின்ற தலைமகள் மாதவிப் பந்தரில் மரகதச் சிலையினில் மயில் ஒன்று
தன் கலாபத்தை விரித்து ஆடுவதைப் பார்த்து நிற்பாளாவள். இவள்
இவ்வாறு இருக்கவும், தலைமகன் ஒருவன் வேட்டையின் விருப்பத்தால்
பல இளையாரோடு புறப்பட்டுக் காட்டுக்கு வருதலும், உடன் வந்த
இளைஞர் பலரும் வேட்டையின் விருப்பத்தால் கலைமானினை யெய்யவும்,
கடுமுன்ன ஏனத்தை எய்யவும், கரடி, வெம்புலியினைக் கடியவும் தலை
மகனை விட்டு நீங்குவர். அவ்விதம் தன்னுடன் வந்த இளைஞர் நீங்கவும்
தலைமகன் தன்னந் தனியனாய்த் தன்னெதிர்ப்பட்ட பொழிலிடை
மான் ஒன்றைப் பின்தொடர்ந்து செல்லுவன். அவ்விதம் சென்றவனா
கிய தலைமகன் ஊழ்வலியால் மயில் விளையாட்டைப்பார்த்து மகிழ்வுற்றி
ருக்கும் மயிலாகிய தலைமகளைக் காண்பான்.* இவ்விதம் கண்டவனாகிய

* இனி இதனையே இறையனாரகப்பொருள் இரண்டாவது சூத்திரத்தி
னுள் கூறிய காமப் புணர்ச்சி என்னும் உரையினுள்ளும் பின்வருமாறு காணு
தல் கூடும்.

"இனிக் காமப்புணர்ச்சி யென்பது தலைமகனுந் தலைமகளுந் தமியராய்
ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டுத் தம்முணர்வினரன்றி வேட்கை மிகவினாற்
புணர்வதென்பது. ஆயின் இவர் மேற் பொருவிறந்தார் தலைமகனுந் தலைமக
ளுமென்றமையான், அவனுங் கற்கந்தும் எறிபோத்துங் கடுங்கண் யானையுந்
தறுகட்பன்றியுங் கருவரையும் இருநிலனும் பெருவிசும்பு மனையார் ஆளி
மொய்ம்பினர் அரிமான்றுப்பினர் பற்பனூறாயிரவர் கூர்வேலிளையர் தற்சூழச்
செல்வனென்பது முடிந்தது. இவளும் உடன் பிறந்து உடன் வளர்ந்து நீர்
உடனாடிச் சீர் உடன் பெருகி ஓல் உடனாட்டப் பால் உடனுண்டு பல் உட
னெழுந்து சொல் உடன் கற்றுப் பழமையும் பயிற்சியும் பண்பும் நண்பும்
விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியும் உடையார் பற்பனூறாயிரவர் கண்ணுமன
முங்கவரும் ஒண்ணுதன் மகளிர் தற்சூழத் தாரகை நடுவண் தண்மதிபோலச்

செல்வானென்பது முடிந்தது. முடியவே, தமியராய்ப் புணர்ந்தார் வன்பத ரேஞடு மாறுகொள்ளுமெனின், மாறு கொள்ளாது; என்னை ? அவள் ஆயங் களும் பொழிலிடம் புகுதலும் விளையாட்டு விருப்பினுற் பிரியும். என்னை பிரி யுமாறெனின், ஒருவர் ஒருவரின் முன்னர்த் தழைவிழையத் தக்கன தொடுத்து



தலைமகன் அவளைத் திடீரென நோக்கினுதலால் அவள் அழகு தன்னை வருத்துதலையும் அவள் உருவு ஈதென்றறியாது சந்தேகித்தான் போல்

---

மென்றுங், கண்ணி தண்ணறு நாற்றத்தன செய்துமென்றும், போது மேதக் கன கொய்துமென்றும், மயிலொடு மாறுடுதுமென்றும், குயிலொடு மாறுகூவுது மென்றும், அருவியாடி அஞ்சுனை குடைதுமென்றும், வாசமலர்க் கொடியில் ஊசலாடுதுமென்றும் பரந்து, அப்பாலுள்ளார் இப்பாலுள்ளார் கொல்லோ வென்றும், இப்பாலுள்ளார் அப்பாலுள்ளார் கொல்லோவென்றும் இவ்வகை நினைத்துப் பிரிபவென்பது. இவ்வகை அவளைத் தமியராய்ப் பிரியவெனின், எட்டியுஞ் சுட்டியுங் காட்டப்படுங் குலத்தனளல்லளாகலானும் பான்மை அவ் வகைத்தாகலானும் பிறவாறு நினையார் பிரிபவென்பது. ஆயின், இவ்வகைப் பட்ட ஆயத்திடை மேனுட் பிரிந்து பயின்றறியாதாள் தமியளாய் நிற்குமோ வெனின், நிற்கும்; தான் பயின்ற இடத் தன் ஆயத்தினேடொக்குமாகலா னென்பது. யாங்ஙனம் நிற்குமோவெனின், சந்தனமுஞ் சண்பகமுந் தேமா வுந் தீம்பலவும் ஆசினியும் அசோகுங் கோங்கும் வேங்கையுங் குரவமும் விரிந்து, நாகமுந் திலகமும் நறவும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌ வலொடு மணங்கமழ்ந்து, பாதிரியும் பரவை ஞாழலும் பைங்கொன்றையும் பிணியவிழ்ந்த பொரிப்புன்கும் புன்னாகமும் உருக்கொடு முகை சிறந்து, வண்டறைந்து, தேனார்ந்து, வரிக்குயில்கள் இசை பாடத், தண்டென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவு செய்யும் பொழிலது நடுவண் தூர் மா ணிக்கச் செய்குன்றின்மேல் விசும்பு துடைத்துப் பசும்பொன் பூத்து வண்டு துவைப்பத் தண்டேன் துளிப்பதோர் வெறியுறு நறுமலர் வேங்கை கண்டான்; கண்டு பெரியதோர் காதல் களிகூர்ந்து தன் செம்மலர்ச் சிறடி

மேற் சிலம்பு கிடந்து சிலம்பு புடைப்ப, அம்மலரணிக் கொம்பர் நடைகற்ப தென நடந்து சென்று, நறைவிரி வேங்கை நாண்மலர் கொய்தான்; கொய்த விடத்து மரகதமணி விளிம்படுத்த மாணிக்கச் சுனைமருங்கினதோர் மாதவி வல்லி மண்டபத்துப் போது வேய்ந்த பூநாறு கொழுநிழற்கீழ்க் கடிக்குருக் கத்தி கொடிப்பிடித்துத் தகடுபடு பசும்பொற் சிகரங்களின் முகடு தொடுத்து வந்திழிதரும் அருவி பொன் கொழித்து மணிவரன்றி மாணிக்கத்தொடு வயிரமுந்தி அணிகிளரருவி ஆடகப் பாறைமேல் அதிர் குரன் முரசின் கணிரட்ட, வண்டுந் தேனும் யாழ்முரல, வரிக்குயில்கள் இசைபாடத், தண் டாது தவிசுபடப் போர்த்ததோர் பளிக்குப்பாறை மணித்தலத்து மிசை நீல ஆலவட்டம் விரித்தாற்போலத் தன் கோலக் கலாவங் கொளவிரித்து முன் பின ஞாயிற்று இளவெயில் எறிப்ப ஓர் இளமயில் ஆடுவது கண்டு நின்றான். அப்போது நிலமகனும் பற்பன்னூருயிரவர் கூர் வேலிளையாரோடு குளிர்



கூறுவன்." ஆகிவே, தலைமகளினது அழகு தலைமகனைத் துன்புறுத்துத லைத் தகையணங்குறுத்தல் என்று கூறி முதலில் வைத்து உள்ளனர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், " அறிவோய்! அறமும் பொருளும் இதுவென உணர்ந்த எங்களுக்கு இன்பத்தையும் உணர்த்துவான் தொடங்கி இன்பப் பகுதியாகிய காமத்துப்பாலில் முதலதிகாரமாகிய தகையணங்குறுத்தலைக் கூற ஆரம்பித்தீர். ஒன்றன்பின் ஒன்றாக அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்

1081. † அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு. [குழை

மலைச் சாரல் வேட்டம் போய் விளையாடுகின்றான், ஆண்டெழுந்ததோர் கடு மாவின் பின்னோடிக், காவலிளையவரைக் கையகன்று, நெடுமான் தேரொடு பாகனை நிலவு மணற் கானியாற்று நிற்கப் பணித்துத், தொடுகழல் அடி யதிரச் சுருளிருங்குஞ்சி பொன்ஞாணிற் பிணித்துக், கடிகமழ் நறுங்கண்ணி மேற் கொண்டு வண்டு மணமயா அஞ்சாந்தின் நறுநாற்றம் அகன் பொழி

விடைப் பார்த்து நாற, அடுசிலே ஒருகணை எந்தி வடிவுகொண்ட காமன் போலச் சென்று அவன் நின்ற இரும்பொழில் புகும். அஃதியாங்ஙனமோ வெனின், வடகடலிட்ட ஒருநுகம் ஒருதுளை தென்கடலிட்ட ஒரு கழி சென்று கோத்தாற் போலவும் வெங்கதிர்க்கனவியுந் தண்கதிர்மதியமுந் தங் கதிவழியித் தலைப்பெய்தாற்போலவுந் தலைப்பெய்து ஒருவரொருவரைக் காண்டல் நிமித்தமாகத் தமியராவர்.

× "மடமானோக்கி வடிவுங் கண்ட விடமுஞ் சிறந்தழி யெய்துவ தையம்" என்னும் அகப்பொருள் விளக்கச் சூத்திரமும இங்கு உய்த்துணரற் பாலதாம்.

†இயற்கைப்புணர்ச்சிக்கு முன் காட்சி, ஐயம், தெளிதல், துணிவு, குறிப் பறிதல் என்பன நிகழ்ச்சியாயினும் இவ்வாசிரியர் காட்சி யென்பதைக் கூறாது கண்ட பின்னரே கொள்ளும ஐயததினை முன்னர்க் கூறினர். இதனைத் திருக்கோவையார் ஆசிரியர்,

"திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே"

என்றும்,

போதோ விசும்போ புனலோ பணிகள துபதியோ
யாதோ அறிகுவ தேதுமரிதி யமன்விடுத்த

# 8 திருக்குறள் விளக்கம்

**தலைமகளுருவு முதலியன முன்கண்டறிவனவன்றிச் சிறந்தமையின் அவளைத் தலைமகன் ஐயுற்றது. ***

(பரி.) இ-ள். கனங்குழை=இக்கனவியகுழையையுடையாள்—அணங்கு கொல்=இப்பொழிற்கணுறைவாளோர் தெய்வமகளோ,—ஆய் மயில்கொல்= அன்றி யொருமயில் விசேடமோ,—மாதர்கொல்=அன்றியொருமானுடமாத ரோ,—என் னெஞ்சு மாலும்=இவளையின்னளென்று துணியமாட்டாது என் னெஞ்சு மயங்கா நின்றது. எ-று.

ஒ—அசை. ஆய்மயில்=படைத்தோன் விசேடமாக வாய்ந்துபடைத்த

மயில்; மயிற்சாதியுட்டெரிந்தெடுத்த மயிலென்றுமாம். †கனங்குழை—ஆகு பெயர். கணங்குழையென்று பாடமோதிப் பலவாய்த்திரண்ட குழையென் றுரைப்பாருமுளர். எழுதலாகாவுருவும் தன்வருத்தமும்பற்றி 'அணங்கு கொல்' என்றும், சாயலும் பொழில்வயினிற்றலும்பற்றி 'ஆய்மயில் கொல்' என்றும், தன்னெஞ்சஞ் சென்றமையும் அவளெதிர்நோக்கியவாறும் பற்றி 'மாதர்கொல்' என்றுங் கூறினன். (க)

விளக்கம்:—தலைமகளைக் கண்ட தலைமகன் தான் காணும் தலைமகளது உருவத்தைப்போல் முன்னோர் முறை கண்டறியாதவனாதலால், அத்தலைமகளைத் தலைமகன் சந்தேகித்தவனாப் 'இக்கனந்தங்கிய குழையாதோ வனங்கன்றுணையோ வினையிலி தொல்லைத்தில்லை மாதோ மடமயிலோ வெனநின்றவர் வாழ்பதியே" என்றும், காட்சியையும் ஐயத்தையும் முறையே பிரித்துக் காட்டியுள்ளதால் அறிதல்கூடும்.

குறிஞ்சிக் கருப் பொருள்களுள் ஒன்றாகும் புள்ளினமாயுமுள்ள மயிலும் கிளியும் என்பதனுள் மயில் என்பதைக் கூறியமையால் புணர்தலுக்குத் திணை குறிஞ்சி என்பதையும் இத்திருக்குறளால் கண்டோம்.

*"ஐயமென்பது கண்ணுற்றபின் ஐயப்படுவது. எங்ஙனமோ வெனின், வரையரமகள் கொல்லோ வானரமகள் கொல்லோ நீரரமகள் கொல்லோ இத்துணை மேதகவுடையாள்; அன்றி மக்களுள்ளாள் கொல்லோ என்று ஐயப்படுவது"—இறையனாரகப்பொருள் இரண்டாவது சூத்திரவுரை.

† கனங்குழை யென்றதனை ஆகுபெயர் அன்றென மறுத்து, அன்மொழித் தொகையெனக் கொள்வர் இலக்கண விளக்கச் சூறாவளியார். ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் உள்ள வேற்றுமையைத் தொல்காப்பியச் சூத்திர விருத்தியிற் காண்க.



கிய காதணியினை யுடையவள் இச்சோலையில் வசிக்கும் தெய்வமகள் தானோ, அல்லது மயில் கூட்டத்தில் மிகத் தகுந்த அழகினை வாய்ந்த

ஒரு மயில்தானே, அல்லது ஓர் மானுட மகளோ, இவளை இன்னவளென்று துணிந்து அறிவதற்கு இல்லாது என் மனமானது மயங்குகின்றது' என்று கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது எழுதுவதற்கு அமையாத அவளது உருவத்தைக் கண்டு தான் வருந்திய வருத்தத்தைப் பற்றிக் காமநெறியால் ஆடவருயிரைக் கொள்ளை கொள்ளும் தெய்வமகளென்று உவமித்தான். அவளது சாயலையும் சோலையில் நிற்கும் தகுதியையும் நோக்கி மயிலோ என ஐயுற்றான். பின்னர் தன்னெஞ்சு அவளிடத்துச் சென்று தான் அவளை நோக்கியதும் அவள் எதிர் நோக்கியதையுங் கருதி இவள் மானுடமாதே என்று தீர்மானித்தான். இவ்விதம் தீர்மானித்தவன் இனி அவளது பார்வையாலாய வருத்தத்தையும் சொல்ல ஆரம்பித்தனன்.

## 1082. நோக்கினா ளேக்கெதிர் நோக்குத ணங்கணங்கு
## தானைக்கொண் டன்ன துடைத்து.

மானுடமாதாக நெளிந்த தலைமகன் அவணோக்கினாளா
வருத்தங் கூறியது.

(பரி.) இ-ள். நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் = இப்பெற்றித்தாய வனப்பினையுடையாள் என்னோக்கிற்கெதிர்நோக்குதல்—தாக்கு அணங்கு தானைக்கொண்டன்னது உடைத்து = தானே தாக்கி வருத்துவதோரணங்கு தாக்குதற்குத் தானையையுங் கொண்டுவந்தாற்போலுந் தன்மையையுடைத்து.

மேலும் 'அணங்குகொலாய்மயில்கொல்' என்றமையான், இகரச்சுட்டு வருவிக்கப்பட்டது. 'எதிர்நோக்குதலென்றமையின்' அது குறிப்புநோக்காயிற்று, வனப்பால் வருந்துதன்மேலுங் குறிப்பு நோக்கால் வருந்துதல் கூறியவாறு. நோக்கினாளென்பதற்கு என்னானோக்கப்பட்டாளென்றுரைப்பாருமுளர். (உ)

விளக்கம்:—மேல் திருக்குறளில் கூறிய வண்ணம் மானுட மாதர் என்று தெளிந்த தலைமகன் 'இவ்வித தகுதியுடையதாகிய அழகினையுடையாள் நான் அவளைப் பார்த்தகாலத்து என்னை எதிராகப் பார்த்தானது ஒருவன் காண்பதற்கு முன்னே தானே சென்று தாக்கி வருத்தச் செய்பவளாகிய காமநெறியால் உயிர் கொள்ளும் தெய்வமகள் தான்

தாக்கித் துன்புறுத்துவதுமல்லாமல் தன் சேனையையும் உடன்
2



கொண்டு வந்து தாக்குந் தகுதியுடையதாக உள்ளது' என்று கூறின னென இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஆடவனொருவன் பார்த்தகாலத்து அப்பார்வைக்கு எதிராக மகளிரும் பார்ப்பாராயின் அப்பார்வையைக் குறிப்பு நோக்கு என்று நூல்வல்லவர் கூறுவாராதலால், தலைமகளது அழகானது தன்னை மிகுதியும் வருத்துவதோடு தன்னையுங் குறிப்பாக நோக்கியது அணங்கு என்னும் தெய்வமகள் தன் சேனை யோடு வந்து தன்னை வருத்துவதாகத் தன் காமத் துன்பத்தின் மிகுதி யைக் கூறலாயினன். மானுட மாதராதல் கால் நிலத்தில் தோய்தலானும், கண் இமைத்தலானும், மாலை வாடுதலானும் ஆகிய குறிகளால் அறிந்தா னென்றதாயிற்று. இதனைத் திருக்கோவையாருள்,

“ பாயும் விடையரன் றில்லையன்னாள் படைக்கண் ணிமைக்குந்
தோயு நிலத்தடி தூமலர் வாடுந் துயரமெய்தி
யாயு மனனே யணங்கல்ல ளம்மா முலைசுமந்து
தேயு மருங்குற் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே ”

என்பதனானு மறிதல் கூடும்.

## 1083. பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
## பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

இதுவுமது.

(பரி.) இ-ள். கூற்று என்பதனைப் பண்டு அறியேன் = கூற்றென்று நூலோர்சொல்வதனைப் பண்டு கேட்டறிவதல்லது கண்டறியேன், — இனி அறிந்தேன் = இப்பொழுது கண்டறிந்தேன், — பெண்டகையால் பேர் அமர்க் கட்டு = அது பெண்டகையுடனே பெரியவாய் அமர்த்த கண்களையுடைத்து.

பெண்டகை = நாணம் மடம் அச்சம் பயிர்ப்பென்னுங் குணங்கள். அவை அவ்வக்குறிகளானறியப்பட்டன. அமர்த்தல் = அமர்செய்தல்: பெய

ரடியாயவினே. பெண்டகையால் இன்பம பயத்தலுமுண்டேனும் துன்பம் பயத்தன்மிகுதிபற்றிக் கூற்றுக்கிக் கூறினன். (கூ)

விளக்கம்:—மேல் திருக்குறளில் கூறியபடி மறுபடியும் அவள் கண்ணினுலாய துன்பத்தைக் கூறும் தலைமகன் 'எமன் என்று நூல்வல்லவர் சொல்லுகின்ற ஒன்றினைப் பழைய காலம் முதல் காதால் கேட்டு அறிவதையே அல்லாமல் கண்ணுல் கண்டு அறியேன்.



ஆனுல் இப்பொழுது அதனைப் பார்த்து அறிந்தேன். அவ்வெமனுனது பெண் தகுதியோடு கூடிப் பெரியனவாய் யுத்தம் செய்யும் கண்களை யுடையதாய் இருக்கிறது' என்று கூறினன் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. மேல் காமநெறியால் உயிர்கொள்ளும் ஓர் தெய்வமகள் என்று சிறப்பித்துச்சொல்லிய தலைவன் இத்திருக்குறளில் பொதுவாகவே யாவர் உயிரையும் கொள்ளை கொள்ளுகின்ற எமன் என்று அக்கண்களுக்கு உள்ள பார்வையின் விசேடத்தை வியந்து கூறினன். இவ்விதம் எமனென்று கூறினுனயினும், தான் கண்ட பெண்ணிற்கு உரிய குணங்களாகிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நான்கினையும் அதனதன் குறிகளால் அறிந்து கூறியதுடன் அவள் குறிப்பு நோக்கினுல் தான் அடைந்த துன்பத்தினை அறிவித்தற்கு அமர்செய்யும் கண்களை யுடையது என்று கூறினன். அதுவன்றியும், தான் கண்ட இவ்வித பெண்ணின் தகுதியால் இன்பம் அடைவதற்கு உரியவனுயினும் தான் அவள் பார்வையால் அடைந்த துன்பமானது மிகுதியாக இருந்தமையால் எமனுக்கிக் கூறினன். பெண்களின் குணங்களைப்பற்றி இறையனுரகப் பொருள் இரண்டாம் சூத்திரம்,

"அதுவே, தானே யவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி யிருவயி னொத்தல்"

என்பதற்கு உரை எழுதிய காலத்து "இனித் தலைமகட்கு நாணம்,

மடம், அச்சம், பயிர்ப்பென்பன குணம். அவற்றுள், நாணென்பது பெண்டிர்க்கு இயல்பாக உளதொரு தன்மை. மடமென்பது கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. அச்சமென்பது பெண்மையிற்றுன் காணப்படாததோர் பொருள் கண்டவிடத்து அஞ்சுவது. பயிர்ப்பென்பது பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை. இந்நான்மையும் புனலோடுவழிப் புற்சாய்ந்தாற்போல வேட்கையான் மீதூரப்பட்டுச் சாய்ந்து கிடக்கும்" என்று கூறியதையும் காணுதல்கூடும்.

1084. கண்டாருயி ருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்.

இதுவுமது.

(பரி.) இ-ள். பெண்டகைப் பேதைக்குக் கண்=பெண்டகைமையுடைய விப்பேதைக்கு உளவாய கண்கள்—கண்டார் உயிர் உண்ணும் தோற்



றத்தான் அமர்த்தன=தம்மைக் கண்டாருயிருண்ணுந்தோற்றத்துடனே கூடி அமர்த்திருந்தன. எ-று.

அமர்த்தல்=மாறுபடுதல். குணங்கட்கும் பேதைமைக்குமேலாது கொடியவாயிருந்தன வென்பதாம். (௪)

விளக்கம் :—மேல் தலைமகளது குறிப்பு நோக்கால் வருந்திய தலைமகன் மேற்கூறிய பெண் தகுதியையுடைய இந்த பேதைமையுடையாளுக்கு உண்டாகிய கண்கள் தம்மைப் பார்த்தால் உயிரினையே உண்ணும் பார்வையுடனே கூடி மாறுபட்டு இருந்தன என்று கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? நாணம் முதலிய நற்குணங்களுக்கும் பேதைமைத் தன்மைக்கும் பொருந்தாது பார்ப்பவர் உயிரையே உண்ணும் கொடுமையுடையனவாய் அக்கண்கள் இருந்தமையால் அக்கொடுமையை அநுபவிப்பவனாகிய தலைமகன் இவ்வாறு கூறுவானாயினன்

1085. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
ணோக்கமிம் மூன்று முடைத்து.

இதுவுமது.

(பரி.) இ-ள். கூற்றமோ=என்னை வருத்துதலுடைமையாற் கூற்றமோ,—கண்ணோ=என்மேலோடுதலுடைமையாற்கண்ணோ,—பிணையோ=இயல்பாக வெருவுதலுடைமையாற் பிணையோ, அறிகின்றிலேன்—மடவரல் நோக்கம் இம்மூன்றும் உடைத்து=இம்மடவரல் கண்களினோக்கம் இம்மூன்றன்றன்மையையு முடைத்தாயிரா நின்றது. எ-று.

இன்பமுந் துன்பமும் ஒருங்கு செய்யாநின்றதென்பதாம். தொழில்பற்றி வந்த ஐயவுவமம். (௫)

விளக்கம் .—இனி இவ்வித மெல்லாய கண்களால் இன்பமும் துன்பமும் ஓரே காலத்து அடைந்த தலைமகன் கண்களை ஐயமுறக் கூறினான் என்பது போதா 'என்னைத் துன்புறுத்தலால் எமன் தானோ, என்மேல் ஓடுதல் உடைமையால் கண் தானோ, இயல்பாக மருட்சியைக்கொள்ளுதலால் மான் தானோ, அறிவதற்கு இல்லை. ஏனெனின்? இத்தகைய யௌவனப் பருவம் வாய்ந்த இப்பெண்ணின் கண்களின் நோக்கமானது மேல் கூறிய மூன்றின் தன்மையையும் உடையதாய் உள்ளது' என்று கூறினானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் இன்பமும்

துன்பமும் ஆகிய இரண்டனையும் இக்கண்கள் ஒரு காலத்திலேயே செய்யவல்லன என்று கூறினதாயிற்று.

1086. கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

இதுவுமது.

(பரி.) இ-ள். கொடும் புருவம் கோடா மறைப்பின் = பிரியா நட்பாய கொடும்புருவங்கடாஞ் செப்பமுடையவாய் விலக்கினவாயின்,—இவள் கண் நடுங்கு அஞர் செய்யல = அவற்றைக்கடந்து இவள் கண்கள் எனக்கு நடுங்குந் துயரைச் செய்யமாட்டா எ-று.

நட்டாரைக் கழறுவார்க்குத் தாஞ்செம்மையுடையராதல் வேண்டலிற் 'கோடா' என்றும், செய்கின்ற அவற்றிற்கும் உறுகின்ற தனக்கும் இடை நின்று விலக்குங்காலுஞ் சிறிதிடைபெறின் அதுவழியாக வந்து அஞர்செய்யு மாகலின் 'மறைப்பின்' என்றுங் கூறினான். நடுங்கஞர் = நடுங்கற்கேது வாய வஞர். தாமியல்பாகக் கோடுதலுடைமையான் அவற்றை மிகுதிக்கண் மேற் சென்றிடிக்கமாட்டாவாயின வென்பதுபட நின்றமையின், மன் ஒழி யிசைக்கண் வந்தது. (சு)

விளக்கம்:— 'விட்டுப் பிரியாத நட்பினையுடைய இவளது வளைந்த புருவங்கள் நடுநிலையுடையனவாய் இவளது கண்கள் என்மீது செல்ல வொட்டாது விலக்குமாயின், அப்புருவங்களைக் கடந்து இவள் கண்கள் நான் அடைந்ததாகிய துன்பத்தினை எனக்குச் செய்யமாட்டா' என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் தம் நட்பினர்க்கு உறுதி கூறி நல்வழியில் நிறுத்த எண்ணியவர் தாம் முதலில் நடுநிலை இல்லாதவராய் இருப்பாராயின், அவர் தம் நட்பினர்க்கு உறுதி கூறும் வல்லமை யுடையராய் இாரென்றும். நடுநிலை யுடையரே

உறுதி கூறவல்லவராவாரென்றும், இவள் புருவங்கள் கோணாக நில்லாமல், வளைந்துள்ளனவாதலால், தம்மை மீறிச் செல்லுகின்ற கண்களுக்கு இடித்துப் புத்தி கூறும் தகுதியைப் பெறவில்லையென்றும், ஆதலால் இவள் கண்கள் எனக்குத் துன்பத்தைச் செய்கின்றன என்றும், புருவங்களின் சிறப்பையும் கண்களின் தகுதியையும் கூறியதாயிற்று.



1087. கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில்.

அவள்முலைகளினாய வருத்தங் கூறியது.

(பரி.) இ-ள். மாதர் படா முலைமேற்றுகில்=இம்மாதர் படாமுலைகளின் மேலிட்ட துகில்,—கடாக் களிற்றின்மேற் கட்படாம்=அவைகொல்லாமற் காத்தலின் கொல்வதாய மதக்களிற்றின்மேலிட்ட முகபடாத்தினையொக்கும்.

கண்ணை மறைத்தல்பற்றிக் 'கட்படாம்' என்றான். துகிலான் மறைத்தல் நாணுடை மகளிர்க் கியல்பாகலின், அத்துகிலூடே அவற்றின் வெம்மையும் பெருமையுங்கண்டு இத்துணையாற்றலுடையன இனி யென்றுஞ் சாய்வில வெனக் கருதிப் 'படாமுலை' என்றான். உவமை சிறிதுமறையாவழி உவை கொல்லுமென்பது தோன்ற நின்றது. (ஏ)

விளக்கம் :—' இப்பெண்ணின் சாய்தலில்லா முலைகளின்மேல் மூடிய வஸ்திரமானது அம்முலைகள் என்னைக் கொல்லாமல் என்னைக் காத்தலால், கொல்லும் குணத்தையே உடைய ஒரு மதயானையின் முகத்தை மூடிய முக படாம் என்னும் துணியையே ஒத்துள்ளது' என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. மேல், ஆறு திருக்குறள்களில் தான் கண்ட பெண்ணின் கண்களின் சிறப்பையும் அக்கண்களால் தான் அடைந்த துன்பத்தையும் எடுத்துக் கூறிய தலைமகன் இத்திருக்குறளில் அவளது முலைகளின் சிறப்பினை எடுத்துக் கூறுவான் அவை கண்டார்க்கு மிகுதியும் விருப்பத்தைத் தருவனவும்

பெருமையுடையனவும் ஆக இருக்கக்கண்டு இவ்வளவு தகுதியுடையனவாகிய முலைகள் எக்காலத்தும் சாய்வினை யடையாவென்றும், அவற்றை மூடியுள்ள மேல் போர்வை இல்லாவிடில் அவை கொன்றே விடும் என்றும் அறிவித்தற்குப் படாமுலை என்றும், யானையின் முக படா மென்றும் உவமையால் கூறி மகிழ்ந்து நின்றான் என்று கூறிய தாயிற்று.

1088. ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு.

நுதலினுய வருத்தங் கூறியது.

(பரி.) இ-ள். ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு=போர்க் களத்துவந்து நேராதபகைவரும் நேர்ந்தார் வாய்க்கேட் டஞ்சுதற்கேதுவாய



என்வலி—ஒண்ணுதற்கு உடைந்ததே=இம்மாதரதொள்ளிய நுதலொன்றற்குமே அழிந்துவிட்டது. எ-று.

மாதரென்பது அதிகாரத்தான் வந்தது. ஞாட்பினுளென்றதனாற் பகைவராதல் பெற்றாம். பீடென்ற பொதுமையான் மனவலியுங் காயவலியுங் கொள்க. ஓ வென்னும் வியப்பின்கட்குறிப்பு அவ்வலிகளது பெருமையும் நுதலது சிறுமையுந்தோன்றநின்றது.கழிந்ததற்கிரங்கலிற் றற்புகழ்தலன்றாயிற்று.

விளக்கம்:—'யுத்தகளத்து வந்து என்னிடத்துப் போர்செய்யாத பகைவரும், என்னிடம் வந்து போர்செய்து தோற்றுப் போனவர் வாய்ச் சொற்கேட்டுப் பயப்படக் கூடியதாகிய என் வலிமையானது இப்பெண்ணினது ஒளிதங்கிய நெற்றியொன்றினுக்கோ தோற்றுவிட்டது' என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேல் முலைகளின் பெருமையைக் கூறிய தலைவன் இத்திருக்குறளில் அவள் நெற்றியினது ஒளியும் அவ்வொளியால் தனக்கு உண்டாகிய துன்பத்தினையும்

உணர்ந்து போரில் சிறிதும் குறையாத தன்னுடைய மன வலிமையையும் தேக வலிமையையும் எண்ணி இவ்வித வல்லமையானது இவ்வளவு சிறியதாயிருக்கின்ற நெற்றி ஒன்றற்கோ தோற்று மயங்குகின்றது என்று மிகுதியும் இரங்கியவனாய் நெற்றியினால் தனக்குண்டாகிய துன்பத்தைக் கூறினானாயிற்று. இதனையே,

"கோம்பிக் கொதுங்கிமேயா மஞ்சை குஞ்சரங்கோ ளிழைக்கும்
பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கப்பணை முலைக்கே
தேம்பற் றுடியிடை மான்மடநோக்கி தில்லைச் சிவன்றா
ளாம்பொற் றடமலர் சூடுமென் னாற்ற லகற்றியதே"

என்னும் திருக்கோவையார் செய்யுளானும் அறிதல்கூடும்.

1089. பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

அணிநலத்தானாய வருத்தங் கூறியது.

(பரி.) இ-ள். பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு = புறத்து மான்பிணையொத்த மடநோக்கினையும் அகத்து நாணினையுமுடையளாய இவட்கு—ஏதில தந்து அணி எவன் = ஒற்றுமையுடைய இவ்வணிகளே யமைந்திருக்க வேற்றுமையுடைய வணிகளைப்படைத்தணிதல் என்ன பயனுடைத்து,



மடநோக்கு = வெருவுதலுடைய நோக்கு. இவட்குப் பாரமாதலும் எனக் கணங்காதலுங் கருதாமையின், அணிந்தார் அறிவிலரென்பதாம். (க)

விளக்கம்:—'தேகத்தின் வெளிப்புறத்தில் பெண்மானின் கண்களை யொத்த மருண்ட பார்வையும், தேகத்தின் உட்புறமாகிய மனத்தினிடத்தே நாணமும் உடையவளாய இப்பெண்ணிற்குத் தேகத்தோடேயே எக்காலத்தும் விட்டுப் பிரியாத ஒற்றுமையுடைய இவ்விரண்டு அணிகள்

மிகுதியும் பொருத்தமாக அமைந்திருக்கின்றன. அவைகளல்லாமல் இவள் தேகத்திற்கு அன்னியமாய் இருக்கக்கூடிய ஆபரணங்களைச்செய்து இவளை அலங்கரித்தல் என்ன பயனைத்தரும்?' என்று அவளது ஆபரணங்களால் உண்டாகிய அழகின் மிகுதியானது தன்னை வருத்தியமையைத் தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், அவளது கண்ணின் பார்வையானது தன்னை வருத்தியமையும், அவள் நாணமானது தான் அவளை அணைவதற்கு இடங்கொடாமல் நின்றமையும், அவளது இயற்கையழகோடு செயற்கையழகாகப் பல ஆபரணங்களையும் செய்து அவளுக்கு இட்டிருக்கும் நலத்தையும் பார்ப்பவனாகிய தான் மேலும் மேலும் துன்பப் படுவதைப்பற்றிக் கூறினானென்றதாயிற்று.

1090. உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

தலைமகள் குறிப்பறிதலுற்றான் சொல்லியது.

(பரி.) இ-ள். அடுநறா = அடப்படுநறா,—உண்டார்கண் அல்லது = தன்னை யுண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்வதல்லது,—காமம்போல் கண்டார் மகிழ்செய்தல் இன்று = காமம்போலக் கண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்தலுடைத்தன்று. எ-று.

அடுநறா—வெளிப்படை. காமமென்றது ஈண்டு அது நுகர்தற்கிடனாகியாளை. கண்டார்கணென்னு மேழாவது இறுதிக்கட்டொக்கது. மகிழ்செய்தற்கட் காமம் நறவினுஞ் சிறந்ததே யெனினும் இவள் குறிப்பாராய்ந் தறியாமையின் யானது பெற்றிலேனெனக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க, "அரிமயிர்த்திரண்முன்கை"* என்னும் புறப்பாட்டிற்குறிப்புபோல. (ம)

விளக்கம்:—'காய்ச்சிய கள்ளானது தன்னை யுண்டவர்களுக்கு மகிழ்வினை உண்டுபண்ணுவதே யல்லாமல் காமம் போலத் தன்னைக் கண்

* புறநானூறு, 11.

டவர்களுக்கும் மகிழ்ச்சியை உண்டுபண்ணுந் தகுதியுடையதன்று என்று தலைமகளது உள்ளக் குறிப்பினை அறிய எண்ணியவனாகிய தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவனானவன் தலைவியின் குறிப்பு இதுவென அறியவேண்டி உண்ட பிறகு மகிழ்ச்சியைத்தரும் கள்ளினைக் காட்டிலும் காம இன்பம் நுகர்தற்கு உரிய இருவர் ஒருவரை ஒருவர் கண்டவுடன் மகிழ்ச்சியைத் தரும் காம இன்பமானது, இப்போது என் எதிரில் நின்று தன் அழகால் என்னைத் துன்புறுத்தி நிற்கின்ற இவளுடைய குறிப்பை யான் அறிவதற்கு இல்லையாதலால், கண்டதாலாகிய மகிழ்ச்சியைத் தருவதற்கில்லை என்று குறிப்பினை அறியவேண்டிக் கூறினானாயிற்று.

---

## 110 அதிகாரம்.

---

## குறிப்பறிதல்.

(பரி.) அஃதாவது தலைமகன் தலைமகள் குறிப்பினையறிதலும், தோழி குறிப்பினையறிதலும், அவடான் அவ்விருவர்குறிப்பினையு மறிதலுமாம். தகையணங்குற்ற தலைமகன் றலைமகளைக்கூடுங்கால் இது வேண்டுமாகலின், தகையணங்குறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, மேல் அதிகாரத்தில் பத்தாவது திருக்குறளில் 'தலைமகளைக் காணப்பெற்றும் அவள் குறிப்பினை அறியாது வருந்துகின்றேன்' என்று கூறிய தலைமகன் இனி அத்தலைமகளது குறிப்பினை அறிதலும், அவளைவிட்டுப்பிரியாத தோழியினது குறிப்பினை அறிதலும்,

அத்தோழியும் தலைமகன், தலைமகள் ஆகிய அவ்விருவர் குறிப்பினையும் அறிதலும் ஆகும். மேல் தலைமகளது உருவத்தின் அழகால் வருந்திய தலைமகன் தலைமகளைத் தன் வயமாக்கித் தன்னைக் கூட வேண்டுகின்றானதலின், இக்குறிப்பறிதல் என்னும் அதிகாரம் தகையணங்குறுத்தல் என்னும் அதிகாரத்திற்குப் பின் வைக்கப்பட்டுள்ளது.



1091. இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

**தலைமகன்றலைமகளுளப்பாட்டுக்குறிப்பினை அவணோக்கினானறிந்தது.**

(பரி.) இ-ள். இவள் உண்கண் உள்ளது இருநோக்கு=இவளுடைய வுண்கணகத்ததாய நோக்கு இதுபொழுது என்மேலிரண்டு நோக்காயிற்று;— ஒரு நோக்கு நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து=அவற்றுள் ஒரு நோக்கு என்கணோய்செய்யுநோக்கு, ஏனையது அந்நோய்க்கு மருந்தாய நோக்கு. எ-று.

உண்கண்=மையுண்டகண். நோய்செய்யுநோக்கு=அவண்மனத்தின்ற காமக்குறிப்பினை வெளிப்படுக்கின்றநோக்கு. மருந்தாய நோக்கு=தன்கணி கழ்கின்ற அற்புநோக்கு. நோய்செய்யுநோக்கினைப் பொதுநோக்கென்பாருமுளர். அது நோய்செயிற் கைக்கிளையாவதல்லது அகமாகாமையறிக. இவ் வருத்தந்தீரும் வாயிலுமுண்டாயிற்றென்பதாம். (க)

விளக்கம்:—'இவளுடைய மையுண்ட கண்ணின் பார்வையானது இப்பொழுது என் மேல் இரண்டு பார்வையாய் உள்ளது. அவ்விரண்டு பார்வையுள் ஒரு பார்வையானது எனக்கு நோயினை உண்டு பண்ணும் பார்வையாயும், மற்றொன்று அந்நோயினை உண்டுபண்ணிய பார்வைக்கு மருந்தாகிய பார்வையாயும் உள்ளது' என்று தலைமகன் கூறியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைமகனானவன் தலைமகளுடைய மனத்தின் குறிப்பினை அவள் பார்வையால் அறிந்தானாகலால் அவள்

மனத்தில் காமக்குறிப்பினை வெளிப்படுத்துகின்ற பார்வையினைத் தனக்கு நோய் செய்யும் பார்வையாகவும், பின்னர்த் தன்னிடத்து அன்புடையவளாய்த் தனக்கு இசைய விரும்புவாள் போன்று பார்க்கின்ற பார்வையைத் தனக்குற்ற காமநோயினை நீக்கும் மருந்தாகவும் கொண்டானென்பதாயிற்று.

இதனை,

" அணியுமமிழ்து மென்னுவியு மாயவன் றில்லைச்சிந்தா
மணியும் பராசரியா மறைபோனடி வாழ்த்தலரிற்

---

"அரிவை நாட்ட மகத்துநிகழ் வேட்கை
தெரிய வுணர்த்துங் குறிப்பிற் றென்ப" என்னும் அகப்பொருள் விளக்கச் சூத்திரமும் இக்கருத்தினையே வலியுறுத்தும்.



பிணியு மதற்குமருந்தும் பிறழப்பிறழ மின்னும்
பணியும் புரைமருங்குற் பெருந்தோளி படைக்கண்களே "

என்னும் திருக்கோவையார் செய்யுளாலும் அறிதல் கூடும்.

1092. கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

இதுவுமது.

(பரி.) இ-ள். கண் களவுகொள்ளும் சிறுநோக்கம்=இவள் கண்கள் யான் காணாமல் என்மேனோக்குகின்ற அருகியநோக்கம்—காமத்தில் செம்பாகம் அன்று பெரிது=மெய்யுறுபுணர்ச்சியின் ஒத்த பாதியளவன்று, அதனினுமிகும். எ-று.

தானோக்கியவழி நாணியிறைஞ்சியும் நோக்காவழி உற்றுநோக்கியும்

வருதலாற் 'களவுகொள்ளும்' என்றும், அஃதனதாங்காலஞ் சிறிதாகலிற் 'சிறுநோக்கம்' என்றும், அஃது உளப்பாடுன்வழி நிகழ்வதாகலின் இனிப் புணர்தல் ஒருதலையென்பான் 'செம்பாகமன்று பெரிது' என்றுங் கூறினன்.

விளக்கம் :—'இவளுடைய கண்கள் யான் பாராவண்ணம் என் மேல் பார்க்கின்ற சுருங்கிய நோக்கமானது மெய்யுறு புணர்ச்சியினுல் அடைகின்ற இன்பத்தின் ஒரு பாதியளவாக இராமல் அதற்கு மேற் பட்டும் உள்ளது' என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறு கின்றது. அது என்னையோவெனின்? தான் அவளைப் பார்த்தவிடத்து அவள் தன்னைப் பாராது நாணத்தால் தலை கவிழ்ந்தும், தான் அவளைப் பாராவிடத்து அவள் தன்னை உற்றுப் பார்த்தும் வருகின்றுளாதலால், அவ்விதம் பார்ப்பது வெகு சிறுபொழுது ஆதலின் அவ்வித நோக்கத் தைச் சிறுநோக்கமென்று கூறியதுடன், அச்சிறு பார்வையானது புணர்தற்கு உரிய மனப்பாங்கினைத் தெரிவித்தலால் தான் அவளைப் புணர்வது நிச்சயமென்றும், அதனல் உண்டாகும் இன்பமானது புணர் வதாலுண்டாகும் இன்பத்தின் ஒரு பாதிக்கு மேற்பட்டதா யிருக்கின் றது என்றும் அவளது மனக்குறிப்பினைத் தலைவன் அறிந்து கூறிய தாயிற்று.



**1093. நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.**

நோக்கினுனாணிறனுமறிந்தது.

(பரி.) இ-ள். நோக்கினள்=யானோக்காவளவிற் முனென்னையன்போடு நோக்கினள்,—நோக்கி இறைஞ்சினள்=நோக்கி ஒன்றனையுட்கொண்டு நாணி இறைஞ்சினள்,—அஃது யாப்பினுள் அவள் அட்டிய நீர்—அக்குறிப்பு இருவேமிடையுந் தோன்றிய அற்புப்பயிர்வளர அதன்க ணவள்வார்த்த நீரா யிற்று. எ-று.

அஃதென்னுஞ் சுட்டுப்பெயர் அச்செய்கைக்கேதுவாய குறிப்பின்மே னின்றது. யாப்பினுள்ளதனை 'யாப்பு' என்றார். ஏகதேசவுருவகம்.' (௩)

விளக்கம்:—'யான் அவளைப் பாராதவிடத்து அவள் என்னை அன்போடு பார்த்தாள். அவ்விதம் பார்த்து ஒன்றினை மனத்தில் உட் கொண்டு நாணத்தினால் தலைவணங்கினாள். அவ்விதம் செய்த குறிப்பா னது எங்கள் இருவருக்கும் நடுவே உண்டாகிய அன்பு என்னும் பயிரா னது வளர அப்பயிரினிடத்தே அத்தலைவி வார்த்த தண்ணீராயிற்று' என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் தலைமகளுக்கு இயற்கையாக அமைந்த பார்வையையும், அப்பார்வையோடு இயல்பாக அமைந்த நாணத்தையும் எடுத்துக்கூறியதுபோல் அவள் குறிப் பும் தனக்கு இசைந்ததாக உள்ளது என்று அறிந்தானதலால், தங்கள் இருவருடைய அன்பும் இனி வளரும் தன்மையுடையதாகும் என்று தன்மீது அவளுக்கு உள்ள அன்பின் மிகுதியையும் எடுத்துக் கூறின னாயிற்று.

## 1094. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற் றானோக்கி மெல்ல நகும்.

நாணினாலுமகிழ்ச்சியினாலுமறிந்தது.

(பரி.) இ-ள். யான் நோக்குங் காலை நிலன் நோக்கும்=யான்றன்னை நோக்குங்காற் றானெதிர்நோக்காது இறைஞ்சி நிலத்தை நோக்காநிற்கும்,— நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும்=அஃதறிந்தியானோக்காக்காற் றானென்னைநோக்கித் தன்னுள்ளே மகிழாநிற்கும். எ-று.

மெல்ல=வெளிப்படாமல். மகிழ்ச்சியாற் புணர்தற்குறிப்பினிதுவிளங் கும். மெல்லநகு மென்பதற்கு முறுவலிக்குமென்றுரைப்பாரு முளர். (௪)

விளக்கம்:—'யான் அவளைப் பார்க்கு மிடத்து அவள் என்னை எதிர்முகமாகப் பாராது தலைவணங்கி நிலத்தைப் பார்த்த வண்ணமாக நிற்கின்றாள்; அவ்விதம் அவள் செய்வதை யான் அறிந்து அவள் தன்னை நான் பாராதபோது அவள் என்னைப் பார்த்து தனக்குள்ளேயே மகிழ்ச்சி யடைகின்றாள்' என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மேல் திருக்குறளில் அவளது பார்வையாலும், நாணத்தாலும் அன்பென்னும் பயிரை வளர்க்கின்றாள் என்று கூறிய தலைவன் இத்திருக்குறளால் நாணத்தோடு அவளிடத்துத் தோன்றும் மகிழ்ச்சியையும் அவள் சிரிப்பினாலறிந்து இனி இவளிடத்துப் புணர்தல் குறிப்பு உண்டாகின்றது என்று கூறினானாயிற்று.

1095. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

இதுவுமது.

(பரி.) இ-ன். குறிக்கொண்டு நோக்காமை அல்லால்=நேரே குறிக்கொண்டு நோக்காத்துணையல்லது—ஒருகண் சிறக்கணித்தாள் போல நகும் =ஒருகண்ணைச் சிறங்கணித்தாள்போல என்னை நோக்கிப் பின் றனதுள்ளே மகிழாநிற்கும். எ-று.

சிறக்கணித்தாளென்பது செய்யுள் விகாரம். சிறங்கணித்தல்=சுருங்குதல். அது தானும் வெளிப்பட நிகழாமையிற் போலவென்றான். நோக்கியென்பது சொல்லெச்சம். இனி யிவளை யெய்துதல் ஒருதலையென்பது குறிப்பெச்சம். (ரு)

விளக்கம்:—' இவன் என்னை நோக்கக்குறித்துப் பாராத தன்மையோடு இருக்கினும் ஒரு கண்ணினைச் சுருக்கிப் பார்ப்பதுபோல் என்

லைப் பார்த்த பிறகு தனக்குள்ளேயே மகிழ்ந்து நிற்கின்றாள் என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. மேல் திருக்குறளில் அவள் கொண்ட மகிழ்ச்சியினால் புணர்ச்சிக் குறிப்பினை அறிந்த தலைமகன் இத்திருக்குறளில் அவள் சுருங்கிய பார்வையுடன் தன்னைக்கண்டு மகிழ்ச்சி யடைவதை நோக்கியவுடன் இம்மகிழ்ச்சிக் குறிப்பினால் இனி இவளை நான் அடைவது நிச்சயமாயிற்று என்று கூறினானாயிற்று.



1096. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும்.

தோழிசேட்படுத்தவழி அவள்குறிப்பறிந்த தலைமகன்
தன்னுள்ளே சொல்லியது.

(பரி.) இ-ள். உறாதவர்போல் சொலினும் = புறத்து நொதுமலர் போலக் கடுஞ்சொற்சொன்னாராயினும்,—செறார் சொல் ஒல்லை உணரப் படும் = அகத்துச் செறுதலிலாதார்சொற் பிறபயத்தல் குறையுற்றாரால் கடிதினறியப்படும். எ-று.

கடுஞ்சொலென்பது இவ்விடங்காவன்மிகுதியுடைத்து வாற்பாலிரல்லீரென்றன் முதலாயின. செறாரெனவே, அருளுடைமை பெறப்பட்டது. தன் குறை முடிக்கக்கருதியே சேட்படுக்கின்றமை குறிப்பானறிந்து, உலகியன் மேலிட்டுக் கூறியவாறு. இது வருகின்ற பாட்டிற்கு மொக்கும். (சு)

விளக்கம்:—'பகையும் நட்புமில்லாத நொதுமலர் போலக் கடுமையாகிய சொற்களைச் சொன்னாராயினும் மனத்துப் பகை இல்லாதவர் சொற்கள் அக்கடுஞ் சொற்களுக்கு மாறுகிய பயனை உண்டுபண்ணுதல் குறைகொண்டு நின்றால் விரைவில் அறிந்து கொள்ளுதல் கூடும்'

என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவி தன்னை நோக்கவும் தான் அவள் குறிப்பை அறிந்து இனி இவளை அடைவது நிச்சயம் என்று மனத்துட் கொண்டு இருந்த தலைமகனைக் கண்ட தோழியானவள் தன் கடமையை முடிக்கவேண்டி 'நீவிர் யார்? இங்கு யாரும் வருதல் கூடாது; இவ்விடமோ மிகுந்த காவலோடு கூடியது; இனி நீர் இங்கு வராதிருக்கக் கடவீர்' என்பது முதலாக தலைவி தலைவராகிய இருவரது குறிப்பையும் அறிந்து கூறுகின்ற சொற்களைக் கேட்டு 'இத்தோழியானவள் நம்மிடத்து அருளுடையளாதலால் நம்முடைய குறையை முடிக்க எண்ணியே நம்மை இவ்வித கடுஞ் சொற்களால் அகற்றுகின்றாள். ஆயினும் அவள் வாயினின்றும் தோன்றுகின்ற கடுஞ் சொற்களின் பயனை நாம் இனி அடையாது அதற்கு மாறாகிய அருளின் பயனையே நாம் அடைவது நிச்சயம்' என்று தோழி தன்னை இடத்தைவிட்டு அகலும்படிக் கூறிய சொற்களால் 'இவள் கூறியது குறிப்பாகுமே யல்லாமல் உண்மையல்லை' என்று அவள் குறிப்பறிந்து தலைமகனானவன் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டானென்பதாயிற்று.

## குறிப்பறிதல் 23

**1097.** செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
உறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

இதுவுமது.

(பரி.) இ-ள். செறாச் சிறுசொல்லும்=பின்னினிதாய் முன்னின்னாதாய சொல்லும்—செற்றார்போல் நோக்கும்=அகத்துச் செறுஇருந்தே புறத்துச் செற்றார்போன்ற வெகுளிநோக்கும்—உறார்போன்று உற்றார் குறிப்பு=சொதுமலர்போன்று நட்பாயினர்க்கு ஒரு குறிப்புப்பற்றி வருவன. எ-று.

குறிப்பு—ஆகுபெயர். இவை உள்ளேயொரு பயன்குறித்துச் செய்கின்

டன இயல்பல்லவாகலான், இவற்றிற்கஞ்சவேண்டாவென்பதாம். (எ)

விளக்கம்:—'பின்னர் இனிமை யுடையதாய் முன்பு துன்பம் தருவதாகிய சொல்லும், மனத்துள் பகையில்லாதிருந்தே வெளியில் பகைகொண்டார் போன்ற கோபப்பார்வையும், பகையும் நட்புமில்லாத நொதுமலர்போல் காண்பித்து உள்ளே நட்பு கொண்டு உள்ளவர்களுக்கு ஏதோ ஓர்குறிப்பினால் உண்டாகி வருவனவாகும்' என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவன் தன்னைத் தோழி அகற்றுகின்ற காலத்து 'இவள் சொல்லுகின்ற கடுஞ்சொற்கள் இப்போது துன்பம் தருவதாக இருக்கினும் பின்னர் இன்பம் பயப்பனவாக இருப்பதாலும், மனத்துள் கோபியாமலே வெளியில் கோபிப்பாள் போன்று பார்க்கின்ற கோபப்பார்வையானது பகையும் நட்புமில்லாத நடுவாயுள்ளவர்கள் நட்புகொள்ளுவதற்கு உற்ற குறிப்பாயுள்ளதாலும், இவையெல்லாம மனத்திற்குள் ஏதோ ஒரு பயனைக் குறித்துச செய்யப்படுகின்றனவே அன்றி இயல்பாக உண்டாவனவன்று; ஆகவே இவற்றிற்கு அஞ்சவேண்டுவதில்லை' என்னும் குறிப்பினை அறிந்தானென்று கூறியதாயிற்று.

1098. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும்.

கண்ணைநோக்கி மகிழ்ந்த தலைமகளைக்கண்டு தலைமகன் கூறியது.

(பரி.) இ-ள். யான் நோக்கப் பசையினள் பைய நகும்=என்னையகற்றுகின்றசொற்காற்றுதியானிரக்துநோக்கியவழி அஃதறிந்து நெகிழ்ந்து உள்ளே மெல்ல நகாநின்றாள்,—அசை இயற்கு ஆண்டு ஓரேர் உண்டு=அதனால்



நுடங்கிய வியல்பினையுடையாட்கு அந்நகையின்கண்ணே தோன்றுகின்ற

தோர் நன்மைக் குறிப்புண்டு. எ-று.

ஏர் — ஆகுபெயர். அக்குறிப்பு இனிப்பழுதாகா தென்பதாம். (அ)

விளக்கம்:—'தோழியானவள் என்னை இடம்விட்டுச் செல்லும்படி அகற்றுகின்ற கடுஞ் சொற்களுக்கு யான் சகிக்கமுடியாது அவளைக் கெஞ்சிப் பார்த்தவிடத்து அப்பார்வையை அறிந்து மனமிளகி உள்ளுக் குள்ளேயே மெதுவாகச் சிரிக்கின்றாளாதலால் நடக்கிய இயல்பினை யுடைய தலைவியின் மெதுவாகிய சிரிப்பினிடத்தே காணப்படுவதாகிய ஒரு நன்மைக் குறிப்பு உள்ளது' என்று தன்னை நோக்கி மகிழ்ச்சி யடைந்த தலைமகளைப் பார்த்து தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மேல் திருக்குறளில் தோழியினுடைய கடுஞ் சொற்களுக்கும், கோபப்பார்வைக்கும் பயப்பட வேண்டுவதில்லை என்று தனக்குள்ளே தீர்மானித்து நின்ற தலைவன் இத்திருக்குறளில் தோழி யின் சொற்களுக்கு வருந்திக் கெஞ்சிய பார்வையுடன் நிற்கின்ற தன்னைக் கண்டு தலைமகள் மகிழ்வுற்றனள் என்று அறிந்தானாதலால், இனிப் புணர் தல் தடைப்படாது என்று கூறினானயிற்று.

## 1099. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
## காதலார் கண்ணே யுள.

தோழி மதியுடம்படுவாடன்னுள்ளே சொல்லியது.

(பரி.) இ-ள். ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்=முன்னறி யாதார்போல ஒருவரையொருவர் பொதுநோக்கத்தானோக்குதல்—காதலார் கண்ணே உள=இக்காதலையுடையார்கண்ணே யுளவாகாநின்றன. எ-று.

பொதுநோக்கு=யாவர்மாட்டும் ஒருதன்மைத்தாய நோக்கு. நோக்குதற் றொழில், ஒன்றேயாயினும் இருவர்கண்ணு நிகழ்தலானும், ஒருவர்கட்டானுங் குறிப்பு வேறுபாட்டாற் பலவாமாகலானும், 'உள' எனப் பன்மையாற் கூற ப் பட்டது. இருவரும் மதுமறைந்துண்டோர் மகிழ்ச்சிபோல உள்ளத்துள்ளே மகிழ்தலின் அதுபற்றிக் 'காதலார்' என்றும், அது புறத்து வெளிப்படாமை

யின் 'எதிலார்போல' என்றுங் கூறினன். (க)

விளக்கம்:—'இக்காதலை யுடையார் இருவரும் முன்னர் ஒருவரை யொருவர், அறியாதார்போல் பார்க்கின்ற பார்வையை யுடையவர்களாய் உள்ளனர்' என்று தோழி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்



றது. அதாவது அவ்விருவர் குறிப்பிற்கும் உடன்படுவாளாகிய தோழி அவ்விருவர் பார்வையையும் பார்த்தகாலத்து 'இவ்விருவரும் கள்ளினை மறைவாக உண்டு அதனல் உண்டாகிய மகிழ்ச்சியையுடையவர்கள்போல மனத்துள்ளே மகிழ்ச்சியையடைகின்ற காதலாக இருந்தும், அம்மகிழ்ச்சி வெளிப்படாது ஒருவரை யொருவர் பொது நோக்கு என்னும் யாவரையும் பார்க்கும் பார்வையுடையவராய் நடித்துக் காட்டுகின்றனர். ஆதலால் இவ்விருவர் கருத்திற்கும் நான் உடன்பட வேண்டியவளாக இருக்கின்றேன்' என்று தலைமகன் தலைமகள் ஆகிய இருவருடைய குறிப்பினையும் அறிந்து தனக்குள்ளேயே சொல்லியதாயிற்று.

1100. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில. [சொற்க

இருவுமது.

(பரி.) இ-ள். கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின்=காமத்திற்குரிய விருவருள் ஒருவர்கண்களோடு ஒருவர்கண்கள் நோக்காலொக்குமாயின்,—வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல=அவர் வாய்மைதோன்றச் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒருபயனு முடையவல்ல. எ-று.

நோக்காலொத்தல்=காதனோக்கினவாதல். வாய்ச்சொற்கள்=மனத்தின்கணின்றி வாயளவிற் றோன்றுகின்ற சொற்கள். இருவர்சொல்லுங்கேட்டு உலகியன்மேல் வைத்துக் கூறியவாறு. இருவர்சொல்லுமாவன=அவன் புனங்காவன்மேலும் அவன் வேட்டத்தின்மேலுஞ் சொல்லுவன. பயனில்சொற்களாகவின், இவை கொள்ளப்படாவென்பதாம். இவை புணர்தனிமித்தம். (ம)

விளக்கம் :—"காம இன்பம் அனுபவித்தற்கு உரிய இருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் பார்வையால் ஒத்திருக்குமாயின், அவ்விதம் ஒத்த பார்வையையுடைய அக்காதலர் தாங்கள் ஒருவரை யொருவர் அறியார்போல் பிறர்நம்பும்படிச் சொல்லுகின்ற சொற்கள் ஒரு பயனையும் உடையன அல்ல" என்று தோழி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மேல் திருக்குறளில் காதல் நோக்கு உடையவரா யிருந்தும், யாவரையும் பார்க்கும் பொது நோக்கங்கொண்டு நடிக்கின்று ராயினும் அவ்விருவரும் காதலரேயாவர் என்று தீர்மானித்த தோழியான வள் பின்னர் ஒருவருக்கொருவர் உற்றுப்பார்க்கின்ற பார்வையைக் கண் டாளாதலால் இவர்கள் இருவரும் ஒருவரையொருவர் விரும்புகின்ற காத



லராகவே இருக்கின்றனர் இவரை நாம்வினவும் காலத்துத்தலைவியானவள் 'நான் தினைப்புனத்தைக் காத்து நிற்கின்றேன். அவன் யாரோ அறியே லேன்' என்று சொல்லுகின்ற சொற்களும், அவன் 'மான் ஒன்றைத் தேடி வேட்டையின் பொருட்டு இங்கு வந்தேன். அம்மானைக் கண்ட துண்டோ' என்ற சொற்களும் பயன்படாத சொற்களாதலால், அவற்றை நான் மேற்கொண்டு நிற்பதில் பயனில்லை. இனி, இவ்விருவரும் தம் இச்சையின் வண்ணம் இருத்தல்கூடும் என்று புணர்தல் நிமித்தம் கூறித் தோழி அவ்விருவருக்கும் உடன்படுவாளாயினள் என்ப தாயிற்று. இவ்வாறு தோழி கூறுவதை,

"மெய்யே யிவற்கில்லை வேட்டையின் மேன்மனம் மீட்டிவளும்
பொய்யே புனத்தினைக் காப்பதிறை புலியூரனையாள்
மையேர் குவளைக்கண் வண்டினம்வாழுஞ் செந்தாமரைவா
யெய்யே மெனினுக் குடைந்தின்பத்தே னுண்டெழிதருமே"

என்னும் திருக்கோவையார் செய்யுளாலும் அறிதல் கூடும்.

## 111. அதிகாரம்.

---

## புணர்ச்சிமகிழ்தல்.

(பரி.) அஃதாவது அங்ஙனங்குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப் புணர்ச்சியினை மகிழ்ந்துகூறல்.* அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம் :—அதாவது, தலைமகன் தலைவியின் குறிப்பினையும் தோழியின் குறிப்பினையும் அறிந்தானாதலால், இனி இவ்விதம் 'வடகடலிருந்த நுகத்தடியின் துளைவழியே தென் கடலிருந்த கழி ஒன்று சென்று நுழைந்ததுபோல், எவ்விடத்தோ இருந்த என்னையும் இவளையும் ஒன்று சேரும்படிச் செய்து புணர்தல் குறிப்பினை உண்டுபண்ணிய ஊழ் ஒன்றே சிறந்ததோர் தெய்வமாகும். ஆதலால், அத்தெய்வமே இவளோடு யான் புணர்வதற்குத் துணையாகும்' என்று எண்ணிப் புணர்ந்தான். புணர்ந்த தலைமகனவன் தான்புணர்ந்த புணர்ச்சியையும் உண்டா

---

*அகப்பொருள் விளக்கத்துள்ள "கலந்துழி மகிழ்தலு நலம்பாராட்டலு, மேற்புற வணிதலுமென்னு மிம்மூன்றும், போற்றிய தெய்வப் புணர்ச்சியின் விரியே" என்னும் சூத்திரமும் இங்கு உணர்தற்பாலது.



கிய மகிழ்ச்சியையும் கூறுவது இயல்பாதலாலும், குறிப்பறிந்த பின்னரே புணர்ச்சி நிகழ்ந்து அதனை மகிழ்கின்றான் ஆதலாலும் புணர்ச்சிமகிழ்தல் என்னும் இவ்வதிகாரத்தைக் குறிப்பறிதல் என்னும் அதிகாரத்திற்குப் பின் வைத்தனர்.

1101. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.

இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட் சொல்லியது.

(பரி.) இ-ள். கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் = கண்ணாற்கண்டும் செவியாற்கேட்டும் நாவாலுண்டும் மூக்கான்மோந்தும் மெய்யாற்றீண்டியும் அனுபவிக்கப்படு மைம்புலனும்—ஒண்டொடி கண்ணே உள = இவ்வொள்ளிய தொடியையுடையாள்கண்ணே யுளவாயின எ-று.

உம்மை—முற்றும்மை. தேற்றேகாரம் வேறிடத்தின்மை விளக்கிநின்றது. வேறுவேறுகாலங்களில் வேறுவேறு பொருள்களானனுபவிக்கப்படுவன ஒரு காலத்து இவள்கண்ணே யனுபவிக்கப்பட்டனவென்பதாம். வடநூலார் இடக்கர்ப்பொருளவாகச் சொல்லிய புணர்ச்சித்தொழில்களும் ஈண்டடக்கிக் கூறப்பட்டன. (க)

விளக்கம் :—"கண்ணால் பார்த்தும், காதால் கேட்டும், நாவினால் உண்டும், மூக்கினால் மோந்தும், தேகத்தினால் தீண்டியும் அனுபவிப்பதற்கு வேண்டிய ஐந்து புலன்களும் இவ்வொளிதங்கிய வளையலை அணிந்தாள் இடத்துப் பொருந்தி இருக்கின்றன" என்று தலைமகன் ஊழ்வலியால் நேர்ந்த புணர்ச்சிக்குப் பிறகு கூறினானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அவளிடத்தே உண்டாகிய இன்பத்தின் மிகுதியை எடுத்துக் காட்டுவான் வேண்டி "வேறுவேறு காலங்களில் வேறுவேறு பொருள்களால் அனுபவிக்கக் கூடியனவாகிய இன்பங்களையெல்லாம் இவளிடத்து ஒரு காலத்திலேயே அடைந்தானாதலால், தான் ஐம்புலன்களும் ஆர அனுபவித்த புணர்ச்சித் தொழில்களை அடக்கிக்கூறினான்" என்பதாயிற்று. அன்றியும், பரிமேலழகர் கூறும் வண்ணம் வடநூலார் கூறும் அறுபத்துநான்கு விதமாகிய புணர்ச்சித்

* இத்திருக்குறள் சேரமான் பெருமாள் நாயனார் திருக்கைலாய ஞானவுலாவில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.



தொழில்களுள் இடக்கர்ப் பொருளவாகச் சொல்லுகின்ற புணர்ச்சித் தொழில்கள் இரண்டினையும் இவன் கூறினான் என்பது ஆயிற்று. ஆதலால், தான் இவளிடத்துக் கண்ட இன்பம் வேறு எவ்விடத்தும் காண்ப

தற்கு இல்லையென்று வியந்து கூறியதுமாம்.

1102. பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.

(பரி.) இ - ள். பிணிக்கு மருந்து பிற=வாத முதலிய பிணிகட்கு மருந்தாவன அவற்றிற்கு நிதானமாயினவன்றி மாறாயவியல்பினையுடையன வாம்;—அணியிழை தன் நோய்க்கு மருந்து தானே=அவ்வாறன்றி இவ் வணியிழைபினையுடையாள் தன்னினாய பிணிக்கு மருந்தும் தானேயாயி னாள். எ - று.

இயற்கைபுணர்ச்சியை நினைந்து முன்வருந்தினாகலின், 'தன்னோய்' என்றும், அவ்வருத்தந் தமியாளை யிடத்தெதிர்ப்பட்டுத் தீர்ந்தாகலின் 'தானே மருந்து' என்றுங் கூறினான். இப்பிணியும் எளியவாயவற்றாற் றீரப் பெற்றிலமென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக் கண் வந்தது. (உ)

விளக்கம்:—"வாதம், பித்தம், சிலேத்துமம் ஆகிய நோய்களுக்கு மருந்தாக இருப்பன அந்நோய்களுக்கு ஒற்றுமை யுடையனவா யில்லா மல் மாறுபட்ட இயல்பினையுடையனவா யுள்ளன. ஆனால் இவ்வழகிய ஆபரணத்தை யுடையவளோ அவ்விதம் அல்லாமல் தன்னால் உண்டாகிய நோய்க்குத் தானே மருந்துமாக இருக்கின்றாள்" என்று புணர்ச்சி மகிழ் தலில் தலைமகன் கூறினானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மேல் திருக்குறளில் தனக்கு நேர்ந்த இயற்கைப் புணர்ச்சியின் கடைசி யில் தனக்குள்ள மகிழ்ச்சியைச் சொல்லிய தலைமகன் இத்திருக்குறளில் குறித்த இடத்திலேயே தலைவியைச் சந்தித்துப் புணர்ச்சியை மகிழ்ந்தா னாதலால் இதற்கு முன்னரெல்லாம் புணர்ச்சியை நினைந்து வருந்திய வருத்தத்தைத் தலைவியால் உண்டாகிய நோயென்றும், இப்போது குறித்த இடத்தில் அவளைக் கண்டு புணர்ந்து மகிழ்தலால் அவ் வருத்த

மென்னும் நோயினைத் தீர்த்துக் கொள்வதற்கு அவளே மருந்துமாயி னாள் என்றும் கூறினையிற்று. அதுவன்றியும் ஏனைய நோய் களைத் தீர்க்கும் வேறுபட்ட மருந்துகள் போல் அல்லாது இவளால்



உண்டாகிய நோய்க்கு இவளே மருந்தாய் நின்றதால் தீர்ந்ததென்றும் அவ்வாறு அல்லாது ஏனைய மாதர்களால் தீர்த்துக்கொள்ளுதல் ஆகா தென்றும், இவளால் உண்டாகிய காம நோயினைத் தணிப்பதற்கு இவள் ஒருத்திக்கே முடியுமென்றும் தன் தலைவியினிடத்தே காணப்பட்ட புணர்ச்சி யின்பத்தினை மகிழ்ந்து கூறியதாயிற்று.

1103. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு.

நீரதிசயவிஃபத்திற்தரியதீ இச்சிற்றின்பத்திற்கின்னயாதல் தகாதென்ற பாங்கற்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். தாம் வீழ்வார் மென்றோட்டுயிலின் இனிதுகொல் = ஐம்புலன்களையு நுகர்வார்க்குத் தாம் விரும்புமகளிர் மெல்லியதோளின் கட்டுயிலும் துயில்போல வருத்தாமலெய்தலாமோ—தாமரைக்கண்ணான் உலகு = அவற்றைத் துறந்த தவயோகிகளெய்துஞ் செங்கண்மாலுலகம், எ-று.

ஐம்புலன்களையு நுகர்வாரென்னும்பெயர் அவாய் நிலையான் வந்தது. இப்பெற்றித்தாய துயிலைவிட்டுத் தவயோகங்களான் வருந்தவேண்டுதலின், எம்மனோர்க்காகாதென்னுங் கருத்தால் 'இனிதுகொல்' என்றான். இந்திர னுலகென்றுரைப்பாரு முளர்: தாமரைக்கண்ணானென்பது அவனுக்குப் பெயரன்மையின், அஃதுரையன்மை யறிக. (௩)

விளக்கம் :—"ஐம்புலன்களாலும் அனுபவிக்கவேண்டிய இன்பங் களை அடைபவர் தம்மால் விரும்பப்படும் பெண்களின் மென்மை யாகிய தோளினிடத்துத்துயின்று அத்துயிலால் அடையும் இன்பத்தைப் போல அவ்வைம்புலனால் வரும் இன்பத்தைத் துறந்த யோகிகள் அடை யும் செங்கண்மால் உலகம், வருத்தாமல் அடைதல்கூடுமோ" என்று தலை

வன் வினவியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவனை வன் தனக்குக்கிடைத்த புணர்ச்சி இன்பத்தை மகிழ்ந்து பேசக்கேட்ட பாங்கனானவன் 'நிரதிசய இன்பமாகிய பேரின்பத்தினை அடைவதற்கு உரியவனாக உள்ள நீ இவ்விதம் மகளிர்காமத்தை விழைந்து மகிழ்வெய்தல் கூடுமோ?' என்று வினவினனாதலால், அதுகேட்ட தலைவன் 'நீ சொல்லிய பேரின்பமானது தவங்கிடந்து அத்தவபோகங்களால் வருந்தி யடையும் இன்பம் ஒன்றாகும். அவ்வின்பமும் ஐம்புலன்களாலும் ஆர உண்டு தம் மால் விரும்பப்பட்ட பெண்களது தோளினிடத்தே தூங்கும் தூக்கத்திற்



குச் சமானமாகுமோ?' என்றும், 'சமானமாகாவிடினும் வருந்தாமல் அடைதல் கூடுமோ?' என்றும் புணர்ச்சியால் தனக்குக் கிடைத்த இன்பத்தினையே பேரின்பமென்று மகிழ்ந்து கூறினான் ஆயிற்று.

1104. நீங்கிற் றெறூஉங் குறுகுங்கால் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

பாங்கற்கூட்டத்திறுதிக்கட் சொல்லியது.

(பரி.) இ-ள். நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும் தீ = தன்னையகன்றுழிச் சுடாநிற்கும், அணுகுழிக் குளிராநிற்கும் இப்பெற்றித்தாய தீயை — இவள் யாண்டுப் பெற்றாள் = என்கட்டருதற்கு இவளெவ்வுலகத்துப் பெற்றாள்! எ-று.

கூடாமுன் றன்புறுதலின் 'நீங்கிற்றெறூஉம்' என்றும், கூடியபின் னின்புறுதலிற் 'குறுகுங்காற்றண்ணென்னும்' என்றும், இப்பெற்றியதோர் தீ உலகத்தில்லையாமாகலின 'யாண்டுப்பெற்றாள்' என்றும் கூறினான்: தன காமத்தீத்தன்னையே அவட்டாளாகக் கூறினான், அவளான் அது வெளிப் படுதலின். (௪)

விளக்கம்:—"தன்னைவிட்டு அகன்றகாலத்தில் சுடுவதும், தன்னை நெருங்கிய காலத்துக் குளிர்ந்து நிற்பதும் ஆகிய தன்மையுடைய தீயினை

எனக்குத்தருவதற்கு இவள் எவ்வுலகத்தில் பெற்றனள்?" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பாங்கனால் தலைவியைப்பெற்றுக் கூடிமுயங்கி முடிந்தபிறகு தலைவனானவன் அவளைவிட்டுப் பிரிகின்ற துன்பத்தினையும் அவளோடு சேருகின்ற காலத்திலுண்டாகின்ற இன்பத்தினையும் உவமை வாயிலாக எடுத்துக்காட்ட வேண்டி, அவளைவிட்டு அகல்கின்ற காலத்து அடைகின்ற வருத்தம் தீச்சுடுகின்றது போல் சுடுகின்றதென்றும் அவளோடு கூடுகின்ற கூட்டத்தால் உண்டாகின்ற இன்பம் சுட்டதீ குளிர்ந்து நிற்பதுபோல் உள்ளது என்றும், உலகத்துத் தீயானது தன்னை நெருங்கியவரைச் சுட்டும், அகன்றவரைக் குளிர்வித்தும் நிற்க, இவளிடத்து நின்ற தீ அதற்கு மாறுபட்டதாக உள்ளது ஆதலால் அவ்வித தீயினை இவ்வுலகத்து நான் காண்பதற்கு இல்லை; அதனை எவ்வுலகத்திலிருந்து பெற்றனளோ அறியேன் என்று கூறினான். காமத்தீயானது தன்னிடத்தே இருப்பதாயினும் அவளால் வெளிப்படுதலால் அதை அவள் தந்ததாகக் கூறியதாயிற்று.



1105. வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்

தோழியிற் கூட்டத்திறுதிக்கட் சொல்லியது.

(பரி.) இ-ள். வேட்டபொழுதின் அவையவை போலுமே=மிகவினிய வாய பொருள்களைப் பெறுது அவற்றின்மேல் விருப்பஞ்சேர்ந்தபொழுதின் கண் அவையவை தாமே வந்தின்பஞ்செய்யுமாறுபோல இன்பஞ்செய்யும்,— தோட்டார் கதுப்பினாள் தோள்=எப்பொழுதும் பெற்றுப்புணரினும், பூவினை யணிந்த தழைந்த கூந்தலினையுடையாடோள்கள். எ-று.

தோடு—ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டத்துக்கண் முன்னரே நிகழ்ந்திருக்கப் பின்னரும் புதியவாய் நெஞ்சம் பிணித்தலின், அவ்வாராமைபற்றி இவ்வாறுகூறினான். தொழிலுவமம். (ரு)

விளக்கம்:—மிக இனிமையுடைய பொருள்களை அடைவதற்கு இல்லாது அப்பொருள்களின் மேல் விருப்பம் மிகுந்தவிடத்து அப்பொருள்கள் தாமே வலிய வந்து இன்பம் செய்வதுபோல இன்பம் செய்கின்றன எப்பொழுதும் அடையப்பெற்று புணரக்காலும் பூவினை அணிந்ததும் தழைந்ததும் ஆகிய கூந்தலினையுடைய இப்பெண்ணின் தோள்கள் என்று தலைவன்கூறினனென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவனனவன் தோழியின் முயற்சியால் தலைவியைக் கூடி இன்ப மடைந்த பிறகு தனக்குத்தானே அவள் தோள்களிடத்து அடைந்த இன்பத்தினை மகிழ்ந்து கூறுபவன், எவனேனும் ஒருவன் ஒருபொருளை அடைய விரும்புவானாயின் விரும்பியபடி கிடைக்கப்பெறாது அப்பொருளினிடத்தே இச்சை மிகுந்து வருந்துகின்ற காலத்து அப்பொருளை விரும்புகின்ற அவன் முயலாமலே தானேவந்து அவன் வருத்தத்தைப் போக்கி இன்பத்தைச் செய்யின் எவ்விதம் இருக்குமோ அவ்விதம் இயற்கைப்புணர்ச்சி முதலாகச் சொல்லப்பட்ட புணர்ச்சிகள் பல இடங்களில் நிகழ்ந்து இருக்கினும் அதற்குப் பின்னரும் புதிய பொருள் காணுமாறு போன்று அவளது தோள்கள் மகிழ்ச்சியைத் தருவதுடன் அவள் இன்பத்தில் நெஞ்சம் கட்டுப்படுதலால் அவ்வாற்றுமையை நோக்கி இவ்வாறு கூறினனாயிற்று.

1106. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்.

இதுவுமது.

(பரி.) இ-ள். உயிர் உறுதோறு தளிர்ப்பத் தீண்டலால்=தன்னைப்பெ



றுது வாடிய என்னுயிர் பெற்றுறுந்தோறுந் தளிர்க்கும்வகை தீண்டுதலான்,— பேதைக்குத் தோள் அமிழ்தின் இயன்றன=இப்பேதைக்குத் தோள்கள் தீண்டப்படுவதோ ரமிழ்தினாற் செய்யப்பட்டன. எ-று.

ஏதுவாகலாற் றீண்டல் அமிழ்திற்குமெய்திற்று. வாடியவுயிரைத் தளிர்ப்பித்தல்பற்றி, அவை 'அமிழ்தினியன்றன' என்றான். தளிர்த்தல்=இன்பத் தாற் றழைத்தல். (௬)

விளக்கம்:—"தன்னை அடையாது வாடி நின்ற என் உயிரானது இவளை அடைந்து முயங்குங் காலமெல்லாம் வாடிய உயிர் களிக்கும் விதம் தீண்டுவதால் இப்பேதைக்கு உள்ள தோள்களானவை தீண்டப் படுவதால் நோய் தீர்க்கும் ஓர் அமிழ்தத்தால் செய்யப்பட்டுள்ளன" என்று கூறினன் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவனானவன் தலைவியைப் பெறுதகாலத்துக் காமத்துன்பமாகிய தீயினால் கொளுத்தப்பட்ட மரம்போல் உயிர்வாடி நின்றான் என்றும், அவளை அடைந்து அவள் தோள்களில் இறுக முயங்குந்தோறும் முயங்குந்தோறும் வாடியமரம் தளிர்ப்பதுபோல் உயிரானது காம இன்பத்தால் தழைத்தல் பெற்றானென்றும் ஆதலால் அவள் தோள்கள் உண்ணுகின்ற அமிழ்தத்தால் செய்ததல்ல, தொடுதலால் நோய்தீர்க்கும் அமிழ்தத்தால் செய்யப்பட்டுள்ளன என்றும், உண்டு இறவாதிருக்கும் அமிழ்தத்தைக் காட்டிலும்தொட்டு இறவாதிருக்கும் இத்தோள்களே சிறந்தன என்றும் மேல் திருக்குறளில் கூறியதுபோல் தோள்களையே வியந்து கூறினனாயிற்று.

1107. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு.

இவளை நீ வரைந்துகொண்டு உலகோர் தம்மில்லிருந்து
தமது பாத்துண்ணு மில்லறத்தோடு படல்வேண்டுமென்ற
தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். அம் மா அரிவை முயக்கு=அழகிய மாமைநிறத்தையுடைய அரிவையது முயக்கம்—தம்மில் இருந்து தமது பாத்து உண்டற்று= இன்பம் பயத்தற்கட் டமக்குரிய வில்லின்கணிருந்து உலகோர் தம் தாளான் வந்த பொருளைத் தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்கட்குப் பகுத்துத் தன் கூற்றை யுண்டாற்போலும். எ - று.

தொழிலுவமம். இல்லறஞ்செய்தாரெய்துந் துறக்கத்தின்பம் எனக் கிப்புணர்ச்சியே தருமென வரைவுடன்படான் கூறியவாறாயிற்று. (எ)

விளக்கம்:—அழகிய மாமை நிறத்தினையுடைய இப்பெண்ணினது முயக்கமானது இன்பம் அடைவதற்கு உரிய இல்லறத்திலிருந்து உலகத்தவர் தம்முயற்சியால் கொண்ட பொருளைத் தென்புலத்தார் தெய்வம், விருந்தினர், சுற்றத்தவர் ஆகிய இவர்களுக்குப் பங்கிட்டுக்கொடுத்துப் பிறகு தங்களுக்கென்று வந்த பகுதியினை உண்டதுபோல்ஆகும்'' என்று கூறினனென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, களவு ஒழுக்கத்தால் புணர்ந்துவந்த தலைமகனை நோக்கித் தோழியானவள் "நீ இவ்விதம் களவு ஒழுக்கத்தால் இவளிடத்து இன்பம் அனுபவித்து வருதல் தக்கது அன்று. இவளை யாவரும் அறியும்படி நீ மணந்து கொண்டு உலகத்துள்ள ஏனையோர் எவ்விதம் இல்லறத்தை நடத்தி இம்மைப் பயனாகிய புகழையும், மறுமைப் பயனாகிய துறக்க இன்பத்தையும் அடைகின்றார்களோ அவ்விதம் அடைதல் வேண்டும் என்னலும், கேட்ட தலைவனானவன் " ஓ! தோழியே! இல்லறத்திலிருந்து விதித்தன செய்து, விலக்கியன ஒழிந்து உலகத்தார் அடையும் இம்மை மறுமையாகிய இரண்டு இன்பங்களையும் இவளிடத்து உண்டாகும் மெய்யுறு புணர்ச்சியே எனக்குத் தருதலால் எனக்கு இக்களவொழுக்கமே போதும்; மணந்து கொண்டு இல்லறம் நடத்த வேண்டுவதில்லை'' என்று கூறினனென்பதாயிற்று.

1108. வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

ஒத்தவன்புடைய நமக்கு ஒருபொழுதும் விடாத முயக்கமே இனியதென வரைவுகடாய தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். நீ சொல்லுகின்றதொக்கும்,— வளி இடை போழப்படா முயக்கு = ஒருபொழுது நெகிழாமையிற் காற்றுவிடையறுக்கப்படாத முயக்கம்—வீழும் இருவர்க்கு இனிதே = ஒருவரையொருவர் விழைவாரிருவர்க்குமினிதே. எ-று.

முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஈண்டு இருவரில்லை, இன்மையான் இஃதொவ்வாதென்பது கருத்து. களவிற்புணர்ச்சியை மகிழ்ந்து வரைவுடன்படான் கூறியவாறு. (௮)

விளக்கம் :—"நீ சொல்லுகின்றது பொருந்தும், ஒரு காலத்தும் ஒருவர் உடம்பைவிட்டு ஒருவர் உடம்பு பிரியாமையால் காற்றினும்





நடுவில் செல்லக்கூடாத மெய்யுறு புணர்ச்சி ஒருவரை யொருவர் விரும்பிப் புணரும் தலைவன் தலைவி இருவர்க்கும் இனிமையுடையதாம்" என்று தலைவன் கூறினானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேல் திருக்குறளில் களவினால் புணரும் புணர்ச்சியே துறக்க இன்பத்தினும் மிகுந்தது என்று மகிழ்ந்து கூறிய தலைவனை நோக்கித் தோழியானவள் "நீ சொல்லியபடி மெய்யுறு புணர்ச்சியே சிறந்ததாகட்டும். ஆயினும், அப்புணர்ச்சியினைக் களவொழுக்கத்தால் புணர்வதாயின் விடாது செய்வதற்கு இல்லை ஆதலால் ஒருவரை யொருவர் விட்டுப் பிரியாது இருப்பதற்குச் சிறந்ததாகாது" என்று கூறவும், தலைவனவன் "அன்புடைய தலைவன் அன்புடைய தலைவி என்று இருவராக இருந்து புணர்வதானால் பிரிந்து நிற்பது தகுதியாகாது. ஒருவரோடொருவர் பொருந்தி நிற்பது தகுதியாகும் என்று சொல்வது பொருந்தும். ஆயினும், இவ்விடத்தோ இருவரென்பது இல்லாது ஒருயிர்போலிருக்கின்றோம். ஆதலால், நாங்கள் பிரிந்து நிற்கின்றோம் என்று சொல்வது பொருந்தாது என்று களவிற் புணர்ச்சியையே மகிழ்ந்து மணந்து கொள்ள உடன்படாத தலைவன் கூறினானென்பதாயிற்று.

1109. ஊடலுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

காதல்வேண்டாமையின் இடையறவில்லாத கூட்டமே
இன்பப்பயனுடைத்தென வரைவுகடாவியாட்குச்
சொல்லியது.

(பரி.) இ-ள். ஊடல் உணர்தல் புணர்தல் இவை=புணர்ச்சியினிதாதற்பொருட்டு வேண்டுவதாய வூடலும் அதனை யளவறிந்து நீங்குதலும்

அதன்பினிகழ்வதாய வப்புணர்ச்சிதானுமென விவையன்றே—காமம் கூடியார் பெற்ற பயன் = வரைந்துகொண்டு காமத்தை யிடைவிடாதெய்தியவர் பெற்ற பயன்கள். எ-று.

ஆடவர்க்குப் பிரிவென்பதொன் றுளதாதன்மேலும் அதுதான் பரத்தையர் மாட்டாதலும் அதனையறிந்து மகளிரூடிநிற்றலும் அவ்வூடலைத் தவறு செய்தவர்தாமே தந் தவறின்மைகூறி நீக்கலும் பின்னுமவ்விருவரும் ஒத்தவன்பினராய்க் கூடலுமன்றே முன்வரைந்தெய்தினார் பெற்ற பயன்; அப்பயன் இருதலைப்புள்ளினோருயிராய உழுவலன்புடைய வெமக்கு வேண்டாவென அவ்வரைந்தெய்தலை யிகழ்ந்து கூறியவாறு. (க)

## புணர்ச்சிமகிழ்தல் 35

விளக்கம்:—"ஒருவரோடு ஒருவர் புணரும் புணர்ச்சியானது இனிதாகும்பொருட்டு விரும்பப்படுவதாகிய ஊடலும், அவ்வூடல் என்பதிலும் ஊடவேண்டிய பருவமறிந்து ஊடிப் பிறகு அதனின்றும் நீங்க வேண்டிய அளவறிந்து நீங்குதலும், அதற்குப்பின் நிகழ்வதற்குரிய மெய்யுறு புணர்ச்சியும் ஆகிய இவையன்றோ மணந்துகொண்டு காம இன்பத்தினை இடைவிடாது அடைந்தவர் அடைந்த பயன்கள்" என்று தலைவன் கூறினானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேல் திருக்குறளில் நாங்கள் இருவரில்லை என்று தனக்கும் தன் தலைவிக்கும் உள்ள அன்பினைக்கூறக்கேட்ட தோழியானவள் "அவ்விதமேஇருவருயிரும் ஓர் உயிர் என்றுகூறும அன்பினராக நீங்கள் இருக்கினும் இக்களவொழுக்கம் ஒளிந்துநின்று இடம் பெற்றவிடத்தே புணர்ந்து நிற்கின்ற இன்பம்; ஆதலால், இது ஓர் இன்பமாகாது; எக்காலத்தும் பிரிதலில்லாது ஒருவரை ஒருவர் தழுவி நிற்கும கூட்டமே இன்பந் தருவதாகும். அவ்வித இன்பத்தை அடைய வேண்டுமாயின் மணந்து கொள்ளுதலே தகுதியாகும் என்று தோழி சொல்லுதலும, தலைவனானவன் "தோழியே! நீ கூறிய புணர்ச்சியின்பமானது மிகப்பெருகவேண்டுமாயின், தலைவியானவள் தலைவனிடத்தே யாதொரு குற்றமும் இல்லாதிருக்கவும், வேண்டுமென்றே,

'நீவிர் பரத்தையர்மாட்டு அன்புடையீர். இனி நும்மார்பினைப் பொருந்து வது ஆகாது' என்று சிறு பிணக்குக் கொள்ளுதலும், அச்சிறு பிணக்கைக்கண்ட தலைவன் கோபித்து நிற்கின்ற தலைவியினிடத்து பணிந்தமொழிகளால் தன்னிடத்துத் தவறில்லாமையைச்சொல்லி அவ்வூடலை நீக்குதலும், ஊடல் நீங்கியவுடன் தலைவனும தலைவியும் ஒத்த அன்பினராய்க் கூடுதலும் ஆகிய இவையல்லவோ மணஞ்செய்து கொண்டு நின்ற தலைவன் தலைவியர் பெற்ற பயனாகும். ஆனால், இருதலைப்புட்சியுள் இருக்கும் ஓர் உயிர்போன்று உருவம் இரண்டு உயிர் ஒன்று ஆக இருக்கக்கூடிய பிறவிகள்தோறும் விட்டுநீங்காத தொடர்ச்சியுடைய எங்களிருவருக்கும் இவ்விதம் மணஞ்செய்து கொள்ள வேண்டுவதில்லை '' என்று மணஞ்செய்துகொண்டு அதனால் அடையும் இன்பங்களை இகழ்ந்து கூறினானென்பதாயிற்று

1110 அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

(பரி.) இ-ள். *அறிதோறு அறியாமை கண்டற்று*=நூல்களாலும் நுண்ணுணர்வாலும் பொருள்களை யறியவறிய முன்னையறியாமை கண்டாற்



போலக் காணப்படாநின்றது—*சேயிழைமாட்டுச் செறிதோறும் காமம்*= சிவந்த விழையினையுடையாளை இடைவிடாது செறியச்செறிய இவண்மாட்டுக் காதல். எ-று.

களவொழுக்கத்திற் பலவிடையீடுகளா னெய்தப்பெறாது அவாவுற்றான் இது பொழுது நிரந்தரமாகவெய்தப் பெற்றமையின், 'செறிதோறும்' என்றான். அறிவிற்கெல்லையின்மையான் மேன்மேலறிய வறிய முன்னையறிவு அறியாமையாய் முடியுமாறுபோலச் செறிவிற் கெல்லையின்றி மேன்மேற் செறியச்செறிய முன்னைச்செறிவு செறியாமையாய் முடியாநின்றதெனத் தன்னாராமை கூறியவாறு. இப்புணர்ச்சிமகிழ்தல் தலைமகட்குமுண்டேனும் அவண்

மாட்டுக் குறிப்பானிகழ்வதல்லது கூற்றானிகழாமையறிக. (ம)

விளக்கம்.—"நூல்களினாலும் நுட்பமாகிய உணர்வினாலும் பொருள்களின்தன்மையை அறியுந்தோறும் அறியுந்தோறும் பின்னர் அறிந்தபொருள்களின் தன்மையை முன்னர் அறியாது இருந்ததுபோல் நல்ல ஆபரணங்களை அணிந்த இப்பெண்ணினை இடைவிடாமல் புணருந்தோறும் புணருந்தோறும் இவளிடத்து ஆசையானது காணப்படுகின்றது" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, இடம் பற்றிப் புணர்ந்து செல்கின்றவனாகிய தலைமகன் தான் அடைந்த புணர்ச்சியின் மகிழ்ச்சியைத் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான் என்பதாயிற்று. அது எங்ஙனமெனின்? "நூல்களை ஆராய எண்ணி ஆராய்ந்த நூல்வல்லவன் ஒருவனுக்கு ஒருமுறை ஆராய்ந்த நூலினையே பலமுறை ஆராயுங்காலத்தும் ஆராயுந்தோறும் ஆராயுந்தோறும் புதிது புதிதாகப் பொருள்தோன்றி முன்னர் ஆராய்ந்ததெல்லாம் இப்போது அறிந்து ஆராய்ந்ததாலுண்டாகிய பொருளிற்குச் சமானமாகாது என்று ஆராய்ந்த நூல்களில் பொருள் நயம் காணும் நூலறிவைப்போல் காம இன்பத்திற்கு உரிய இப்பெண்ணினிடத்தே யான் புணர்ந்து புணர்ந்து இன்பங்காணுந்தோறும் இன்பங்காணுந்தோறும் முன்னர்கண்ட இன்பமெல்லாம் இப்போது காணும் இன்பத்திற்கு இணையாகாது என்றுசொல்லும்படியாக எனக்கு மகிழ்ச்சியுண்டாகின்றது" என்று தலைமகனானவன் முன்னர்க் களவொழுக்கத்தில் பலதடைகளால் அடையாது தலைவியிடத்து அவாக்கொண்டிருந்தான் இப்பொழுது அவளை நிரந்தரமாக அடைந்துபுணர்ச்சி இன்பத்தின் முடிவினைக்கண்டு தனக்கு அவ்வின்பத்திலுள்ள ஆராமையை எடுத்துக் கூறினானாயிற்று. இப்புணர்ச்சியால்



வரும் மகிழ்தல் தலைமகளுக்கும் உண்டாயினும் அவளிடத்து அதுகுறிப்பால் காணப்படுமேயன்றி, சொல்லால் காணப்படாதாதலால் அதைக்

குறித்து இஃது யாதும் கூறுவதற்கு இல்லை என்று அறிகின்றோம்.

---

## 112 அதிகாரம்.

---

### நலம்புனைந்துரைத்தல்.

(பரி) அஃதாவது தலைமகன் றலைமகணலத்தைப் புனைந்துசொல்லியது இது, புணர்ச்சிமகிழ்ந்துழி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது தலைமகனானவன் தலைமகளுடைய அழகினை அலங்கரித்துச் சொல்லுதல் இவ்விதம் அழகினைப்புகழ்ந்து சொல்லுவது அவளிடத்து சேர்ந்த புணர்ச்சி இன்பத்தால் மகிழ்ந்தகாலத்து உண்டாவதாகலின், இதபுணர்ச்சி மகிழ்தல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வைக்கப்பட்டு உள்ளது.

1111. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

இயற்கைப்புணர்ச்சியிறுதிக்கட் சொல்லியது.

(பரி.) இ-ள். அனிச்சமே வாழி நன்னீரை= அனிச்சப்பூவே! வாழ்வாயாக, மென்மையால் நீ யெல்லாப்பூவினு நல்லவியற்கையை யுடையை,—யாம் வீழ்பவள் நின்னினும் மென்னீரள்= அங்ஙனமாயினும் எம்மால் விரும்பப்பட்டவள் நின்னினு மெல்லிய வியற்கையை யுடையள் எ-று.

அனிச்சம் ஆகுபெயர். வாழியென்பது உடன்பாட்டுக்குறிப்பு. இனி, 'யானே மெல்லியன்' என்னுஞ் தருக்கினை யொழிவாயாகவென்பதாம். அது பொழுதுற்றறிந்தானாகலின், ஊற்றினினிமையையே பாராட்டினான், இன்னீரனென்று பாடமோதுவாருமுளர். (க)

விளக்கம்:—"அனிச்சப்பூவே! வாழக்கடவாய்! மென்மைத் தன்மையால் நீ எல்லாப்பூக்களினும் நல்ல மென்மையாகிய இயல்பினையுடை

யாய். அவ்விதம் மென்மையுடையையாயினும் எம்மால் விரும்பப்பட்ட



தலைவியானவள் உன்னைக் காட்டிலும் மென்மை தங்கிய இயற்கையுடையவளாய் இருக்கின்றாள்" என்று தலைவன் அவள் நலத்தினைப் புனைந்து உரைத்தானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவனானவன் இயற்கைப் புணர்ச்சியின் கடைசியில் அவளது அழகினைப் புகழவேண்டி முதலில் தேகத்தின் மென்மையைப் புகழ்வதற்கு ஆரம்பித்து, மென்மைக்கெல்லாம் மென்மையுடையது என்னும் மென்மையுடையதும் முகர்ந்தவுடன் வாடிப்போவதுமாகிய அனிச்சப் பூவினை நோக்கி "நீ பூக்களிலெல்லாம் மென்மையுடைமை. ஆதலால், எக்காலத்தும் வாழ்வாயாக! ஆயின், அவ்வித மென்மைகொண்டு நம்மைக்காட்டிலும் மென்மையையுடைய பொருள் இல்லையென்று நீ கொண்டிருந்த கர்வத்தினை இனி ஒழித்து விடுதல்வேண்டும். ஏனெனில்? என்னால் விரும்பப்பட்ட தலைவியோ உன்னைக்காட்டிலும் மிக மென்மையாகிய தேக இயற்கையையுடையவளாக இருக்கின்றாள்" என்று தான் அப்பொழுது அவள் தேகத்தில் பொருந்தி அடைந்த இன்பத்தையே முதலில் பாராட்டிக் கூறினான் என்பதாயிற்று.

1112. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.

(பரி.) இ-ள். நெஞ்சே = நெஞ்சே!—இவள் கண் பலர்காணும் பூ ஒக்கும் என்று = யானே காணப்பெற்ற இவள் கண்களைப் பலராலுங் காணப்படும் பூக்கள் ஒக்குமென்று கருதி—மலர்காணின் மையாத்தி = தாமரை, குவளை, நீலமுதலிய மலர்களைக்கண்டால் மயங்குகின்றாய், நின்னறிவிருந்தவாறென்?

மையாத்தல் = ஈண்டு ஒவ்வாதவற்றை யொக்குமெனக்கோடல்: இறுமாத்தல் செம்மாத்தலென்பனபோலவொருசொல். இயற்கைப்புணர்ச்சி

நீக்க முதலாகத் தலைமகள் கண்களைக் காணப்பெறாமையின் அவற்றோடொரு புடை யொக்குமலர்களைக் கண்டுழியெல்லாம் அவற்றின்கட் காதல்செய்து போந்தான், இதுபொழுது அக்கண்களினலமுழுதுந் தானே தமியாளை யிடத்தெதிர்ப்பட்டனுபவித்தா னாகலின் அம்மலர்கள் ஒவ்வாமைகண்டு ஒப்புமைகருதிய நெஞ்சையிகழ்ந்து கூறியவாறு. (௨)

விளக்கம்:—"நெஞ்சே! நானே பார்க்கக் கிடைத்த இவளுடைய கண்களைப் பலராலும் பார்க்கப்படும் பூக்களுக்குச் சமானமென்று



எண்ணித் தாமரை, குவளை, நீலம் முதலிய பூக்களைக் கண்டால் மயங்கிநிற்கின்றாய். உன் அறிவு இருந்தவிதம் என்னே?" என்று தலைவன் தன்னெஞ்சை நோக்கிக் கூறினான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இயற்கைப் புணர்ச்சிக்குப் பிறகு தலைவியைக் காணாத நாள்களிலெல்லாம் தாமரை முதலிய பூக்களைக் கண்டு இப்பூக்களெல்லாம் தன்னுடைய தலைவியின் கண்களுக்குச் சமானமுடையன என்று கருதி அப்பூக்களையே கண்டு நினைந்தோறும் மகிழ்ந்து இருந்தவன், இப்போது குறித்த இடத்தில் தலைவியைக் கண்டு அவள் கண்களினுடைய அழகு முழுவதையும் பார்த்து அனுபவித்தானதலால், இக்கண்களுக்கு ஒருசிறிதும் பொருந்தாத மலர்களையெல்லாம் கண்டு அம்மலர்கள் இக்கண்களின் அழகிற்கு ஒத்த அழகினையுடையன என்று மயங்கின நெஞ்சை நோக்கி இகழ்ந்து கூறியதுபோல் இரண்டாவதாக அவளது கண்களின் நலத்தையும் புனைந்து உரைத்தானாயிற்று.

1113. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

கூட்டுதலுற்றபாங்கற்குத் தலைமகன்றலைமகளதியல்பு கூறியது.

(பரி.) இ-ள். வேய்த்தோளவட்கு= வேய்போலுந் தோளினையுடைய வட்கு —மேனிமுறி= நிறந் தளிர்நிறமாயிருக்கும்;—முறுவல் முத்தம்= பல்லுமுத்தமாயிருக்கும்,—நாற்றம் வெறி = இயல்பாய நாற்றம் நறுநாற்ற

யாயிருக்கும்,—உண்கண் வேல் = உண்கண்கள் வேலாயிருக்கும். எ-று.

பெயரடையானும் ஓரியல்பு கூறப்பட்டது. முறி, முறுவலென்பன ஆகுபெயர். உருவகவகையாற் கூறினமையின், புணர்ந்துரையாயிற்று. நின்னாற் கருதப்பட்டாளையறியேனென்று சேட்படுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியதூஉமாம். (௩)

விளக்கம்:—மூங்கில்போலும் தோளினையுடைய இப்பெண்ணிற்கு மேனி தளிர் நிறமாயிருக்கும், பல் முத்துப்போலிருக்கும், இயற்கையாகவே அமைந்த மணமானது வாசனைதங்கிய மணமாய் இருக்கும், மையுண்ட கண்கள் வேலாயிருக்கும் என்று தலைமகன் தலைமகளது இயற்கையைப் பாங்கனுக்குக் கூறினானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இவ்விதம் அவயவங்களை உவமையால் கூறாது உருவகப்படுத்திக் கூறினதைலால், அவளுடைய அழகினை மிகுதியும் அலங்கரித்துச்



சொன்னாயிற்று. அதுவன்றியும், இத்திருக்குறளைப் பாங்கனுக்குக் கூறியதாகக் கொள்ளாது உன்னால் எண்ணப்பட்ட தகுதியுடைய தலைவியை நானறியேன் என்று தன்னை அகற்றுகின்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியதாகக் கொள்ளுதலுமாகும்.

1114. காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

பாங்கற்கூட்டத்துச்சென்று சார்தலுறுவான் சொல்லியது.

(பரி.) இ-ள். குவளை = குவளைப்பூக்கடாமும்,—காணின் = காண்டற்றொழிலையுடையவாயின்,—மாண் இழை கண் ஒவ்வேம் என்று, கவிழ்ந்து நிலன் நோக்கும் = மாண்டவிழையினையுடையாள்கண்களை யாமொவ்வேமென்று கருதி அந்நாணினா லிறைஞ்சி நிலத்தினை நோக்கும். எ-று.

பண்பானேயன்றித் தொழிலானுமொவ்வாதென்பான் 'காணின்' என்றும், கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடைத்தாமென்பது தோன்றக்

'கவிழ்ந்து' என்றுங் கூறினன். காட்சியு நாணு மின்மையிற் செம்மாந்து வானை நோக்கின வென்பதாம். (௬)

விளக்கம்:—"குவளைப்பூக்கள் தாமும பார்க்குந் தொழிலை யுடையனவாயின், மாட்சிமைப்பட்ட ஆபரணங்களை அணிந்தவளாகிய இவள் கண்களுக்கு யாம் ஒப்பு ஆகோம் என்று எண்ணி அதனால் நாணி அந்நாணத்தால் வணங்கி நிலத்தினைப் பார்க்கும்" என்று பாங்கனிடத்துச்சென்று சேர்பவன் சொல்லியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. தலைவனைவன் தன் தலைவியின நலம இதுவென்று தன் பாங்கனுக்குக் கூறுகின்ற காலத்து "ஓ' பாங்கனே! இக்குவளைப் பூக்களைப் பெண்களின் கண்களுக்கு உவமை கூறுகின்றனர். என் தலைவியின் கண்களுக்கு இப்பூக்களை உவமை கூறுதல் அடாது ஏனெனின்? தொழிலாலும் குணத்தாலும் இம்மலர்கள் ஒரு புடையும் ஒத்தில்லாமையால், அவ்வாறு உவமை கூறுதல் பொருந்தாமையாகும். இவள் கண்களோ காண்டல் தொழிலையும் கருமை நிறத்தையும் அடைந்தனவா யுள்ளன இக்குவளைப் பூக்கள் உண்மையாகவே பார்க்கின்ற செயலையுடையனவாயின் என் தலைவியின் கண்களைக் கண்டு 'இவள் கண்ணின் தன்மைக்கு நாம்சிறிதும் ஒப்பாகோம்' என்று நாணங்கொண்டு தலைகவிழ்ந்து பூமியை நோக்கும் வண்ணமாக இருக்கும். அவ்வாறு காண்பதற்குப் பார்வையும் நாணமும் இல்லாமையால் தம்மைக் காட்டிலும் நிறம் உடையன இல்லை



யென்று தமக்குத் தாமே இறுமாந்து ஆகாயத்தைப் பார்த்தவண்ணமாக உள்ளன" என்று கண்களுக்கு உவமை சொல்லுகின்ற குவளைப்பூக்களையும் இழித்துக் கூறினனாயிற்று.

1115. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்
நல்ல படாஅ பறை. [பிற்கு

பகற்குறிக்கட் பூவணிகண்டு சொல்லியது.

(பரி.) இ-ள். அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள்=இவள் தன் மென்மைகருதாது அனிச்சப்பூவை முகிழ்களையாது சூடினள், —நுசுப்பிற்கு நல்ல படாஅ பறை=இனியிவளிடைக்கு நல்லபறைகளொலியா. எ-று.

அம்முகிழ்ப்பாரம் பொறாமையின் இடை முரியும், முரிந்தால் அதற்குச் செத்தார்க்குரிய கெய்தற்பறையே படுவதென்பதாம். மக்கட்குரிய சாக்காடும் பறைபடுதலும் இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின்மேலேற்றப்பட்டன. (௫)

விளக்கம்:—"இப்பெண்ணானவள் தன்னுடைய மெல்லிய இயற்கையை எண்ணாமல் அனிச்சப்பூவினைக் காம்பு களையாமல் சூடிக்கொண்டனள் இனி இவளுடைய இடுப்பிற்கு நல்ல பறைகள் ஓசை செய்யா" என்று பகலிடத்தே தலைவியைக்கண்டு அவள் பூவினை அணிந்ததை நோக்கிக் கூறினனென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அஃதாவது, பகற்போதில் குறித்த இடத்துத் தலைவியைக்கண்டு அவள் அழகினைப் புகழ்ந்து சொல்லவேண்டிய தலைவன் "இவளுடைய இடுப்பின் மென்மையை உணராது பூவால் தன்னை அலங்கரித்துக் கொள்ள வேண்டிக் காம்புகளைக் களையாமலே அனிச்சப்பூவைச் சூடினாளாதலால், அப்பூக்களின் காம்புகளது பாரம் பொறாமையால் இடைமுரிந்து விடும்; முரிந்தால் செத்தார்க்கு அடிக்கின்ற சாப்பறையே அடிக்கப்படும்" என்று கூறினமையால் மோந்த உடனே குழைந்துவிடும் பூக்களாகிய அனிச்சப் பூக்களாயினும் அவற்றின் காம்பையும் தாங்குதற்கு இல்லாத அத்துணை மென்மையுடையது இடையென்று அவளது இடையின் நலத்தைப் புகழ்ந்து கூறினனாயிற்று

1116. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

இரவுக்குறிக்கண்மதிகண்டு சொல்லியது.

(பரி.) இ-ள். மீன்=வானத்து மீன்கள்,—மதியும் மடந்தைமுகனும் அறியா=வேறுபாடுபெரிதாகவும் தம்மதியினையும் எம்மடந்தைமுகத்தினை

யும் இது மதி இது முகமென்றறியமாட்டாது,—பதியிற் கலங்கிய = தந்நிலையினின்றுங் கலங்கித் திரியாநின்றன. எ - று.

ஓரிடத்து நில்லாது எப்பொழுதுமியங்குதல்பற்றிப்'பதியிற்கலங்கிய'என்றான். வேறுபாடு வருகின்றபாட்டாற்பெறப்படும். இவ்விரண்டனையும் பதியிற்கலங்காத மீன்களறியுமல்லது கலங்கின மீன்கள் அறியாவென்றுரைப்பினு மமையும். (௬)

விளக்கம்:—'வானத்து உள்ள நட்சத்திரங்கள், பெரிதும் வேறுபாடு இருக்கவும் தம் தலைவனாகிய சந்திரனையும் எம் தலைவியின் முகத்தினையும் இது சந்திரன் இது முகம் என்று அறிய முடியாமல் தாமிருக்கும் தத்தம் நிலையினின்றும் கலங்கித் திரிகின்றன'' என்று இரவில் குறித்த இடத்துச் சந்திரனைப் பார்த்துத் தலைவன் கூறினானென்று இத் திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனின்? வானத்தில் சந்திரனும் அவனைச் சுற்றியுள்ள நட்சத்திரங்களும் அசைகின்ற தோற்றத்தைக் கண்டு இந்நட்சத்திரங்கள் தம்முடைய பதியாகிய சந்திரனுக்கும் என்னுடைய தலைவியின் முகத்திற்கும் பெரியதோர் வேறுபாடு கண்டும் இது சந்திரன் இது பெண் முகம் என்று அறிய மாட்டாமல் மயங்கி அலைகின்றன என்று தலைவியின் முகத்தினை வியந்து கூறினானாயிற்று.

1117. அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

இதுவுமது.

(பரி.) இ-ள். அம்மீன்கள் அங்ஙனங்கலங்குதற்குக் காரணம்யாது?—அறுவாய் நிறைந்த அவிர் மதிக்குப்போல = முன்குறைந்தவிடம் வந்துநிரம்பி விளங்குமதிக்கட்போல — மாதர் முகத்து மறு உண்டோ = இம்மாதர்முகத்து மறுவுண்டோ! எ - று.

இடம்=கலை. மதிக்கென்பது வேற்றுமைமயக்கம் தேய்தலும், வளர்த

லும், மறுவுடைமையு மின்மைபற்றி வேறுபாடறியலாயிருக்க அறிந்திலவென இகழ்ந்து கூறியவாறு. .(எ)

**விளக்கம்:**—"இந்நட்சத்திரங்கள் மதியென்றும் முகமென்றும் அறியாமல் கலங்குவதற்குக் காரணம் ஏது என்று அறிவதற்கு இல்லை. பிறைச்சந்திரனாக இருந்த காலத்துக் குறைந்த இடம் தினந்தோறும்



நிரம்பப்பெற்று ஆகாயத்தில் காணப்படுகின்ற சந்திரனைப்போல என் தலைவியாகிய இவளது முகத்தே ஏதேனும் மறுவுண்டோ?" என்று தலைவன் தன் தலைவியின் முகத்தின் நலத்தைப் புனைந்து கூறினனென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, சந்திரனனவன் தேயுந் தன்மையும் வளருந்தன்மையும் களங்கமாகிய குற்றமுடைமையும் கொண்டு நிற்கவும், அவ்விதம் வளர்தலும் தேய்தலும களங்கமுமில்லாத என் தலைவியின் முகத்தை வேறுபடுத்து அறியாது மயங்குகின்ற நட்சத்திரங்களின் அறியாமை எவ்விதமுள்ளது என்று அவற்றின் அறியாமையை இகழ்ந்து கூறியவாறாயிற்று.

1118. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி

இதுவு மது.

(உரை.) இ-ள் மதி வாழி=மதியே! வாழ்வாயாக;— மாதர் முகம்போல் ஒளிவிடவல்லையேல் காதலை=இம்மாதர்முகம்போல யான்மகிழும்வகை ஒளிவீசவல்லையாயின், நீயுமென்காதலை யுடையையாதி. எ-று

மறுவுடைமையின் அது மாட்டாய், மாட்டாமையின் எனனுற் காதலிக்கவும்படாயென்பதாம். வாழியென்பது இகழ்ச்சிக்குறிப்பு. (அ)

**விளக்கம்:**—"ஓ மதியே! நீ வாழ்வாயாக இப்பெண்ணினது முகம்போல் யான் மகிழ்ச்சியடையும்விதம் ஒளி வீச வல்லமையுடையையாகில், நீயும் என் அன்பிற்கு உரிமையாவாய்" என்று தலைமகன்

கூறினுனென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உலகத்து மக்கள் சந்திரனது ஒளியை மாதர் முகவொளியோடு உவமித்துக் கூறுவது ஓர் வழக்காக இருந்தாலும், மறுவுடைய சந்திரன் மறுவில்லாத என் தலைவியின் முகத்தைப்போல் ஒளிவீசுவதற்கு இல்லையாதலால் மறுவில்லாது ஒளிவீசும்என் தலைவியின் முகத்தைக் கண்டு மகிழ்வதுபோல் உன்னைக் கண்டு மகிழ்வதற்கு இல்லை. என் தலைவியின் முகத்திற்கு உவமை கூறப்படுவதற்கு உன்னை நீ சமானனுக எண்ணிக்கொள்கின்றாய்; இவ்விதம் அறியாமையைக் கொண்ட நீ வாழ்ந்து போகக்கடவாய் என்று குறிப்பாக இகழ்ந்ததாயிற்று. இதனை,

"புறந்தாழ் குழலுமை பங்காளர் வெங்கை புரத்தர் வெறமிற
குறைந்தா லிவனுத லொவ்வாய் நினது குறை நிறைந்தாற்
சிறந்தா யிழைமுக மொவ்வாய் விளங்குஞ் செழுங்கலையால
நிறைந்தா லென் னன்றிக் குறைந்தாலென் னெங்கட்கு நீமதியே"

என்னும் திருவெங்கைக் கோவைச் செய்யுளாலும் அறிதலகூடும்.



1119. **மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்**
**பலர்காணத் தோன்றல் மதி.**

இதுவுமது.

(பரி.) இ-ள். மதி = மதியே! — மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின் = இம்மலர்போலுங் கண்ணினையுடையாள் முகத்தை நீயொக்க வேண்டுதியாயின், — பலர்காணத் தோன்றல் = இதுபோல யான்காணத் தோன்று, பலர்காணத்தோன்றுதொழி. எ-று.

தானே முகத்தினலமுழுதுங்கண்டநுபவித்தானாகலின் ஈண்டும் பலர் காணத்தோன்றலை யிழித்துக்கூறினான். தோன்றின் நினக்கவ்வொப்புண்டாகா தென்பதாம். (கூ)

விளக்கம் :—"ஓ சந்திரனே ! இந்த மலர்போலும் கண்ணையுடையாள் முகத்திற்கு நீ சமானமாவதற்கு விரும்புவையானால் இவள் முகம்போல நான் ஒருவனே காணும்படித் தோன்றுதல் வேண்டும். பல

ரும் பார்க்கும்படித் தோன்றுதலைச் செய்யாதே'' என்று தலைவன் கூறினு னென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனின்? கற்புடையாளாகிய தன் தலைவியின் முகத்து அழகு முழுவதும் தானே கண்டு அனுபவித்தானுதலால், அவ்விதமல்லாது எல்லோரும் பார்க்கும் படி வானத்தில் உலாவுகின்ற சந்திரனைக் கற்பில்லாமையைப்பற்றி இழித்துக் கூறுவானுயும், அவ்வாறு இழித்துக் கூறுவதனால் கற்புடைய தன் தலைவியின் முகத்திற்குப் பலர் காணத்தோன்றும் சந்திரன் ஒப்பா கான் என்றும் தன் காதலியின் மறுவில்லா முகத்தின் ஒளியையும் அம் முகத்தின் அழகு முழுவதையும் தானே கண்டு அனுபவித்த நன்மை யினையும் வியந்து கூறினுனையிற்று.

1120. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

உடன்போக்குரைத்த தோழிக்கு அதனதருமைகூறி மறுத்தது.

(பரி.) இ-ள். அனிச்சமும் அன்னத்தின் தூவியும் = உலகத்தாரான் மென்மைக்கெடுக்கப்பட்ட அனிச்சப்பூவும் அன்னப்புள்ளின் சிறகுமாகிய விரண்டும்—மாதர் அடிக்கு நெருஞ்சிப்பழம் = மாதரடிக்கு நெருஞ்சிப்பழம் போல வருத்தஞ்செய்யும். எ-று.

முள் வலிதாதலுடைமையிற் பழமென்றான். இத்தன்மைத்தாயவடி



"பாத்தியன்ன குடிமிக்கூர்ங்கற்களை" *உடைய வெஞ்சுரத்தை யாங்ஙனங் கடக்குமென்பது குறிப்பாற்பெறப்பட்டது. செம்பொருளேயன்றிக் குறிப் புப் பொருளும் அடிகலனழியாமையாகலின் இதுவு மிவ்வதிகாரத்த தாயிற்று. (ய)

விளக்கம் :—"உலகத்தாரால் மென்மையுளெல்லாம் மென்மை யென்று எடுத்துச் சொல்லும் அனிச்சப் பூவும் அன்னப்பட்சியின்

சிறகும் ஆகிய இரண்டும் என் தலைவியினது பாதங்களுக்கு நெருஞ்சிப் பழம்போல வருத்தத்தை உண்டுபண்ணும்" என்று தலைவி உடன்போக விரும்புகின்றாள் என்று சொல்லிய தோழிக்குத் தலைவனானவன் தன் தலைவியின் பாதங்களின் மென்மையைக்கூறி உடன் வருதல் முடியா தென்று மறுத்துக் கூறினன் என்பதை இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிய இவள் சிறிய பாதங்கள் பஞ் சணையில் பரப்பிய அனிச்ச மலருக்கும் அன்னத்தின் சிறகிற்கும் வருந் தக்கூடிய அவ்வளவு மென்மையுடைய வாதலால், நான் செல்லுகின்ற கல் வழியை எவ்வாறு நடந்து கொடிய பாலை வனத்தைக் கடக்கும். ஆதலால், என்னுடன் போதல் வேண்டும் என்று எண்ணிய உடன் போக்கானது முடியாதது என்று உடன்போக்கை மறுப்பான்போன்று அவள்பாதங்களின் அழகினையும் புகழ்ந்துகூறினையிற்று. இவ்வருமை புரைத்தலே,

" மெல்லியல் கொங்கை பெரியமின் னேரிடை மெல்லடிபூம்
கல்லியல் வெம்மைக் கடங்கடத் திக்கற்று வானமெல்லாஞ்
சொல்லிய சீர்ச்சுடர்த் திங்களங் கன்னித் தொல்லோன்புலியூ
ரல்லியங் கோதை நல்லாயெல்லை சேய்த்தெம் மகனகரே "

என்னும் திருக்கோவையார் செய்யுளாலும் அறிதல்கூடும்.

---

## 113 அதிகாரம்.

---

## காதற்சிறப்புரைத்தல்.

(பரி.) அஃதாவது தலைமகன் தன்காதன்மிகுதிகூறலும், தலைமகள் தன் காதன் மிகுதி கூறலுமாம். இது, புணர்ச்சியும் கலனும்பற்றி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தல் நலம்புனைந்துரைத்தல்களின்பின் வைக்கப்பட்டது.

---

* அகநானூறு, களிற்றியானைநிரை, 5.

**விளக்கம்:**—அதாவது, தலைமகன் தலைமகள்மீது தனக்கு உள்ள ஆசைமிகுதியைச் சொல்லுதலும், தலைமகள் தலைமகன்மீது தனக்குள்ள ஆசையின் மிகுதியைச் சொல்லுதலுமாகும் இக்காதல் சிறப்புரைத்தல் புணர்ச்சியினாலும் அழகினாலும் உண்டாவதொன்றாதலின் புணர்ச்சி மகிழ்தல், நலம்புனைந்துரைத்தல் என்னும் அதிகாரங்களுக்குப் பிறகு வைக்கப்பட்டு உள்ளது.

**1121.** பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட் டலைமகன் றனையைப் புணர்ந்தியது.

(இ-ள்.) இ-ள். பணிமொழி வால் எயிறு ஊறிய நீர்=இம்மெல்லிய மொழியினையுடையாளது வாலிய வெயிறூறிய நீர்—பாலொடு தேன்கலந் தற்று=பாலுடனே தேனைக்கலந்த கலவைபோலும். எ-று.

கலந்தற்றென்பது விகாரமாயிற்று, கலக்கப்பட்டதென்றவாறு. பாலொடு தேனென்றவதனால் அதன் சுவைபோலுஞ் சுவையினையுடைத்தென்பதாயிற்று எயிறூறியவென இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. வேறுவேறறியப்பட்டசுவையவாய பாலுந்தேனுங்கலந்துழி அக்கலவை இன்னதென்றறியலாகாத இன்சுவைத்தாமாகலின், அது பொருளாகிய நீர்க்குவமையெய்துவிக்க. (க)

**விளக்கம்:**—"இம்மிருதுவாகிய சொல்லினையுடையவளது வெண்மையாகிய பற்களில் ஊறும் நீரானது பாலுடனே தேனையுங் கலந்த கலவைபோலுள்ளது" என்று இயற்கைப் புணர்ச்சியின் இறுதியுள் தலைமகனானவன் தன் காதலின் சிறப்பினை உணர்த்தினனென்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, புணர்ச்சியின்பம் இதுவென்று உணர்த்தி அதனால் தலைமகள்மீது தனக்கு உள்ள காதலை சிறப்பித்துச் சொல்லவேண்டிய தலைமகன் அவளது அதரபானமானது வேறு வேறு திறப்பட்ட சுவையினையுடைய பாலும் தேனும் ஒன்றாகக் கலந்து உண்ட காலத்து இரண்டின் சுவையும் இன்ன தன்மையுடையது

என்று அறியக்கூடாத இனிய சுவையாகுமாதலால் அவ்வித இனிய சுவையைத் தருகின்றது என்று தனக்குள்ள ஆசையின் மிகுதியை எடுத்துக் கூறினானாயிற்று.

## 1122. உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
## மடந்தையொ டெம்மிடை நட்பு.

பிரிவச்சங்கூறியது.

(பரி.) இ-ள் உடம்பொடு உயிரிடை என்ன அன்ன = உடம்போடுயி



ரிடை யுளவாய நட்புக்கள் எத்தன்மைய அத்தன்மைய — மடந்தையோடு எம்மிடை நட்பு = இம்மடந்தையோடு எம்மிடையுளவாய நட்புக்கள். எ-று.

என்னவெனப் பன்மையாற் கூறியது, இரண்டுந் தோன்றுதொட்டு வேற்றுமையின்றிக் கலந்துவருதல், இன்பத்துன்பங்களொக்க வனுபவித்தல், இன்றியமையாமையென்றிவற்றை நோக்கி. தெய்வப்புணர்ச்சியாகலான் அதுபொழுது உணர்ச்சியிலளாகியாள் பின்னுடையளாமன்றே; ஆயவழி இவன் யாவன்கொலெனவும் என்கணன்புடையன்கொலெனவும் இன்னுமிவனைத் தலைப்பெய்தல் கூடுங்கொலெனவும் அவள் மனத்தின்கணிகழும். அந்நிகழ்வனவற்றைக் குறிப்பானறிந்து அவைதீரக்கூறியவாறு. என்னையென்று பாடமோதுவாருமுளர். (உ)

விளக்கம்.— "உடலுக்கும் உயிருக்கும் உள்ளனவாய நட்புக்கள் எவ்வித தன்மையுடையனவோ அவ்வித தன்மையுடையன இப்பெண்ணினோடு எமக்கு உளவாய நட்புக்கள்" என்று தான் பிரிந்துபோதற்கு உண்டாகும் அச்சத்தைக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. மேல்கூறிய புணர்ச்சியின்பத்தைப் புணர்ந்த தலைமகன் அவ்வின்பத்தால் உண்டாகிய காதலைக் கூறி நிற்கவும், ஊழ்வலியால் ஒருவரையொருவர் கண்டு புணர்ந்த காலத்து தன்னை இதுவென்று அறியாது புணர்ந்த தலைமகள் பின்னர் உணர்ச்சி வந்தகாலத்து "எனக்கு உயிர்த்துணைவனாய் நின்ற இவன் எவனோ, என்னிடத்து அன்புடையவனோ, மறு நாம் ஓர் முறை இவனைச் சந்தித்து இன்பம் எய்துதல் கூடுமோ?"

என்று தன் மனத்தில் நினைத்தாளென்றாம், அந்நினைப்பினைக் குறிப்பால் அறிந்த தலைமகனானவன் அவளது தன்மையானது நீங்கும்படி பிறவிகள்தோறும் ஒற்றுமைப்பாடு கலந்து வருதலையும் இன்பதுன்பங்கள் ஒத்து அனுபவித்தலும் ஒன்றில்லாமல் பற்றொன்று அமையாதிருத்தலும் ஆகிய உடம்பிற்கும் உயிருக்கும் உள்ள நட்புபோல் இவளிடத்துத் தன் நட்பு உள்ளது என்றாம், அவளை விட்டுத் தான் பிரிவதற்கு இல்லையென்றாம், ஆதலால் அவள் அஞ்சவேண்டுவதில்லையென்றும் அவளைத் தேற்றுவதற்குச் சொல்லியதாயிற்று.

1123 கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.

இடந்தலைப்பாட்டின்கட் டலைமகணீக்கத்துச் சொல்லியது.

(பரி) இ-ள். கருமணியிற் பாவாய் நீபோதாய் = என் கண்ணிற் கரு



மணியின் கணுறையும் பாவாய், நீயங்குநின்றும் போதருவாயாக;—யாம் வீழும் திருநுதற்கு இடம் இல்லை = போதாதிருத்தியாயின், எம்மால் விரும்பப்பட்ட திருநுதலையுடையாட்கு இருக்கவிடமில்லையாம். எ-று.

யான் காணுந்தன்மையாமையின் இவள்புறத்துப் போகற்பாலளன்றி என் கண்ணுளிருக்கற்பாலள், இருக்குங்கால் நின்னோடொருங்கிருக்க இடம்போதாமையின் நின்னினுஞ் சிறந்தவிவட்கு அவ்விடத்தைக் கொடுத்து நீ போதுவாயாக வென்பதாம். (௩)

விளக்கம்:—"என் கண்ணிலுள்ள கருமணியில் வசிக்கின்ற ஓ! பாவை போல்வாய்! நீ அக்கருமணியினின்றும் போய்விடுவாயாக! நீ போகாதிருப்பாயாகில் எம்மால் விரும்பப்பட்ட அழகிய நெற்றியை உடையாளாகிய இவளுக்கு அவ்விடத்து இருக்க இடமில்லாமல்போம்" என்று குறித்த இடத்துப்புணர்ந்து நீங்குகின்ற தலைமகளது நீக்கத்துத் தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோ வெனின்? தலைமகனானவன் தலைமகளிடத்துத் தனக்குள்ள தன் காதல்

சிறப்பினை அவள் அறியவேண்டித் தன்கண்ணினுள் இருக்கும் கருமணியில் தோன்றும் உருவத்தைப் பார்த்து "ஓ! பாவையே! என் தலைவியாகிய இவளைப் பாவையாக இருக்க என்னாலாகாது ஆதலால் இவள் என் கண்களைவிட்டு வெளியே போகாமல் என் கண்களின் உள்ளேயே இருக்க வேண்டியவளாக இருக்கின்றாள். அவ்விதம் என் கண்களினுள் இருக்கவேண்டுமாயின் நீயும் அவ்விடத்து உடனிருக்க இடம் போதாததாகும். ஆதலால் உன்னைக் காட்டிலும் சிறந்தவளாகிய இவளுக்கு அவ்விடத்தைக் கொடுத்துவிட்டு நீ போய்விடுவாயாக!" என்று அவளது பிரிவினால் தனக்கு உண்டாகும் துன்பத்தைக் கூறுவது போல் தனக்கு அவள்மீது உள்ள காதல் சிறப்பினையும் கூறினானாயிற்று.

## 1124. வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
## லதற்கன்ன ணீங்கு மிடத்து.

**பகற்குறிக்கட்புணர்ந்து நீங்குவான் சொல்லியது.**

(பரி.) இ-ள். ஆயிழை உயிர்க்கு வாழ்தல் அன்னள் = தெரிந்தவிழையினை யுடையாள் எனக்குப் புணருமிடத்து உயிர்க்குடம்போடு கூடி வாழ்தல் போலும்; —நீங்குமிடத்து அதற்குச் சாதல் அன்னள் = பிரியுமிடத்து அதற்கு அதனினீங்கிப் போதல்போலும் எ-று.



எனக்கென்பதும் புணருமிடத்தென்பதும் அவாய்நிலையான் வந்தன. வாழுங்காலத்து வேற்றுமையின்றி வழிநிற்றலானும், சாங்காலத்து வருத்தஞ் செய்தலானும், அவற்றை அவன்புணர்வு பிரிவுகட்குவமையாக்கினான். (௪)

விளக்கம்:—"மிக நன்மையுடையது என்று அறியக்கூடிய சிறந்த ஆபரணங்களை உடையாளாகிய இவள் எனக்குப் புணருகின்ற காலத்து உயிரானது உடம்போடு கூடிவாழ்வதுபோல்வாள், அவள் என்னைப் பிரியுங்காலத்து அவ்வுயிரானது அவ்வுடம்பினைவிட்டு நீங்கிப்போ

நலிபோதும் உள்ளாள்" என்று பகற்போதில் குறித்த இடத்து வந்து சேர்ந்து புணர்ந்து செல்லுகின்றவனாகிய தலைமகன் சொல்லியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஓர் உயிரானது உடம்பொடுகூடி வாழுங் காலத்து இது உயிர் இது உடல் என்று யாதொரு வேறுபாடு மில்லாமல் ஒன்றையொன்று விரும்பி நிற்பதுபோல் அவளோடு உள்ள காலமெல்லாம் இன்பந் தருவதாக உள்ளது என்றும், உயிரானது உடலைவிட்டு நீங்குங் காலத்துப் பெரியதோர் துன்பஞ் செய்வதுபோல் அவளைப் பிரியுங் காலத்துத் துன்பம் உண்டாகின்றதென்றும் அவ ளோடு உள்ள புணர்வுக்கும் பிரிவிற்கும் ஆகிய இரண்டிற்கும் உவமை கூறினனென்பதாயிற்று.

## 1125. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே னொள்ளமர்க் கண்ணாள் குணம்.

ஒருவழித் தணந்துவந்த தலைமகன் நீயிர் தணந்தநான்று எம்மையுள்ளியு மறிதிரோவென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். ஒள்ளமர்க் கண்ணாள் குணம் யான் மறப்பின் உள்ளு வன் = ஒள்ளியவாய் அமரைச்செய்யுங் கண்ணினையுடையாள் குணங்களை யான் மறந்தேனாயின், நினைப்பேன்; — மறப்பு அறியேன் = ஒருபொழுதும் மறத்தலையறியேன், ஆகலான் நினைத்தலையுமறியேன். எ-று.

மன் — ஒழியிசைக்கண் வந்தது. குணங்கள் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின. இத்துணையுந் தலைமகன்கூற்று; மேற்றலைமகள்கூற்று. (5)

விளக்கம் :—"ஒளியையுடையனவாய்ப் போரினைச் செய்யும் கண் ணை யுடையாளது குணங்களை யான் மறந்திருப்பேனாயின் நினைத்து இருப்பேன். ஆனால் ஒருபொழுதும் மறந்து அறியேன். எப் போது மறக்கவில்லையோ நினைத்தும் அறியேன்" என்று சிறிது

7

வாராது இருந்து வந்த தலைமகனை "நீவிர் வாராதிருந்த காலத்து எம்மை நினைந்துமிருந்திரோ?" என்ற தோழிக்குப் பதில் கூறினனென்று இத் திருக்குறள் கூறுகின்றது அதாவது, "எம்மைப் பிரிந்திருந்த காலத்து எம்மை நினைப்பதுமுண்டோ?" என்று தோழி கேட்டலும், "என் தலைவியின் குணங்களாகிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் பெண்தகைமையை நான் மறந்திருப்பேனாயின், பிரிந்தகாலத்து நினைந்திருத்தல் கூடும் ஓர் காலத்தும் மறத்தலில்லையாகையால் நினைத்தலுமில்லையாயிற்று" என்று தலைமகன் காதல் சிறப்பினை உரைத்தானாயிற்று. இனித் தலைமகளது கூற்று நிகழும்.

## 1126. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார் நுண்ணியரெங் காத லவர்.

ஒருவழித்தணப்பின்கட்டலைமகளைத்தோழி இயற்பழித்தமேள் றந்சி அவள்கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.

(பரி.) இ-ள். தாங்காணாமைபற்றிச் சேய்மைக்கட்போயினரென்று கருதுவார் கருதுக,—எங்காதலவர் கண்ணுள்ளிற் போகார் = எம்முடைய காதலர் எங்கண்ணகத்து நின்றும் போகார், இமைப்பிற் பருவரார் = யாமறியாதிமைத்தேமாயின் அதனால் வருந்துவதுஞ்செய்யார்,—நுண்ணியர் = ஆகலாற் காணப்படா நுண்ணியர். எ-று.

இடைவிடாத நினைவின்முதிர்ச்சியான் எப்பொழுதும் முன்னேதோன்றலிற் 'கண்ணுள்ளிற் போகார்' என்றும், இமைத்துழியும் அது கிற்றலான் 'இமைப்பிற் பருவரார்' என்றுங் கூறினள். (சு)

**விளக்கம்:—**"தாம் பாராமையால் விட்டுப் பிரிந்து போயினர் என்று எண்ணுபவர் எண்ணியிருக்க ; ஆனால் எம்முடைய காதலரோ எம் கண்ணினின்றும் போகாதவராயுள்ளார். இவ்வாறு கண்ணிலுள்ளதை யாம் அறியாது இமை கொட்டுவோமாயின் அவ்விமைத்தலால்

வருந்தவும் மாட்டார். ஆதலால், இவ்வித தகுதியுடைய எம் காதலர் கண்ணால் பார்க்கப்படாத நுண்ணியராக இருக்கின்றார்" என்று தலைவன் பிரிந்தகாலத்து அத்தலைவனைத் தோழி பழிப்பாளென்று அஞ்சி அத்தோழி கேட்கும்படி தனக்குள்ளேயே தலைவி சொல்லியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, இடைவிடாத நினைவின் மிகுதியால் எப்பொழுதும் தனக்கு முன்னே தோன்றுதலால் தன் கண்ணை



விட்டுப் போகாரென்றும், இமைகொட்டுகின்ற காலத்தும் அவ்வுரு தனக்கு முன்னே நிற்றலால், இமைத்தலாலும் நுண்பமாடார் என்றும் கூறித் தன் தலைவனைத் தோழி பழிக்காதவிதமாகத் தலைவி தலைவனிடத்து உள்ள தன் காதல் சிறப்பினைக் கூறியதாயிற்று.

**1127.** கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

இதுவுமது.

(பரி.) இ-ள். காதலவர் கண் உள்ளாராகக் கண்ணும் எழுதேம் = காதலர் எப்பொழுது மெங்கண்ணினுள்ளாராகலாற் கண்ணினை அஞ்சனத்தா லெழுதவுஞ் செய்யேம்,—கரப்பாக்கு அறிந்து = அத்தொழிற்காலமும் அவர் மறைதலையறிந்து. எ-று.

இழிவுசிறப்பும்மை மாற்றப்பட்டது. கரப்பாக்கென்பது வினைப்பெயர். வருகின்ற வேபாக்கென்பதுமது. யானிடையீடின்றிக் காண்கின்றவரைப் பிரிந்தாரென்று கருதுமாறென்னையென்பது குறிப்பெச்சம். (எ)

விளக்கம்:—"காதலர் எக்காலத்தும் நம் கண்ணிடத்தேயே இருக்கின்றார் ஆதலால் என் கண்களுக்கு அஞ்சனக்கோல் கொண்டு மை பூசுவதும் செய்யோம்; ஏனெனில்? பூசுகின்ற அவ்வளவு காலமும்

அவர் மறைந்திருப்பாரென்று அறிந்து" என்று தோழி நகைவினைப் பழியாதவிதமாகத் தலைவி சொல்லியதென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, கண்ணினை மை கொண்டு பூசினால், பூசுகின்ற அவ்வளவு சிறிய காலமும் என் எதிரில் நிற்கின்ற அவரைப் பாராதிருத்தல் கூடாமையாகின்றதென்று கண்ணிற்கு மையினை இடுதலும் செய்யாதிருக்கின்றேன். அவ்விதம் யான் விடாது பார்த்துக் கொண்டிருக்கின்ற காதலரைப் பிரிந்து நின்றார் என்று ஏன் கருதுதல்வேண்டும் என்று தன் நினைவின் முதிர்ச்சியையும் அவனது உருவெளித் தோற்றத்தையும் கூறினாளாயிற்று.

**1128. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட**
**லஞ்சுதும் வேபாக் கறிந்து.**

இதுவுமது.

(பரி.) இ-ள். *காதலவர் நெஞ்சத்தாராக வெய்து உண்டல் அஞ்சுதும்*



*=காதலர் எம்நெஞ்சினுள்ளாராகலான் உண்ணுங்கால் வெய்தாக உண்டலை யஞ்சாநின்றேம்,—வேபாக்கு அறிந்து=அவர் அதனான் வெய்துறலையறிந்து.*

*எப்பொழுதும் எம்நெஞ்சின்கணிருக்கின்றவரைப்பிரிந்தாரென்று கருதுமாறென்னையென்பது குறிப்பெச்சம்.* (அ)

விளக்கம்:—"என் காதலர் என்னெஞ்சினுள்ளேயே இருக்கின்றாராதலால், உண்ணுங் காலத்தும் வெப்பமாகப் பொருள்களை யுண்ப

தற்குப் பயப்படுகின்றேன் ஏனெனில்! அவர் அதனால் வெப்பமடைதலை யறிந்து" என்று தன் நினைவின் முதிர்ச்சியைத் தனக்குள்ளேயே தலைவி சொல்லிக்கொண்டதாக இத்திருக்குறள் கூறுகின்றது அதாவது, "காதலர் என் நெஞ்சில் இடைவிடாது இருக்கின்றனரென்று அறிந்து வெப்பமாகிய பொருள்களை உண்டால் அதனால் அக்காதலர் வருந்துவர் என்று எண்ணி வெப்பமாகிய பொருள்களையும் உண்ணுமலிருக்கின்றேன். அவ்விதமிருக்க அது அறியாத சிலர் அவர் பிரிந்தாரென்று எண்ணுவது எதற்கு"' என்று தலைவி குறிப்பாகக் கூறினாளாயிற்று.

## 1129. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
## யேதில ரென்னுமிவ் வூர்.

வரைவிடை வைத்துப் பிரிவின்கட் டலைமகளாற்றாளாதற் பொருட்டுத் தோழி தலைமகனையியற்பழித்தவழி அவளியற்பட மொழிந்தது.

(பரி.) இ - ள். இமைப்பிற் கரப்பாக்கு அறிவல்=என்கண்ணிமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலையறிந்து இமையேன்;—அனைத்திற்கே ஏதிலர் என்னும் இவ்வூர்=அவ்வளவிற்கு அவரைத் துயிலாநோய் செய்தார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர். எ-று.

தன் கருத்தறியாமைபற்றிப் புலந்து சொல்லுகின்றாளாகலின், தோழியை வேறுபடுத்து 'இவ்வூர்' என்றான். ஒருபொழுதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்கற்பாலையல்லை யென்பதாம். (௯)

விளக்கம்:—"என் கண் இமை கொட்டுமாயின் அக்கண்ணுள்ளிருக்கின்ற காதலர் அவ்விமை கொட்டுகின்ற காலமும் மறைந்து இருத்தலை யறிந்து இமைகொட்டேன். அவ்விதம் என்னைவிட்டுப் பிரியாது என் கண்ணுள்ளேயே உள்ள அக்காதலரைத் 'தூங்காவண்ணை

மாக கோயின் உண்டுபண்ணினர்; அன்பு இல்லாதவர்' என்று இவ்வூர் சொல்லாநிற்கும்" என்று மணந்துகொள்ளக் கருதித் தலைமகன் பிரிந்து நின்றமையைக் கருதித் தலைமகள் மனம் ஆறுதலடையும் பொருட்டுத் தோழி தலைமகன் குறித்தகாலத்துவரவில்லை என்று அவன் இயற்கையைப் பழித்தகாலத்தும் தலைவியானவள் அவன் கருதியைப் புகழ்படச் சொல்லியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியானவள் தலைவிக்குத் தலைவன் மீதுள்ள காதலையறியாது அவனைக் கோபித்துச் சொல்லுகின்றபோது 'உயிர்த்தோழியாக இருந்தும் என் தலைவன்மீது எனக்கு உள்ள காதலையறியாது அயலவர்போல் என் தோழி உரைக்கின்றாள்' என்று தன் கருத்தை யறியாமையால் அவளை அயலவளாக்கியதுடன் ஒருபொழுதும் பிரியாத தன் தலைவரைப் பிரிந்தாரென்று கூறிப்பழித்தல்கூடாது என்றும் கூறினளாயிற்று.

1130. உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர்.

இதுவுமது.

(பரி.) இ-ள். என்றும் உள்ளத்துள் உவந்து உறைவர் = காதலர் எஞ்ஞான்றும் என்னுள்ளத்துள்ளே யுவந்துறையாநிற்பர், — இகந்து உறைவர் ஏதிலர் என்னும் இவ்வூர் = அதனையறியாது அவரைப் பிரிந்துறையா நின்றார் அன்பிலரென்றுசொல்லாநிற்கும் இவ்வூர்.' எ-று.

உவந்துறைவரென்றதனால் அன்புடைமைகூறினள். பிரியாமையும் அன்புமுடையாரை இலரெனப் பழிக்கற்பாலையல்லை யென்பதாம். (ப)

**விளக்கம்:**—"எம் காதலர் எக்காலத்தும் என் மனத்தினுள்ளேயே

விரும்பி வசிக்கின்றனர்; அவ்விதம் அவர் வசித்தலை யறியாது அவரைப் பிரிந்து வசிக்கின்றனர்; அதனால் அன்பில்லாதவர்" என்று இவ்வூர் சொல்லும் என்று தலைமகனைத் தலைமகள் இயல்பட மொழிந்தாளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் தலைவியானவள் தனக்குத்தலைவன்மீதுள்ள அன்புடைமையையும் தன்மீது தலைவனுக்கு உள்ள அன்புடைமையையும் கூறித் தோழியைப் பழிக்கற் பாலையல்லை என்று தடுத்துத் தன் காதல் சிறப்பையும் கூறினளாயிற்று.





## 114. அதிகாரம்.

### நாணுத்துறவுரைத்தல்.

(பரி.) அஃதாவது சேட்படுக்கப்பட்டு ஆற்றாத தலைமகன் தோழிக்குத் தன்னாணுத்துறவுரைத்தலும், அறத்தொடு நிற்பிக்கலுற்ற தலைமகள் அவட்குத் தன்னாணுத்துறவுரைத்தலுமாம். இது, காதன்மிக்குழி நிகழ்வதாகலின், காதற் சிறப்புரைத்தலின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, தோழியால் வாராவண்ணம் அகற்றப்பட்டு அவ்வகற்றலுக்கு ஆற்றானாகிய தலைமகனானவன் அத்தோழிக்குத் தனக்கு இயல்பாக உள்ள நாண் போய்விட்டமையைச் சொல்லுதலும், தாய் தந்தை முதலியோருக்குத் தலைவன் தலைவிக்கு உள்ள ஒழுக்கத்தைத் தோழியறிவித்து நின்றமையின் வரைவின் பொருட்டுத் தலைமகனைக் காணாது நின்ற தலைமகள் அவனைக் காணாமையால் தன்னுடைய நாணமிழந்தலை தோழிக்குச் சொல்லுதலும் ஆம்; இவ்விதம் நாணத்தைத் துறத்தல் அன்புமிகுந்த இடத்து உண்டாவது ஒன்றாதலால், காதல் சிறப்பு உரைத்தல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு இவ்வதிகாரம் வைக்கப்பட்டுள்ளது

1131. காம முழந்து வருந்தினர்க் கேம
மடலல்ல தில்லை வலி.

சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் சொல்லியது.

(பரி.) இ-ள். காமம் உழந்து வருந்தினர்க்கு = அரியராய மகளிரோடு காமத்தையனுபவித்துப் பின்னதுபெறாது துன்புற்றவாடவர்க்கு—ஏமம் மடல் அல்லது வலி இல்லை = பண்டும் ஏமமாய் வருகின்ற மடலல்லது இனி யெனக்கு வலியாவதில்லை. எ-று.

ஏமமாதல் = அத்துன்ப நீக்கும்வகை அவ்வனுபவத்தினைக்கொடுத்தல். வலி—ஆகுபெயர். பண்டுமாடவராயினர் இன்பமெய்திவருகின்றவாறுசிறக்க நின்னையதற்குத் துணையென்று கருதிக் கொன்னே முயன்ற யான் இது பொழுது அல்லாதமையையறிந்தேனாகலான் இனி யானுமவ்வாற்றான் அதனை யெய்துவலென்பது கருத்து. (க)

விளக்கம்:—"கிடைப்பதற்கு அரியராகிய பெண்களோடு காம இன்பத்தை அனுபவித்துப் பின்னர் அவ்வின்பத்தைப் பெறாது துன்



பத்தை யடைந்த ஆண்மக்கட்கு முன்னரும் காவலாய் வருகின்ற மடலேறுதல் அல்லாமல் வேறொன்றில்லை ஆகலான், இனி எனக்கு வலிமையுடையது ஆகநிற்பது மடலேறுதல் அன்றி வேறொன்றுமில்லை" என்று தலைவியைப் பெறுதகாலத்துப் பொறுக்கமுடியாதவனாகிய தலைமகன் சொல்லியது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தன்னை அகற்றுகின்ற தோழியிடத்துத் தலைவனானவன் "ஓ! தோழியே! பண்டைக்காலமுதல ஆண்மக்கள் தோழியரின் துணைகொண்டு இன்பம் அடைந்து வந்தாராதலால் அவ்விதமே உன்னைத் துணைகொண்டு இன்பம் அடைவதற்கு முயற்சிசெய்த யான் இப்பொழுது அம்முயற்சியால் யாதொரு பயனையும் அடைதல் முடியாது

'என்று அறிந்தேனாதலால், இனி இவ்வாறு வருந்துபவர் தங்களுக்குத் துணையாகக் கொண்டதாகிய மடலேறுதல் என்னும் செயலை யான் மேற்கொண்டு என் துன்பத்தினின்றும் நீங்கி இன்பத்தை யடைவேன்' என்று கூறினாயிற்று. இறையனாரகப்பொருள் ஒன்பாவது சூத்திர உரையில், "தலைமகன் ஒரு சொற்சொல்லும், என் சொல்லுமோ வெனின், இன்றி னாங்கு எல்லாம் இகக்கும், நின்னான் முடியுமெனக் கருதிவந்து உடம்பேன், நின்னான் முடியாமை உணரப்பட்டது, பட்டமையால் இனி இளிவந்தன செய்தாயினும் முடிப்பல், இதனை இன்றி பமையமறுகலானென்னும், இளிவந்தன செய்தலாவது, மடலூர்தலும் வரைபாய்தலும் என்றவாறு" என்று கூறியிருத்தலும் இங்கு ஒப்பு நோக்கற்பாலது.

## 1132. நோனா வுடம்பு முயிரு மடலேறு
## நாணினை நீக்கி நிறுத்து.

நாணுடைய நமக்கு அது முடியாதென மடல் விலக்கு
லுற்றுக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். நோனா உடம்பும் உயிரும் மடல் ஏறும் = அவ்வருத்தத்தினை, பொறாத வுடம்புமுயிரும் அதற்கேமமாய மடன்மாவினையூரக் கருதாநின்றன, —நாணினை நீக்கி நிறுத்து = அதனை விலக்குவதாய நாணினையகற்றி. எ-று.

வருந்தினார்க்கென மேல்வந்தமையிற் செயப்படுபொருள் சண்டுக் கூறாராயினர். மடல்— ஆகுபெயர். நீக்கிநிறுத்தென்பது ஒரு சொன்னீர்மைத்து. அறிவுநிறை யோர்ப்புக் கடைப்பிடி முதலிய முன்னே நீங்கவும் நாணீங்காது



நின்றது, அதுவுமிதுபொழுது நீங்கிற்றென்பான், உடம்புமுயிரும் என்றான். அவைதாந் தம்முணீங்காமற்பொருட்டு மடலேறுமென்றது அவன் தன்னாற்றாமை யறிந்து கடிதிற் குறைநேர்தனோக்கி. (உ)

**விளக்கம் :**—"பிரிந்திருத்தலால் உண்டாகும் வருத்தத்தைப் பொறுக்கமுடியாத உடம்பும் உயிரும் எனக்கு அத்துன்பத்தை நீக்கும் ஆதாரமாகிய மடலினை ஏறத் கருதாநிற்கும். அவ்விதம் ஏறுகின்ற மடலேறுதலை விலக்குகின்ற நாணினைப்போக்கி" என்று நாணமுடைய உனக்கு மடலேறுதல் முடியாது என்று மடலேறுதலை விலக்கிய தோழிக்குத் தலைமகன் சொல்லியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நாணமென்பது இல்லாதவரே மடலேறுதல் கூடும்; நாணமென்பது ஒன்று மேற்கொண்டு உள்ள உமக்கு அது முடியாது என்று கூறிய தோழியை நோக்கி, "தோழியே! நீ கூறியது ஒக்கும்; அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி, நாண் என்னும் நற்குணங்களுள் அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடியாகிய குணங்கள் முன்னமே என்னைவிட்டு நீங்கின. நாண் ஒன்றுமாத்திரம் என்னைவிட்டு நீங்காதிருந்தது; அந்நாணும் இப்பொழுது என்னைவிட்டு நீங்கியது. இனி, மடலேறுவது நிச்சயம்" என்று தோழி தன் குறையை அறிந்து விரைவாகக் குறையை முடிப்பாள் என்று கூறியதாயிற்று.

**1133.** நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்று
காமுற்றா ரேறு மடல். [டையேன்

நாணையன்றி நல்லாண்மையு முடைமையின்
முடியாதேன்றற்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன் = நாணும் மிக்க வாண்டகைமையும் யான் பண்டுடையேன்,—காமுற்றார் ஏறும் மடல் இன்று உடையேன் = அவை காமத்தானீக்குதலான், அக்காமமிக்காரேறும் மடலினை யின்றுடையேன். எ-று.

நாண = இழிவாயினசெய்தற்கண் விலக்குவது. ஆண்மை = ஒன்றற்குந் தளராது நிற்றல். அவை பண்டுள்ளன, இன்றுள்ளது இதுவேயாகலிற் கடிதின் முடியுமென்பதாம். (௩)

**விளக்கம்:**—"நாணத்தினையும் மிகுந்த ஆண் தன்மையினையும் யான் முன்னர் உடையவனாயிருந்தேன். அந்த நாணும் நல்ல ஆண்மை

யும் எனக்குள்ள காமத்துன்பத்தால் என்னைவிட்டு இப்பொழுது நீங்கு தலால், இனிக்காமமிருந்தவர் ஏறும் மடலேறுதலை இன்று உடைய வனாயிருக்கின்றேன்'' என்று தலைமகனானவன் நாணும் நல்லாண்மை யுமுடைய உமக்கு மடலேறுதல் முடியாதென்ற தோழிக்குச் சொல்லிய தாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "இழிவாகிய காரியங் களைச் செய்யவொட்டாது எதிர்நிற்கும் நாணத்தையும் ஒன்றிலுங்கும் தளராது இருக்கச் செய்கின்ற ஆண்மைத் தன்மையினையும் இப்போது எனக்கு நேர்ந்த காமத் துன்பத்தினால் போக்கிவிட்டேனாதலால், இனி மடலேறுதல் விரைவில் முடியுமென்று தலைவன் கூறினானாயிற்று.

## 1134. காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு நல்லாண்மை யென்னும் புணை.

நாணுநல்லாண்மையுங் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் அதனால் அவை நீங்குவனவல்ல வென்றாட்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். நாணொடு நல்லாண்மை என்னும் புணை = யான் றன்னைக் கடத்தற்குக் கொண்ட நாணும் நல்லாண்மையுமாகிய புணைகளை — காமக்கடும் புனல் உய்க்குமே = என்னிற் பிரித்துக் காமமாகிய கடிய புனல் கொண்டு போகாநின்றது. எ-று.

அதுசெய்யமாட்டாத ஏனைப்புனலினீக்குதற்குக் 'கடும்புனல்' என்றான், இப்புனற்கு அவை புணையாகா, அதனான் அவைநீங்குமென்பதாம். (௪)

விளக்கம்:—"காமத்தைக் கடப்பதற்குக் கொண்ட நாண், நல் லாண்மை ஆகிய புணைகளை என்னைவிட்டுப் பிரித்துக் காமமாகிய விரைந்து செல்லுகின்ற புனலானது கொண்டுபோகா நின்றது'' என்று காமவெள்ளத்திற்கு நாண், நல்லாண்மை என்னுமிரண்டும் தெப்பங்க

ளாதலால், அக்காம வெள்ளத்தைத் தாண்டிச் செல்வதற்குத் துணையாக நிற்குமேயல்லாது விட்டு நீங்குவனவல்லவே என்று சொல்லிய தோழிக்குத் தலைமகன் சொல்லியது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "காம வெள்ளமல்லாத ஏனைய வெள்ளமாயின் நாணினையும் நல்லாண்மையையும் நீக்குதல் முடியாது. இக்காம வெள்ளமோ எல்லா வெள்ளத்தினும் விரைந்து செல்லுகின்ற புனலாதலால் இவ்விரண்டு புணையினை அடித்துக்கொண்டு போகுமேயன்றி, அப்புணைகளைக் கொண்

8



டவர்களுக்குத் துணையாகமாட்டா" என்று காமத்திற்குள்ள வலிமையையும் கூறினாயிற்று.

1135. தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

இவ்வாற்றலையும் மாலும் நூக்கேவ்வாறு வந்தன
வென்றடைத்துச் சொல்லியது.

(பரி.) இ - ள். மாலை உழக்கும் துயர் மடலொடு = மாலைப்பொழுதின்கண் அனுபவிக்குந் துயரினையும் அதற்கு மருந்தாய மடலினையும் முன்னறியேன், — தொடலைக் குறுந்தொடி தந்தாள் = இது பொழுது எனக்கு மாலை போலத் தொடர்ந்த சிறுவளையினையுடையாடந்தாள். எ-று.

காமம் எனைப்பொழுதகளினு முளதேனும் மாலைக்கண் மலர்தலுடைமையின் 'மாலையுழக்குந்துயர்' என்றும், மடலும் அதுபற்றி வந்ததாகலின் அவ்விழிவும் அவளாற்றாப்பட்டதென்றும், அவடான்கீ கூறியதே கூறுமிளமையென்பது தோன்றத் 'தொடலைக்குறுந்தொடி' என்றுங் கூறினான். அப்பெயர் உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த வன்மொழித்தொகை. இவை அவடந்தனவாகலின் நின்னுனீக்குமென்பது கருத்து. (ரு)

விளக்கம்:—"மாலைப பொழுதினிடத்தே அனுபவிக்குந் துன்பக்

தினையும் அத்துன்பத்திற்கு மருந்தாகிய மடலினையும் நான் முன்பு அறி யேன், அவற்றை இப்பொழுது எனக்கு மாலைபோலத் தொடர்ச்சிபெற்ற இனமாகிய சிறிய வளைகளை அணிந்தவளாகிய இவள் தந்தாள்" என்று இவ்வித ஆற்றாமையும் மடலேற எண்ணிய எண்ணமும் நமக்கு எவ்வாறு வந்தன என்று கேட்ட தோழிக்குத் தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, காதலிருவர் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிந்து உள்ள காலமெல்லாம் காமம் துன்புறுத்தக் கூடுவது ஆயினும், மாலைக்காலத்தில் பூவொன்று மலர்வதுபோல அது அதிகரித்து நிற்பதால், அவ்வித காமத்தினை மாலையுழக்கும் துயர் என் றும், மடலூர்தலும் அக்காமத் துன்பத்தால் வந்ததாதலின் அவ் விரண்டும் தான் அடைவதற்கு இல்லாத தலைவியினால் தரப்பட்டது என்றும், அவ்வித தலைவியும் நீ சொல்லியதையே சொல்லும் இள மைப் பருவமுடையவளாதலால் தொடலைக் குறுந்தொடி என்றும் கூறி யதுடன், இவ்வித துன்பங்கள் உன் தலைவி தந்தனவாதலால் அவை



நீங்கவேண்டுமாயின் உன்னாலேயே நீங்கவேண்டும் என்றும் தன் கருத் தினைக் கூறினானாயிற்று.

1136. *மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

மடலூரும் பொழுது இற்றைக்குங் கழிந்ததென்றற்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். பேதைக்கு என் கண் படல் ஒல்லா = நின்பேதைகாரண மாக என்கண்கள் ஒருகாலும் துயிறலைப்பொருந்தா ;— யாமத்தும் மன்ற மட லூர்தல் உள்ளுவேன் = அதனால் எல்லாருந் துயிலு மிடையாமத்தும் யானி ருந்து மடலூர்தலையே கருதாநிற்பேன். எ-று.

பேதையென்றது பருவம்பற்றியன்று மடமைபற்றி. இனிக்குறை முடிப்பது நாளையெனவேண்டாவென்பதாம். (௬)

மடலூர்தலாவது இயற்கைப் புணர்ச்சிக்குப் பிறகுத் தோழியான வள் தலைமகளை, "இவ்விடத்துக் காவல் மிகுதி உள்ளது. நீர் இங்கு வருவது கூடாது" என்று சில பகல் தடுத்தகாலத்து அத்தடைகளால் தலைமகளைப் பார்க்க முடியாத தலைமகன் தாங்கமுடியாத காமத்துன்பத் தைக்கொண்டு, "இனி நான் என் தலைவிக்கும் எனக்கும் உள்ள அன்பின் மிகுதியை ஊரவர் அறியும்படி செய்து மணம் முடிப்பேன்" என்று எண் ணியவனாய்ப் பண்டைக் காலத்து வழக்கின்படி பனையினது கூர்மைதங்கிய கருக்கினால் குதிரை ஒன்றினையும் பனைமரத்திலுள்ள ஏனைய உறுப்புகளால் வண்டில் முதலானவும் செய்து கருக்கால் செய்த அக்குதிரையின்மேல் ஏறு வது. அவ்விதம் மடலேறுகின்ற காலத்து உடை ஒன்றுந் தரியாதவனாய் உடல் முழுவதும் நீற்றினைப் பூசி சித்திரம் எழுதுவான் ஒருவன் கையால் எழுதாது தானே தான் காதல்கொண்ட தலைவியின் உருவத்தை எழுதி முடித்து அவ்விதம் எழுதிய படத்தில் தன் பெயரையும் எழுதி, தன் கையில் பிடித்துக்கொண்டு ஊருக்கு நடுவே நான்குசந்துகள் கூடுகின்ற ஓர் இடத்தே உணவும் உறக்கமுமில்லாமல் தன் கையிலுள்ள படத்தில் உள்ள மகளைப் பார்க்கின்ற பார்வையும் அவ்விடத்தேயே பதிந்துகிடக்கின்ற மனமும் தணி யாத ஆவலுமுடையவனாய வேறு உணர்ச்சி ஒன்றுமல்லாமல் தனக்கு எவ்வித இடையூறுகள் வரினும் அவற்றை யெல்லாம் அறிதலில்லாமல் மழையிலும் வெயிலிலும் காற்றிலும் கலங்காது அவ்விடத்தேயே இருக்கவும், இசசெயலை யறிந்த அவ்வூரிலுள்ளவர்கள் ஒன்றாகக் கூடிவந்து "படத்தில் உள்ளவள் பொருட்டாக மடலை யேறுவையோ அவ்விதம் ஏறி அதற்கு உரிய

விளக்கம்:—"பேதைமையிருந்த உன் தலைவியின் காரணமாக என் கண்கள் ஒருகாலும் தூங்குவதில்லை ஆதலால் எல்லாரும் தூங்குகின்ற இடை யாமத்தும் யான் விழித்திருந்து மடலேறுவதையே எண்ணு வேன்" என்று தோழியானவள் தலைவனை நோக்கி இப்பொழுது மட லேறுவதற்குரிய பொழுதானது ஆய்விட்டதாதலால் இன்றைய தின மும் மடலேறுதல் என்பது ஒழிந்தது என்று சொல்லுதலும் அவளுக் குத் தலைவன் பதில் சொல்லியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அறியாமை மேற்கொண்டாளாகிய உன் தலைவியின் காரண மாக என் கண்கள் காமத் துன்பத்தால் எக்காலத்தும் தூங்காமல் உள் ளனவாதலால், நான் எண்ணிய மடலை யேறுவதற்கு இதுதான் பொழு தென்று சொல்லுவதற்கு இல்லை. எல்லோரும் தூங்குவதாகிய நடுராத் திரியிலும் யான் மடலேறுதல்கூடும். ஆதலால், இனி என் குறையை முடிப்பது நாளைக்கு ஆகும் என்று இருந்துவிடாதே; இன்றே முடிப் பது நலமாகும் என்று கூறினனயிற்று.

---

சோதனையைக் கொடுப்பாயோ, கொடுப்பாயாயின் அவளை உனக்கே தரு வோம்" என்று கூறுவர். அதைக் கேட்ட தலைமகன் அவ்விதமே செய்வேன் என்பானாயின் அச்செயலை அரசனுக்கு அறிவித்து அவன் ஏவல்கொண்டு ஏறுதல் வேண்டும். அவ்விதம் ஏறுங்காலத்து வெண்பூளைப்பூ, எலும்பு, எருக்கின்முகை இவைகளால் ஆகிய மாலையை மார்பில் அணிந்துகொண்டு அம்மடல் என்கின்ற குதிரையின்மீது ஏறுதல் வேண்டும். ஏறியவுடன் அம் மடல் மாவில் கட்டிய கயிற்றினை வீதியில் இழுத்த காலத்து உருண்டு ஓடு கின்ற வண்டில் முதலாகிய பனங்கருக்குகள் அறுத்த இடமெல்லாம் இரத் தம் தோன்றுமல் வீரியம் தோன்றுமாயின் அத்தலைமகன்மீது உண்மையா கிய காதல் உடையவன் என்று அவ்வூரவர் அவளைப் பலவித அலங்காரங்க ளுடன் மணஞ்செய்து கொடுப்பர். அவ்விதம் வீரியம் தோன்றாது இரத்தம் தோன்றுமாயின் காதல் இல்லாது பழி கூறுகின்றான் என்று எண்ணிக் கொலைசெய்துவிடுவர் என்பதேயாகும். இம்மடலேறும் விதத்தைப் பின் வரும் திருக்கோவையார் செய்யுளாலும் அறிதல்கூடும்.

''கழிகின்ற வென்னையு நின்றநின் கார்மயி றன்னையும்யான்
கிழியொன்ற காடி யெழுதிக் கைக்கொண் டென்பிறவி கெட்டின்
றழிகின்ற தாக்கிய தாளம்பலவன் கயிலை யந்தேன்
பொழிகின்ற சாரலுஞ் சீரூர்த் தெருவிடைப் போதுவனே.''



1137 கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

பேதைக்கென்கண் படலொல்லா வென்பதுபற்றி அறிவிலாராய மகளிரினும் அஃதுடையாராய வாடவரன்றே ஆற்றற்பால ரென்றாட்குச் சொல்லியது.

(பரி.) இ - ள். கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏறாப் பெண்ணின் = கடல்போலக் கரையற்ற காமநோயினையனுபவித்தும் மடலூர்தலைச் செய்யாது ஆற்றியிருக்கும் பெண்பிறப்புப்போல — பெருந்தக்கது இல் = மிக்க தகுதியினையுடைய பிறப்பு உலகத்திலில்லை. எ-று.

பிறப்புவிசேடத்தால் அவ்வடக்கம் எனக்கில்லையாகா நின்றது, நீ யஃதறிகின்றிலை யென்பதாம். இத்துணையுந் தலைமகன்கூற்று, மேற்றலைமகள் கூற்று. (எ)

**விளக்கம்:**—''அளவு சொல்லக்கூடாத சமுத்திரம்போலக் கரையில்லாத காம நோயாகிய துன்பத்தினை அனுபவித்து இருந்தும், மடல் என்பது ஒன்றினை ஏறாது பொறுத்துக் கொண்டிருக்கும் பெண்கள் பிறப்பினைப்போல் மிகத் தகுதியுடைய பிறப்பொன்று இவ்வுலகத்திலில்லை'' என்று பேதைக் காரணமாக நான் தாங்குவதில்லை என்று மேல்கூறிய தலைவனை நோக்கித் தோழியானவள் அறிவின் மிகுதி இல்லாத பெண்களைப் பார்க்கினும் அவ்வறிவின் மிகுதியுடைய ஆண்மக்களன்றோ காமத் துன்பத்தினைப் பொறுத்துக்கொண்டு மடலென்பது ஏறாது நிற்றல் வேண்டுமென்று சொல்லியதற்கு அவன் பதில் கூறியதாக

இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தோழியே! பெண்கள்பிறப் பின் விசேஷத்தால் அடைந்துள்ள அடக்கத்தை நான் அடைவதற்கு இல்லை. நீ அதனை அறியாது கூறுகின்றாய். என்னைவிட்டு நீங்காது நின்ற நாணமும் இக்காமத் துன்பத்தால் இதுபொழுது என்னைவிட்டு நீங்கிற்று" என்று தன் நாண் துறந்தமைத் தலைவன் இதுகாறும் கூறினு னாயிற்று. இனித் தலைமகள் கூற்று நிகழும்.

1138. நிறையரியர் மன்னளிய ரென்னுது காம
மறையிறந்து மன்று படும்.

நாப்புச்சிறைமிக்குக் காமம் பெருகியவழிச் சொல்லியது.

(பரி.) இ-ள். நிறை அரியர் (என்னுது)=இவர் நிறையால் காமீதார் தற்கரியரென் றஞ்சுதல்செய்யாது,—மன் அளியர் என்னுது=மிகவுமளியீ



கத்தக்காரென் றிரங்குதல் செய்யாது,—காமம் மறை இறந்து மன்றுபடும்= மகளிர் காமமும் அவர் மறைத்தலைக்கடந்து மன்றின்கண்ணே வெளிப் படுவதா யிருந்தது. எ-று.

என்னுதென்பது முன்னுங்கூட்டி மகளிரென்பது வருவிக்கப்பட்டது. எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. மன்றென்றது தந்தைதன்னையரை நோக்கி. உலகத்துப் பெண்பாலார் காமத்தியல்பு கூறுவாள்போன்று, தன் காமம் பெருகியவாறும் இனியறத்தொடு நிற்றல்வேண்டுமென்பதுங் குறிப் பாற் கூறியவாறாயிற்று. (அ)

விளக்கம் :—"பெண்களிடத்துள்ள கற்பின் தன்மையால் நாம் இவர்களைத் துன்புறுத்துதல் கூடாது என்று பயப்படாமலும், பேதை மையுடையாரதலால் இவர்கள் நம்மால் காக்கப்படவேண்டியவர்களாய் உள்ளார்கள் என்று அவர்பால் இரக்கங்கொள்ளாமலும் பெண்கள் அடைந்த காமமானது அவர்கள் எவ்வளவு மறைத்தாலும் அம்மறைப்

பின்னைக் கடந்து யாவரும் அறியக்கூடிய வண்ணம் வெளிப்படுவதாக இருந்தது" என்று தலைவி சொல்லியதாக இத்திருக்குறள் கூறுகின்றது அது என்னையோவெனின்? தலைவி பருவம் முதிர்ந்தாளென்று கண்ட தாயானவள் அவளை வெளிப்போகாவண்ணம் வீட்டிலேயே இருக்கச் செய்தகாலத்து தலைவியானவள் தலைவனைக் காண்பதற்கு இல்லாமையால் காமம் மிகுந்து அதனை யாவரும் அறியும்படி இருந்ததுடன், இனி மணந்துகொள்ளவேண்டும் என்கிற எண்ணமுங்கொண்டு அவ்வெண்ணத்தைத் தாய் தந்தை முதலிய தலைவருக்குக் கூறியே முடித்தல்வேண்டும் என்று தன்னுடைய உயிர்த் தோழிக்குத் தன் காமத் துன்பத்தைக் கூறியதாயிற்று என்பதாம்.

## 1139. அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
## மறுகின் மறுகு மருண்டு.

இதுவுமது.

(பரி.) இ - ள். எல்லாரும் அறிகிலார் என்று=யான்முன்னடங்கிநிற்றலான் எல்லாருமென்னையறித லிலர் இனியவ்வாறு நில்லாதியானே வெளிப்பட்டறிவிப்பலென்று கருதி,—என்காமம் மறுகில் மருண்டு மறுகும்=என் காமம் இவ்வூர்மறுகின்கண்ணே மயங்கிச்சுழலாநின்றது. எ - று.

மயங்குதல்=அம்பலாதல். மறுகுதல்=அலராதல். அம்பலுமலருமாயிற்று, இனியறத்தொடுநிற்றல்வேண்டு மென்பதாம். அறிவிலாரென் புதூஉம் பாடம். (கூ)

நாணுத்துறவுரைத்தல் 63

விளக்கம்:—"என்னுடைய காமமானது 'நான் முன்னர் அடங்கி இருந்ததால் என்னை எல்லாரும் அறியாது இருந்தனர். இனி அவ்விதம் அடங்கி நில்லாது யானே வெளிப்பட்டு யாவருக்கும் அறிவிப்பேன்' என்று எண்ணியதாய் இவ்வூர் தெருவினிடத்தே மயங்கிச் சுழலுகின்றது" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்

றது. அது என்னையோ வெனின்? கரைகாணுத காமத் துன்பத்தால் யான் வருந்துவதைக் கண்ட ஊரவர் அம்பலும் அலரும் எடுப்பாராயிற்று. இனி, இவ்விதம் களவு ஒழுக்கத்தில் நிற்றற்கு இல்லாமையாலும், காமத் துன்பத்தை அடக்குவதற்கு முடியாததலாலும் தன் தாய் தந்தையருக்குத் தனக்குள்ள துன்பத்தை யறிவித்து மணத்தை முடித்தல்வேண்டும் என்று தோழிக்கு அறிவுறுத்தியதாயிற்று.

**1140.** யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

**செவிலிக்கறத்தோடு நின்றுவைத்து யானிற்குமாறென்னை**
**யென்று நகையாடிய தோழியோடு புலந்து**
**தன்னுள்ளே சொல்லியது.**

(பரி.) இ - ள். யாம் கண்ணிற்காண அறிவில்லார் நகுப = யாங்கேட்குமாறு மன்றிக கணணுற்காணுமாறு எம்மையறிவிலார் நகாநின்றார், — யாம் பட்ட தாம் படாவாறு = அவ்வாறனைஞ் செய்கின்றது யாமுற்றநோய்கள் தாமுறுமையான். எ - று.

கண்ணினென்றது முன்கண்டறியாமையுணர நின்றது. அறத்தொடு நின்றமையறியாது வரைவு மாட்சிமைப்படுகின்றிலனெனப் புலக்கின்றுளாகலின், எதிலனாக்கிக் கூறினள். இது, நகாநின்று சேட்படுக்குந்தோழிக்குத் தலைமகன் கூறியதாங்கால், அதிகாரத்திற் கேலாமையறிக. (ம)

**விளக்கம்** :—"யாம் கேட்கும் விதம் வாயால் சொல்லுவது மாத்திரம் அல்லாமல் கண்ணுல் பார்க்கும் விதமும் எம்மை நோக்கி அறிவில்லாதவர் நகைக்கின்றார். அவர் அவ்விதம் நகைசெய்வது நாம் அடைந்த் காமத் துன்பங்களை அவர் அடையாமல் இருப்பதால்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, 'தோழியானவள் தன் தலைவியினது காமத் துன்பத்தின உடனிருந்து பார்த்தாளாதலால் அதனை வளர்த்த தாய்க்குக் கூறுவாளாய்

"அன்னையே உன் மகளுக்குப் பருவம் வந்துவிட்டது நீ அப் பருவத்தை அவளைப் பெற்ற தாய்க்கும் தந்தைக்கும் கூறி மணம் முடித்தல் வேண்டும்" என்று குறிப்பித்துத் தன்தொழில் முடித்தாளாயினும் தான் செய்துவந்த காரியத்தைத் தலைவியறியாள் என்று எண்ணி அவள் எதிரில் நின்று 'யான் இவ்விடத்து நிற்பது எதன்பொருட்டு' என நகையாடுதலும், நகையாடிய தோழியைநோக்கி, இவள் நம் காமத் துன்பத்தை அறிந்தும் மணத்திற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்யாது அயலாள் போன்று நம்மெதிரில் நின்று நகைக்கின்றாளாதலால் ஊரவர் அம்பலுக்கும் அலருக்கும் துணையாகி நின்றாளேயன்றி நமக்குத் துணையாகவில்லை என்று தோழியின் உண்மை யறியாது பிணக்குக்கொண்டு கூறினளாயிற்று.

---

## 115-ம் அதிகாரம்.

---

## அலரறிவுறுத்தல்.

(பரி.) அஃதாவது களவொழுக்கம்வேண்டிய தலைமகன் பிறர்கூறுகின்றவலர் தனக்காகின்றவாற்றைத தோழிக்கறிவுறுத்தலும், வரைவாக உடன்போக்காக ஒன்றுவேண்டிய தலைமகளுக்தோழியும் அவ்வலரையவன்றனக் கறிவுறுத்தலுமாம். இது, காணுத்துறந்தவழி நிகழ்வதாகலான், நாணுத்துறவுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது களவினல் தலைவியைச் சேர்ந்து ஒழுக வேண்டிய ஒழுக்கத்தை விரும்பும் தலைமகனைவன் பிறர் தன்னைப் பற்றிச சொல்லுகின்ற பழி தூற்றலானது தனக்கு நன்மையைத் தரு

கின்ற விதத்தை தோழிக்குச் சொல்லுதலும், மணஞ்செய்து கொள்வதையோ தலைவனுடன் போதலையோ ஆகிய இரண்டனுள் ஒன்றை விரும்பிய தலைமகளும் தோழியும் பிறர் கூறும் பழிதூற்றலை அத் தலைவனுக்குச் சொல்லுதலுமாகும். இவ் வலரறிவுறுத்தல் நாண் நீங்கிய வழி உண்டாவது ஒன்று ஆதலால், நாணுத்துறவுரைத்தல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வைக்கப்பட்டுள்ளது.

## அலரறிவுறுத்தல் 65

**1141.** அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

அல்லகுறிப்பட்ட பின்னைஞான்று வந்த தலைமகனைத் தோழி
யலர் கூறி வரைவுகடாயவழி அவன் சொல்லியது.

(பரி.) இ-ள். அலர் எழ ஆருயிர் நிற்கும் = மடந்தையொடெம்மிடை நட்பு ஊரின்கணலராயெழுதலான் அவளைப்பெறாது வருந்தமென்னரிய வுயிர் பெற்றதுபோன்று நிலைபெறும்; — அதனைப் பாக்கியத்தால் பலர் அறியார் = அந்நிலைபேற்றைத் தெய்வத்தால் யானே யறிவதல்லது கூறுகின்ற பலருமறியார். எ-று.

அல்லகுறிப்பட்டுத் தலைமகளையெய்தப்பெறாத வருத்தமெல்லாந் தோன்ற 'அரியவுயிர்' என்றும், அங்ஙனமரியாளை எளியளாக்கி யெடுக்கின்றமையின், அஃதவ்வாருயிர்க்குப் பற்றுக்கோடாகாநின்றதென்பான் 'அலரெழ வாருயிர் நிற்கும்' என்றும், பற்றுக்கோடாதலை அவ்வேதிலாரறியிற்றூற்றொழிவர், ஒழியவே ஆருயிர்போமாகலான் அவரறியாதொழிகின்றது தெய்வத்தானென்றுங் கூறினான். முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. (க)

விளக்கம்:—"மடந்தைப் பருவம் உடையாளாகிய உன் தலைவிக்கும் எமக்கும் உள்ள நட்பானது இவ்வூரினிடத்தே பழி தூற்றலாக எழுதலால் அவளை அடையாது வருந்துகின்ற என் அருமையாகிய உயிர் அவளை அடைந்ததுபோல் நிலைபெற்றுள்ளது. அவ்விதம் நிலை பெற்றதைத் தெய்வத்தால் நானே அறியக்கூடுமே யன்றி பழி கூறு

கின்ற பலரும் அறியமாட்டார்கள்'' என்று குறித்த இடத்து அடை வதற்கு இல்லாது அடுத்த தினத்து வந்துசேர்ந்த தலைமகனைக் கண்டு தோழியானவள் உலகோர் கூறும் பழியை எடுத்துக்கூறி இனி மணந்து கொள்ளுதல் வேண்டும் என்று சொல்லிய காலத்து அவன் பதில் கூறிய தாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, குறித்த இடத்துச் செல் லாது தவறித் தலைமகளையடையக் கூடாமல் மறுதினத்துச் சென்ற தலைமகனைக்கண்ட தோழியானவள் 'உமக்கும் எனது தலைவிக்கும் நடக் கின்ற களவுப் புணர்ச்சியை யாவரும் அறிந்தார் ஆதலால், இப்போது பழிதூற்றுகின்றனர். அப்பழி ஒழியும் வண்ணம் அவளை நீர் இனி மணந்து கொள்ளுதல் வேண்டும்' என்னலும், தலைமகனானவன், 'ஓ' தோ ழியே! குறித்த இடத்துச் சென்று அடையாது குறிதவறி அடைந்த வருத்தங்களை யெல்லாம் உலகவர் தூற்றும் பழி ஒன்றே போக்குகின்



றது எனெனில்? அடைவதற்கு மிக அருமையாகிய உனது தலைவியை நான் அடைகின்றேன் என மிக எளியளாக்கி ஊரவர் பழிதூற்றுகின்று ராதலால், இனி நான் அவளை அடைவேனென்பது திண்ணமாயிற்று அது எவ்வாறெனில்'' ஊரவர் பழியை அறிந்த தாய் தந்தையர் இனி எவ் விதமேனும் மணஞ்செய்யத் துணிவர் ஆகவே, நான் அவளை அடைதல் கூடும். இவ்வுண்மை அறியாது உலகத்தவர் தூற்றும் பழியானது அலைந் துநிற்கின்ற கொடிக்குப் படருவதற்கு ஓர் கொம்பு கிடைத்ததுபோல் அவளை அடையாது நிற்கின்ற எனக்குத் தெய்வத் திருவருளால் உயிர் நிலைத்து நிற்கும் வழி ஒன்றாயிற்று'' என்று, ஊரவர் கூறும் பழி தனக்கு நன்மையாகவுள்ளது என்று கூறினனாயிற்று.

1142. மலரன்ன கண்ணா ளருமை யறியா
அலரெமக் கீந்ததிவ் வூர்.

இதுவுமது.

(பரி.) இ-ள். மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது=மலர் போலும் கண்ணையுடையாளது எய்தற்கருமையறியாது,—இவ்வூர் அலர் எமக்கு ஈந்தது=இவ்வூர் அவளையெளியளாக்கி அவளோடலர்கூறலை எமக்குபகரித்தது. எ-று.

அருமை அல்லகுறிப்பாட்டானும் இடையீடுகளானும் ஆயது. ஈந்த தென்றான், தனக்குப் பற்றுக்கோடாகலின். அலர்கூறுவாரை அவர்செய்த வுதவிபற்றி 'இவ்வூர்' என்றான். (உ)

விளக்கம்:—"மலர்போலும் கண்ணையுடைய தலைவியினது அடைதற்கு அருமையை அறியாமல் இவ்வூரானது அவளை எளியளாக்கி அலர் தூற்றுதல் எனக்கு உபகாரத்தைச் செய்ததாயிற்று" என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பல நாட்களாகப் பல இடையூறுகளால் அடையப்பெறாத தலைவியைப் பழிதூற்றுதலால், தான் அடைவதற்கு ஓர் வழியுண்டாயிற்று என்று எண்ணினானாதலால் அலர் கூறுகின்றவரை உபகாரஞ் செய்பவராக எண்ணி அவரை அவர் செய்த உதவிக்கு நன்மையுடையார் என்று மகிழ்ந்து கூறினானாயிற்று.

## அலரறிவுறுத்தல் 67

1143. உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

இதுவுமது.

(பரி.) இ-ள். ஊர் அறிந்த கௌவை உறாதோ=எங்கட்குக் கூட்டமுண்மை இவ்வூரறிதலான் விளைந்தவலர் எனக்குறுவதொன்றன்றோ,—அதனைப்பெறாது பெற்றன்ன நீர்த்து=அதுகேட்டவென்மனம் அக்கூட்டத்தைப் பெறாதிருந்தே பெற்றாற்போலு நீர்மையையுடைத்தாகலான். எ-று.

பெற்றன்னநீர்மை=பெற்றவழியுளதாமின்பம்போலுமின்பமுடைமை.

நீர்த்தென்பதற்கேற்ற மணமென்னும் வினைமுதல் வருவிக்கப்பட்டது. (௩)

விளக்கம் :—"தலைவிக்கும் எனக்கும் உள்ள நட்பினை இவ்வூரவர் அறிவதால் உண்டாகிய பழிதூற்றல் எனக்கு மிகுதியும் பொருந்துவது ஒன்று அன்றோ! ஏனெனில்? அப்பழி தூற்றலைக் கேட்ட என் மனமானது அவளைப் பல தினங்களாக அடையப் பெறாது இருந்த எனக்கு அடைந்தாற்போலும் நன்மையை உண்டாக்குதலால்" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பழிகூறுதலைக் கேட்ட தலைமகன் அது தனக்குத் துன்பம் நீக்கி இன்பத்தைத் தருவதாக உள்ளது என்று தோழிக்குக் கூறியதாயிற்று.

## 1144. கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
## தவ்வென்னுந் தன்மை யிழந்து.

இதுவுமது.

(பரி.) இ-ள். காமம் கவ்வையால் கவ்விது=என்காமம் இவ்வூரெடுக்கின்ற அலரானே யலர்தலையுடைத்தாயிற்று;—அது இன்றேல் தன்மை இழந்து தவ்வென்னும்=அவ்வலரில்லையாயின், தன்னியல்பிழந்து சுருங்கும். எ-று.

அலர்தல்=மேன்மேன்மிகுதல். செவ்வையுடையதனைச் செவ்விதென்றாற்போலக் கவ்வையுடையதனைக் 'கவ்விது' என்றார். இயல்பு=இன்பம்பயத்தல். 'தவ்வென்னும்' என்பது குறிப்புமொழி; "நூல்கால் யாத்த மாலை வெண்குடை—தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப" என்புழியுமது. (௪)

விளக்கம்:—"என்னுடைய காமமானது இவ்வூரவர் கூறுகின்ற பழிதூற்றலால் மலர்ச்சியை யடைந்ததாயிற்று. அவ்விதம் அவர் பழி



கூறுவிடில் அக்காமமென்னும் மலர் மலராத தன் இயற்கை கெட்டுச் சுருங்கிவிடும்" என்று தலைவன்கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஊரவர் பழிதூற்றலைச் சூரியனாகவும் தன் காமத்தை ஓர் அரும்பாகவும் உருவகப்படுத்தி அச்சூரியனால் இவ்வரும்பு மலர்ந்து

மணந்தது என்றும், இல்லாவிடில் காமமாகிய அரும்பானது மலராது சுருங்கிப் போய்விடும் என்றும் கூறினுயிற்று ஏனெனில்? சூரிய வொளிமலர்வதற்குக் காரணமாவதுபோல் அலர் தூற்றல் காம இன்பத்தை அநுபவித்தற்கு இடமாக நிற்பதாயிற்று

1145. களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

இதுவுமது.

(பரி.) இ-ள். களித்தொறும் கள் உண்டல் வேட்டற்று = கள்ளுண்பார்க்குக் களிக்குந்தோறுங்கள்ளுண்டல் இனிதாமாறுபோல, — காமம் வெளிப்படுந்தோறும் இனிது = எனக்குக் காமம் அலராந்தோறும் இனிதாகாநின்றது.

வேட்கப்பட்டற்றாலென்பது வேட்டற்றாலெனநின்றது. வேட்கைமிகுதியால் அலரும் இன்பஞ்செய்யாநின்றதென்பதாம். (ரு)

விளக்கம் :—"கள்ளினைக் குடிப்பார்க்கு மயக்கங் கொள்ளுந்தோறும் கள்ளினைக் குடித்தல் இனியது ஆவதுபோல், எனக்குக் காமமானது பழி தூற்றுந்தோறும் இனிமையாகும்" என்று தலைவன் ஊரவர் தூற்றும் அலர் தனக்கு இனிமையாக உள்ளது என்று கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனின்? கள்ளுண்பான் ஒருவன் அக்கள்ளினால் உண்டாகும் மயக்கம் துன்பத்தைத் தருவதாயினும், மேலும் மேலும் அக்கள்ளினையே உண்டு களித்தல் உலக இயல்பாதலால், காம இன்பம் கொண்டானொருவனும் ஊரவர் அலரைத் தன்னுயிர்க்கு உறுதியென்று எண்ணுதல் வேண்டும் என்று கூறியதாயிற்று.

1146. கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

இடையீடுகளானும் அல்லகுறியானுந் தலைமகனையெய்தப்பெறாத தலைமகள் அவன்சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரறிவுறீஇ வரைவுகடாயது.

(பரி.) இ-ள் கண்டது ஒருநாள் = யான் காதலரைக் கண்ணுறப்பெற

அவ்வளவிற்றன்றித் திங்களைப்பாம்புகொண்டவலர்போன்று உலகெங்கும் பரந்தது. எ - று.

காரியத்தைக் காரணமாக வுபசரித்துப் 'பாம்புகொண்டற்று' என்றான். இருவழியும் மன்னும் உம்மையும் அசைநிலை. காட்சியின்றியும் அலர்பரக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகாது, வரைந்துகோடல்வேண்டு மென்பதாம். (௬)

விளக்கம்:—"யான் என்காதலரைப் பார்க்கப்பெற்றது ஒருநாளே யாகும். அவ்வொரு நாள் பார்த்ததாலாகிய அலர் தூற்றலோ பார்த்த அளவாக இல்லாமல் சந்திரனை ராகுக்கோள் விழுங்கிய அலர் போன்று உலகம் முழுவதும் பரந்து விட்டது" என்று தலைவியானவள் பல இடையீடுகளானும் குறித்த இடங்களில் தலைவன் எதிர்ப்படாமையா னும் அத்தலைமகனை அடையக் கூடாதவளாய் அவன் மதிலிற்கு அப் புறமிருக்கத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தனக்கு உற்ற அலரைக் கூறி மணந்து கொள்ளுதல் வேண்டும் என்று கூறினாள் என்று இத் திருக்குறள் கூறுகின்றது அதாவது, "உலகத்தவர் சந்திரனைமூடிய இருளைக் கண்டு தாங்கள் பாராத ராகுக்கோளினைக் கண்டார் போன்று ராகு சந்திரனை விழுங்கிற்று என்று கூறுவதுபோல், நான் ஒரு நாள் என் காதலரைக் கண்ட காட்சியாலேயே இவ்வூரவர் எனக்கும் என் தலைவருக்கும் மிகுதியாகிய களவு ஒழுக்கம் நிகழ்கின்றது என்று அலர் தூற்றுகின்றனர். இனி, இவ்விதம் களவுப் புணர்ச்சி ஆகாது; ஆதலால் தோழியே! மணந்துகொண்டு இன்பத்தை அநுபவித்தல் வேண்டும்" என்று மதிற்புறத்தே நிற்கும் தலைவன் கேட்கும்படி கூறினாளென்பதாயிற்று.

1147. ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன்
னீராக நீளுமிந் நோய்.

வன்ரவுநீட ஆற்றளாய தலைமகனைத் தலைமகன்,சிறைப்புறத்தா
னாகவறிந்த தோழி ஊரவாலரும் அன்னைசொல்லுநோக்கி
யாற்றல்வேண்டுமெனச் சொல்லெடுப்பியவழி
அவள் சொல்லியது.

(பரி.) இ-ள். இக்காமநோய்=இக்காமநோயாகிய பயிர்,—ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல் நீராக நீளும்=இவ்வூரின்மகளிரெடுக்கின்ற அலர்



எருவாக அதுகேட்டு அன்னை வெகுண்டுசொல்லுகின்ற வெஞ்சொல் நீராக வளராநின்றது. எ - று.

ஊரவரென்பது தொழிலான் ஆணொழிந்துநின்றது. ஏகதேசவுருவகம் சுருங்குதற்கேதுவாவனதாமே விரிதற்கேதுவாகாநின்றன வென்பதாம் வரைவானுதல் பயன். (எ)

விளக்கம்:—“இக்காம நோயாகிய பயிர் இவ்வூரிலுள்ள பெண்கள் தூற்றுகின்ற பழிச் சொற்களையே எருவாகவும், அவ்விதம் அச்சொற்களைக் கேட்டுத் தாயானவள் கோபித்துச் சொல்லுகின்ற கொடுஞ்சொற்களை நீராகவும்கொண்டு வளர்கின்றது” என்று மணஞ்செய்துகொள்வதற்குத் தாழ்த்த காலத்து அக்காலத்தாழ்வைப் பொறுக்கமுடியாத தலைமகளைநோக்கித் தோழியானவள் மதிற்புறத்தில் தலைவன்வந்திருந்தகாலம் பார்த்துத் “தலைவியே! ஊரவர் தூற்றுகின்ற அலராகிய சொற்களையும் அவைகேட்டுத் தாய் சொல்லுகின்ற கோபச் சொற்களையும் நீ பார்த்து அதன் பொருட்டேனும் பொறுத்துக்கொண்டு இருத்தல் வேண்டும்” என்று வலிந்து சொல்லிய காலத்துத் தலைவியானவள் பதில் கூறியதாக

இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் காம நோயானது பொறுமையால் சுருக்கிக்கொள்ள முடியுமாயினும், ஊரவர் பழியாலும் தாய் கோபத்தாலும் சுருக்குவதற்கு இல்லாது விரிந்து நிற்கின்றது. ஆதலால், மணந்து கொள்வதே பயனாகும் என்று கூறியதாயிற்று.

1148. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல். [யாற்

இதுவுமது.

(பரி.) இ-ள். கௌவையால் காமம் நுதுப்பேமெனல் = எதிலாரெடுக்கின்ற அலரால் நாங்காமத்தை யவித்துமென்று கருதுதல்—நெய்யால் எரி நுதுப்பேமென்றற்று = நெய்யாலெரியையவித்துமென்று கருதுதலோடொக்கும். எ-று.

மூன்றனுருபுகள் கருவிக்கண் வந்தன. வளர்தற்காரணமாய அலரால் அவித்தல்கூடா தென்பதாம். (அ)

விளக்கம்:—"அயலவர் தூற்றுகின்ற பழிச் சொற்களைக் கேட்டு நம்முடைய காமத்தை நாம் போக்கிவிடுவோம் என்று எண்ணுதல் நெய்யினால் தீயினை அவித்துவிடுவோம் என்று ஒருவர் எண்ணுவதற்குச்



சமானமாகும்" என்று தலைவி தோழிக்குக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நெய்யை ஊற்றி எரிகின்ற நெருப்பை அவித்து விடலாம் என்று எண்ணி ஒருவன் செய்வானானால் எவ்வாறு அந்நெய்யினது தகுதியால் அத்தீயானது அதிகரிக்கின்றதோ அதுபோல் ஊரவர் கூறும் பழிச் சொற்கள் காமத்துன்பத்தை அதிகப் படுத்துமே யன்றி அதனை ஒரு சிறிதும் நீக்கா என்று கூறியதாயிற்று.

1149. அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

வரைவிடைவைத்துப் பிரிவின்க ணாற்றாய தலைமகள் அவன் வந்து சிறைப்புறத்தானாதலறிந்து அலரஞ்சியாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். அஞ்சலோம்பு என்றார் பலர் காண நீத்தக்கடை=தம் மை யெதிர்ப்பட்டஞான்று நின்னிற்பிரியேன் அஞ்சலோம்பென்றவர் தாமே இன்று கண்டார் பலரும் நாணும்வகை நம்மைத் துறந்தபின்—அலர் நாண ஒல்வதோ=நாமேதிலார் கூறுமலருக்கு நாணக்கூடுமோ கூடாது.

நாணவென்னும் வினையெச்சம் ஒல்வதென்னுந்தொழிற்பெயருள் ஒல்லு தற்றொழிலோடு முடிந்தது. கண்டார் நாணுநிலைமையமாய யாம் நாணுதல் யாண்டைய தென்பதாம். (க)

விளக்கம்:—"தன்னைக் கண்டகாலத்து "உன்னைவிட்டுப் பிரியேன்; அஞ்சுதல் வேண்டுவதில்லை; உன்னை நீ காத்துக்கொள்' என்று உறுதி கூறிய அவரே இன்று பார்ப்பவர் பலரும் நாணங் கொள்ளும் விதம் நம்மை நீங்கிய பிறகு நாம் அயலவர் கூறும் பழிச்சொற்களுக்கு நாணு தல் கூடுமோ? கூடாததாகும்" என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மணஞ்செய்வதற்குக் குறித்துள்ள நாட்களின் நடுவில் தலை வன் பிரிந்து உள்ள தன்மையால் பொறுக்க முடியாத தலைமகளானவள் தலைவன் மதிற்புறத்தில் வந்து இருத்தலை அறிந்து 'ஊரவர் அலருக்குப் பயந்தாகிலும் நீ பொறுத்தல் வேண்டும்' என்று தோழி கூறியதைக் கேட்டுப் பதில் கூறுவாளாய் "தோழியே! நம்மைப் பார்த்தவர் நம்மு டைய நிலைகண்டு நாணவேண்டிய நிலையினையடைந்த நாம் பிறர் தூற்றும் அலர் பொருட்டு அஞ்சி நாணுதல் எங்ஙனம் கூடும்? ஆதலால் நீ ஆற் றுதல் வேண்டும் என்று கூறியது முடியாததாகும்" என்று கூறினளா யிற்று.



**1150.** தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்கு மிவ்வூர்.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லு

வாளாய் அலரறிவுறீஇ அவன் உடன்போக்கு நயப்பச் சொல்லியது.

(பரி.) இ-ன். யாம் வேண்டும் கௌவை இவ்வூர் எடுக்கும் = உடன் போகற்கேதுவாகவுள்ளதொரு யாம் பண்டேவிரும்புவதாயவலரை இவ்வூர்தானே யெடாநின்றது — காதலர்தாம் வேண்டின் நல்குவர் = இனிக் காதலர்தாமும் யாம் வேண்டியக்கால் அதனை யினிதினேர்வர். அதனால் இவ்வலர் நமக்கு நன்றாய் வந்தது. எ-று.

எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. நங்கட்காதலுடைமையின் மறா ரென்பதுதோன்றக் 'காதலர்' என்றாள். இவ்விருபதுபாட்டும் புணர்தனி மித்தம். (ம)

விளக்கம் :—"தலைவனுடன் போதற்கு ஏதுவாக இருக்கின்ற அலர் தூற்றலானது முன்னர் யாம் விரும்பி நின்றது ஒன்றாயினும் விரும்பி நின்ற அதனை இவ்வூர் தானே கூறுகின்றது. அவ்விதம் உடன்போதலை இனி நம் காதலர் தாமும் யாம் விரும்புங் காலத்து நமக்கு இனிமையாகச் சம்மதிப்பர். ஆதலால் ஊரவர் தூற்றும் அலரானது நமக்கு நன்மைசெய்வதற்காகவே வந்ததுபோலுள்ளது" என்று தலைமகன் மதிற்புறத்து வந்த காலத்து தோழியானவள் தலைமகளுக்குச் சொல்லுவாளாய் ஊரவர் அலரைக்கூறித் தலைமகனுடன் உடன்போதலை விரும்பும்படிக் கூறினாள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மணந்துகொள்வதையோ அல்லது அவனுடன் போய் விடுவதையோ ஆகிய இரண்டுள் ஒன்றை விரும்பிய தலைமகளுக்குத் தோழியானவள் "தலைவியே! முன்னரே நாம் உடன் போதற்குக் காரணமாகிய அலர் தூற்றலை இப்போது இவ்வூரார் தாமே செய்கின்றாராதலால், இனி, தலைவனுடன் போதல் கூடும். அவ்விதம் போதற்கு நம் காதலரும் நம்மிடத்துள்ள அன்பின் மிகுதியால் மறுக்கமாட்டார்" என்று உடன் போதலைக் குறிப்பித்தாளாயிற்று. ஆதலால், நாணுத்துறவுரைத்தல், அலரறிவுறுத்தல் ஆகிய இவ்விருபது திருக்குறள்களும் புணர்தற்கு நிமித்தம் கூறியவாயின.

**களவியல் முற்றிற்று**

---

## கற்பியல்.

(பரி.) இனிக் கற்புப் பதினெட்டதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கட் பிரிவாற்றாமை கூறுகின்றார்.

விளக்கம்:—களவியல் ஏழு அதிகாரங்களால் கூறிய ஆசிரியர் கற்பு என்பதை பதினெட்டு அதிகாரங்களால் கூறுதல் தொடங்கி முதலில் பிரிவாற்றாமை என்பதைக் கூறுகின்றனர்.

---

## 116 அதிகாரம்.

---

## பிரிவாற்றாமை.

(பரி.) அஃதாவது வரைந்தெய்தியபின் தலைமகன் அறம்பொருளின் பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினுந் தலைமகளைப் பிரிந்து செல்லும்; செல்லுஞான்று அப்பிரிவினை அவளாற்றாளாந் தன்மை. அஃது ஈண்டுப் பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழிகூறலும், அவடனக்குத் தலைமகடானே அவன்குறிப்பா லுணர்ந்துகூறலும், பிரிவுணர்த்தியவழிக் கூறலும், தலைமகன் பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் மறுத்துக் கூறலுமென நால்வகையாற் கூறப்படும்.

விளக்கம்:—அதாவது, விதிவழியாக மணந்து தலைவியை யடைந்து வாழ்கின்ற தலைமகன் அறத்தின் பொருட்டேனும் பொருளின் பொருட்டேனும், இன்பத்தின் பொருட்டேனும் தூர தேசங்களுக்காயினும், சமீபமாக உள்ள நாடுகளுக்காயினும் தலைமகளைப் பிரிந்து போவன். அவ்விதம் பிரிந்து செல்லுகின்ற காலத்து அவன் பிரிவிற்

குக் தலைவியானவள் பொறுக்க முடியாளாய் நிற்கும் நிலைமை. அவ்வித நிலைமையானது தன்னிடத்துப் பிரிவினைக் கூறிய தலைமகனுக்குத் தோழி கூறுதலும், அத்தோழிக்குத் தலைமகளை பிரிகின்ற தலைவனது குறிப்பால் தெரிந்து கூறுதலும், தலைமகன் பிரிவினை அறிவித்த காலத்துக் கூறுதலும், தலைமகன் பிரிந்த காலத்துத் தனக்கு ஆறுதல் சொல்லும் தோழிக்குத் தலைமகளானவள் அவள் ஆறுதல் சொற்களுக்கு மறுத்துச் சொல்லுதலும் ஆக நான்கு விதப்படும்.





1151. செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

பிரிந்து கடிதின்வருவலென்ற தலைமகற்குத் தோழி
சொல்லியது.

(பரி.) இ-ள். செல்லாமை உண்டேல் எனக்கு உரை=நீயெம்மைப் பிரியாமையுண்டாயின் அதனையெனக்குச்சொல்,—மற்று நின் வல்வரவு வாழ்வார்க்கு உரை=அஃதொழியப் பிரிந்துபோய் விரைந்து வருதல் சொல்லை யாயின் அதனை அப்பொழுது உயிர்வாழ்வார்க்குச் சொல். எ-று.

தலைமகளையொழித்து 'எனக்கு' என்றாள், தானவளென்னும் வேற்றுமை யின்மையின். அக்காலமெல்லா மாற்றியிருந்து அவ்வரவு காண வல்லளல்லள், பிரிந்தபொழுதே இறந்துபடு மென்பதாம். அழுங்குவித்தல் பயன். இதனைத் தலைமகள் கூற்றாக்கி யுரைப்பாரு முளர். (க)

விளக்கம்:—"நீர் எம்மைப் பிரியாது இருப்பதாயின் அதனை எனக்குச் சொல்லக்கடவீர் அவ்விதமல்லாது பிரிந்து சென்று விரைந்து வருவேன் என்று சொல்லுவீராயின், அவ்வித வருதலை நீர் வருகின்ற காலத்து உயிரோடு கூடி இருப்போர்க்குச் சொல்லுவீராக!" என்று தம்மைப் பிரிந்து எண்ணிய கருமத்தை முடித்து வருவேனென்ற தலைமகனுக்குத் தோழி சொல்லியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தலைவனே! நீ பிரிந்து சென்று விரைவில் வருவாயாயினும், உன்னைப் பிரிந்தபொழுது இறந்துபடுகின்ற தன்மை

யுடையவளாக என் தலைவி இருக்கின்றாள். ஆதலால், நீ பிரிந்து உள்ள காலமெல்லாம் பொறுத்து இருந்து உன் வரவினை மறுபடியும் காண்பதற்கு இல்லாதவளாய் இருக்கின்றாள்'' என்று தலைவிக்கு உண்டாகும் பிரிவாற்றாமையைக் கூறினாளாயிற்று.

**1152.** இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.

பிரிவு தலைமகன்குறிப்பானறிந்த தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். அவர் பார்வல் இன்கண் உடைத்து=தழையுங்கண்ணியுங் கொண்டு பின்னின்றஞான்று அவர்நோக்குமாத்திரமும் புணர்ச்சிகுறித்தமையான் நமக்கின்பமுடைத்தாயிருக்கும்,—புணர்வு பிரிவஞ்சும் புன்கண் உடை



த்து=இன்று அப்புணர்ச்சிதான் நிகழாநிற்கவும் அது பிரிவரென்றஞ்சு மச்சத்தினையுடைத்தாயிற்று, அவரன்பினிலைமையிது. எ-று.

பார்வலென்றதனாற் புணர்ச்சிபெறாத பின்னிலைக்காலம் பெறப்பட்டது. புன்கணென்னுங் காரணப்பெயர் காரியத்தின்மேலாயிற்று. அவ்வச்சத்தினை யுடைத்தாதலாவது *''முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக்— கள்ளினு மகிழ்செய்யு மெனவுரைத்து மமையாரென்—ஒண்ணிழை திருத்தும்''* பணையிற் சிறப்பால் அவன் பிரிதற்குறிப்புக்காட்டி அச்சஞ்செய்த துடைமை. அழுங்குவித்தல் பயன். (உ)

**விளக்கம்:**—''கையில் தழையினையும் மாலையினையும் கொண்டு பின் நின்ற அவர் பார்வை யொன்றே புணர்ச்சி யின்பத்தைக் குறித்தமையால நமக்கு இன்பத்தைத் தருவதாய் இருந்தது இன்றோ, அம்மெய்யுறு புணர்ச்சியைப் பெற்றும் அது நிகழ்ந்து கொண்டு இருந்தும் குறிப்பால் உணர்ந்த களப்புணர்ச்சியைப் போல் செயலால் நிகழும் இம் மெய்யுறு புணர்ச்சியானது இன்பத்தைத்

தாராது அச்சத்தைத் தருவதாயுள்ளது. ஆதலால அவர் அன்பின் நிலைமை இதுவாகும்" என்று பிரிவினைத் தலைமகள் குறிப்பால் அறிந்த நிலைமையளானவள் தோழிக்குக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, முதலில் தலைவர் பார்த்த காலத்து உண்டாகிய பார்வையானது அவர் உள்ளப்புணர்ச்சியைக் குறிப்பித்தவுடன் அக் குறிப்பினால் எவ்வித பெரியதோர் இன்பத்தை அடைந்தனமோ அதற்கு மாறாக அவரை அடைந்து புணர்ந்துகொண்டுள்ள இக்காலத்து அவர் பிரிவின் குறிப்பினால் அச்சத்தை அடைய வேண்டியதாயிற்று என்று தன் ஆற்றாமையைக் கூறியதாயிற்று.

1153. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

இதுவுமது.

(பரி.) இ-ள். அறிவு உடையார் கண்ணும்=பிரியேனென்ற தஞ்சொல்லும் நம்பிரிவாற்றாமையும் அறிதலுடையராய காதலர்கண்ணும்,—ஓரிடத்துப் பிரிவு உண்மையான்=ஒரோவழிப் பிரிவு நிகழ்தலான்,—தேற்றம் அரிது=அவர் சொல்லும் தலையளியும்பற்றி நம்மாட்டன்புடையரெனத் தேறுந்தேற்றம் அரிதாயிருந்தது. எ-று.

---

* கலி, பாலை, 3.



அரோ-அசைநிலை, உம்மை-உயர்வுசிறப்பின்கண் வந்தது. (௩)

**விளக்கம்:**—"பிரிய மாட்டேன் என்று கூறிய தம்முடைய சொல்லினையும் பிரிவதால் நமக்கு உண்டாகும் ஆற்றாமையும் அறிந்து உள்ளவராகிய நம் காதலரிடத்தும் ஒரு காலத்துப் பிரிந்து செல்லுதல் என்னும் குறிப்பு உண்டாகுமாயின், இனி அவர் கூறுகின்ற அன்புடைமையைபற்றி நினைந்து நம்மிடத்து அவர் அன்புடையவர் என்று துணிவது அருமையாகும்" என்று தோழிக்குத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, 'தோழியே! நம் தலைவர் நம்மைக் கூடிய

காலத்து நம்மைவிட்டுப் பிரியேன் என்று சொல்லிய சொல்லினையும் நம்மை விட்டுப் பிரிந்தால நமக்கு உண்டாகும் ஆற்றாமையையும் அறிந்து இருந்தும் பிரிதல் குறிப்பினை உணர்த்துவாராயின், அவர் மற்றோர் முறைவந்து கூடி நமக்கு இன்பத்தை உண்டுபண்ணும் அன்பினையுடையார் என்பது கூடாததாகும்" என்று கூறினளாயிற்று

**1154. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்**
**றேறியார்க் குண்டோ தவறு.**

இதுவுமது.

(பரி.) இ-ள். அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின்=எதிர்ப்பட்டஞான்றே தலையளிசெய்து நின்னிற்பிரியேன் அஞ்சலென்றவர்தாமே பின் பிரிவாராயின்,—தெளித்தசொல் தேறியார்க்குத் தவறுஉண்டோ=அவர்க்கன்றி அவர் தெளிவித்தசொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றமுண்டோ! எ-று.

தேறியாரென்பது தன்னைப் பிறர்போற் கூறல். சொல்லுஞ் செயலு மொவ்வாமைக்குற்றம் அவர்க்கெய்தும், அஃதெய்தாவகையழுங்குவியென்பது கருத்து. (௪)

**விளக்கம்:**—"நம்மை எதிர்ப்பட்ட அன்று நமக்கு இன்பத்தைத் தந்து 'உன்னை விட்டுப் பிரியேன், நீ அஞ்சுதல் வேண்டாம்' என்று கூறிய அத்தலைவரே இன்று பிரிவாராயின், அவருக்கல்லாமல் அவர் கூறிய சொற்களை உண்மையென்று நம்பியவர்களுக்கு ஏதேனும் குற்றம் உண்டாகுமோ" என்று தலைவி தோழிக்குக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தோழியே! நம்மைவிட்டுப் பிரிந்து போகும்குற்றம் அவரையே சாரும். ஏனெனில்? நம்மைக்கூடியகாலத்து நம்மைப் பிரியேனென்று சொல்லிய சொல்லும், நம்மைப் பிரிந்து செல்தவற்கு இப்போது நிகழும் செயலும் ஒன்றற்கு ஒன்று பொருந்தாது



உள்ளதால், எக்காலத்தும் ஒரு நிலையாக உள்ள நம்மிடத்து யாதொரு குற்றமும் வந்து சாருவதற்கில்லை. ஆதலால், சொல்லிய வண்ணம் செய்

யாத குற்றத்தை நம் தலைவர் அடையாதவிதமாக அவர் பிரிந்து செல்லு தலைத் தடுப்பாயாக என்று கூறியதாயிற்று.

1155. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

இதுவுமது.

(பரி.) இ-ள். ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல் = என்னுயிரைச் செல்லாமற்காத்தியாயின், அதனையாளுதற்கமைந்தாருடைய செலவினை அழுங்குவிப்பாயாக;—மற்று அவர் நீங்கிற் புணர்வு அரிது = அழுங்குவிப்பாரின்றி அவர்செல்வாராயின் அவராலாளப்பட்டவுயிருஞ் செல்லும், சென்றாற் பின்னரைக்கூடுகல் எனக்கரிதாம். எ-று.

ஆளுதற்கமைதல் = இறைவராதற்குத் தெய்வத்தாலேற்புடையராதல். மற்று-வினைமாற்றின்கண் வந்தது. (௫)

விளக்கம்:—என்னுயிர் போகாது அதனைக்காக்க விரும்புவாயாயின் அவ்வுயிரை ஆள்வதற்குத் தலைவராய் வந்தவருடைய பிரிந்து செலலுதலைத் தடுப்பாயாக! அவ்விதம் தடுப்பாரில்லாமல் அவர் பிரிந்து போவாராயின், அவரால் ஆளப்பட்ட உயிரும் போய்விடும். அவ்விதம் போய்விடுமாயின், திரும்பிவருபவராகிய அவரைக் கூடுதல் எனக்கு உண்டாகாது" என்று தலைவி தோழிக்குக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தெய்வத்தால் எனக்குத் தலைவராக வாய்க்கப் பெற்ற காதலர் பிரிந்து செல்லாவண்ணம் காப்பையாயின், என்னுயிரைக் காக்கும் உயிர்த்தோழி என்னும் பெயருக்கு உரியவளாவை என்று தலைவன் பிரிவால் தனக்கு உண்டாகும் ஆற்றாமையைக் கூறினளாயிற்று.

1156. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

தலைமகன் பிரிவுணர்த்தியவாறு வந்துசொல்லிய
தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். அவர் பிரிவு உரைக்கும் வன்கண்ணராயின் = நங்கலவுக் கடுமையறிந்த தலைவர்தாமே நம்முனின்று தம்பிரிவினையுணர்த்தும் வன்



கண்மையுடையராயின்,—நல்குவர் என்னும் நசை அரிது = அத்தன்மையார் பின்பு நம்மாற்றாமையறிந்துவந்து தலையளிசெய்வரென்றிருக்கு மாசை விடப்படும். எ-று.

அருமை = பயன்படுதலில்லாமை. கூடியிருந்தே அன்பின்றிப் பிரி வெண்ணுதலும் உணர்த்தலும் வல்லாராயினர் பிரிந்துபோய் அன்புடையராய் நம்மை நினைத்துவந்து நல்குதல் யாண்டையதென்பதாம். அழுங்குவித்தல் பயன். (க)

விளக்கம்:—"பிரிவினால் நமக்கு உண்டாகும் துன்பத்தினையறிந்த தலைவரே நம்முன் நின்று தாம் பிரிந்து செல்லுதலை அறிவிக்கும் அஞ்சா நெஞ்சுடையராயின், அவ்வித தன்மையுடையார் நம்மைப் பிரிந்து சென்றபிறகு அப்பிரிவால் நமக்கு உண்டாகும் ஆற்றாமையை யறிந்து திரும்பிவந்து புணர்ந்து இன்பத்தைத் தருவார் என்று கொள்ளும் ஆசையை விட்டுவிடுதல் வேண்டும்" என்று தலைமகனது பிரிவினை அவன் அறிவித்தவிதம் வந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தோழியே! நம்முடனிருந்தே இன்பத்தை அனுபவித்து வருகின்ற தலைவர் அன்பு இல்லாமல் பிரிதலை எண்ணுதலும், எண்ணிய வண்ணம் அறிவித்தலும் உடையராகையினால், நம்மைப் பிரிந்துபோய் நம்மீது அன்பு கொண்டு நம்மை நினைத்துத் திரும்பிவந்து நம்மைக்கூடி இன்பந்தருதல் முடியாததாகும். ஆதலால் அவர் நம்மைப் பிரியாவண்ணம் அவரைத் தடுத்தலே பயனாகும்" என்று கூறினாளாயிற்று.

1157. துறைவன் றுறந்தமை தூற்றாகொல் முன்கை
யிறையிறவா நின்ற வளை.

இதுவுமது.

(பரி.) இ-ள். துறைவன் துறந்தமை=துறைவன் என்னைப் பிரிய லுற்றமையை—முன்கையிறை இறவாநின்ற வளை தூற்றாகொல்=அவனு ணர்த்தாமற் றாமேயுணர்ந்து என்முன்கையினிறையினின்றுங் கழலாநின்ற வளைகள் எனக்கறிவியாவோ, அவனுணர்த்தவுணர்ந்துவந்து நீ யறிவித்தல் வேண்டுமோ! எ-று.

முன்னே நிகழ்ந்தமையின் 'துறந்தமை' என்றும், கேட்டதுணையான் மெலிந்து ஆற்றாமையின் 'இறவாநின்ற' என்றுங் கூறினாள். அழுங்குவித்து வந்து கூறற்பாலையல்லையாய் நீயும் இவ்வளைகள் செய்தனவே செய்தாயெனப் புலந்து கூறியவாறு. (எ)

## பிரிவாற்றாமை 79

விளக்கம்:—"துறைவனாகிய நம் தலைவன் என்னைப் பிரிய எண்ணியதை அவன் அறிவிக்காமலே தாமே அறிந்து என் முன்கையினின்றும் கழன்றனவாகிய என்னுடைய வளையல்கள் எனக்கு அறிவியாவோ? அவன் உணர்த்த நீ அதனை அறிந்துவந்து எனக்கு அறிவித்தல் வேண்டுமோ?" என்று பிரிவினை உணர்த்திய தோழிக்குத் தலைமகள் கூறினாளென்று இத்திருக்குறள் கூறுகின்றது அதாவது, "தோழியே! என் தலைவன் பிரிகின்ற தன்மையை அறிந்து அக்காலத்தேயே நான் ஆற்றாது தேகம் மெலிந்தமையால் அதைப் பிறர் அறியும் வண்ணம் நான் அணிந்த வளையல்களே என் கையை விட்டு நீங்கின எனின், நீ அப் பிரிவினை அறிந்து வந்து எனக்குக் கூறுதல் தகுதியாகுமோ? ஆகலால், நீ அவனைச் செல்லாவண்ணம் தடுத்து அதனால் உண்டாகும் நன்மையினை எனக்குக் கூறாது எனக்கென்று அணிந்த இவ்வளையல்கள் மெலிந்த காலத்து என்னை விட்டுப் பிரிந்தனபோல் நீயும் துன்பக்காலத்து உதவுகின்றாயில்லை என்று கோபித்துக் கூறியதாயிற்று.

1158. இன்னா தினனில் லூர் வாழ்த லதனினு

மின்னு தினியார்ப் பிரிவு.

இதுவு ரது.

(பரி.) இ-ள். இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது = மகளிர்க்குத் தங் குறிப்பறியுந் தோழியரில்லாத வேற்றூரின்கண் வாழ்கலின்னாது;—இனியார்ப்பிரிவு அதனினும் இன்னாது = அதன்மேலுந் தங் காதலரைப்பிரிதல் அதனினுமின்னாது. எ-று.

தலைவன் செலவினையழுங்குவித்து வாராது உடன்பட்டுவந்தமைபற்றிப் புலக்கின்றாளாகலின், 'இனனில்லூர்' என்றாள். உலகியல் கூறுவாள் போன்று தனக்கவ்விரண்டு மின்மை கூறியவாறு. (அ)

விளக்கம்:—"பெண்களுக்குத் தம்முடைய குறிப்பையறிகின்ற தோழியர்களில்லாத வேற்றூரில் வாழ்வது துன்பமாகும். அதற்கு மேலும் தன் காதலரைப் பிரிந்து இருத்தல் மிகுதியும் துன்பமாகும் என்று தலைவி தோழிக்குக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவன் பிரிந்து போதலைப் போகவொட்டாது தடுக்காது அவன் போதற்கு உடன்பட்டு வந்த தோழியை நோக்கி கூறுகின்றாளாதலால், குறிப்பறியாத தோழியர் இருப்பதினால் இன்பத்தை அடை



வதற்கு இல்லாமல் துன்பத்தை அடையவேண்டி உள்ளது. அதுவன்றியும், அன்புடைமை கருதாது பிரிந்து போகின்ற காதலரைப் பிரிந்திருப்பது மிகுதியும் துன்பத்தைத் தருவதாக உள்ளது என்று பிரிவால் தனக்கு உண்டாகும் ஆற்றாமையைக் கூறியதாயிற்று.

1159. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

காமந் தீயேபோன்று தானின்றவிடத்தைச் சுடுமாகலான் நீயாற்றல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். தீத்தொடிற் சுடிற் சுடலல்லது=தீத் தன்னைத்தொட்டாற் சுடுமாயிற் சுடுதலல்லது—காமநோய்போல விடிற்சுடல் ஆற்றுமோ=காமமாகிய நோய்போலத் தன்னையகன்றாற் றப்பாதுசுடுதலை வற்றோ, மாட்டாது ,எ-று.

சுடுமாயினென்பது மந்திரமருந்துகளாற் றம்பிக்கப்படாதாயி னென்றவாறு. காமத்திற்கதுவுமில்லையென்பாள் வாளா 'சுடல்' என்றான். அகறல்=நுகராமை. சுடலென்பது முன்னுங் கூட்டப்பட்டது. தீயினுங்கொடியதனையானாற்றுமாறென்னை யென்பதாம். (கூ)

விளக்கம்:—"தீயானது ஒருவன் தன்னைத் தொட்டால் சுடுவதல்லது காமமென்னும் நோய்போல் தன்னை விட்டு நீங்கியவரைத் தப்பாது சுடும் தன்மையுடையதோ? இல்லை" என்று காமமானது தீப்போல் தானிருந்த இடத்தைச் சுடுமாதலால் நீ பொறுத்துக் கொண்டு இருத்தல் வேண்டும் என்று கூறிய தோழிக்குத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோ வெனின்? பிரிவுக்கு ஆற்றாது வருந்துகின்ற தலைவியைப் பார்த்துத் தோழியானவள் "தீத் தானிருந்த இடத்தைச் சுடுவதுபோல் காமம் கொண்டாரைச் சுட்டு எரிக்கும். ஆதலால் இந்நோய் கொள்ளாது பொறுத்து இருத்தல் வேண்டும்" என்னலும், அது கேட்ட தலைவி, தோழியே! தீச் சுடுகின்ற தன்மையுடையதாயினும் மந்திரத்தாலும், மருந்துகளாலும் சுடவொட்டாது தடுத்து உயிரைக் காத்துக் கொள்ளல் கூடும். அவ்விதம் மந்திரம் மருந்துகளால் தடுக்கக்கூடாத தீயினும் கொடிய காமத் தீயினைப் பொறுத்துக்கொண்டு உயிர் வாழ்வது எவ்விதம்?" என்று கூறினளாயிற்று.



1160. அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்

## பின்னிருந்து வாழ்வார் பலர்.

**தலைவியர்பலரும் பிரிவாற்றியிருப்பர் அது நீ செய்கின்றிலை யென்ற தோழிக்குச் சொல்லியது.**

(பரி) இ-ள். நீசொல்லுகின்றதொக்கும்,—அரிது ஆற்றி அல்லல்நோய் நீக்கி=பிரிவுணர்த்தியவழி அதற்குடம்பட்டுப் பிரியுங்கால் நிகழும் அல்லனோ யினையு நீக்கி,--பிரிவு ஆற்றிப் பின் இருந்து வாழ்வார் பலர்=பிரிந்தால் அப் பிரிவுதன்னையு மாற்றிப் பின்னுமிருந்து உயிர்வாழுமகளிர் உலகத்துப் பலர்.

பண்டையிற்சிறப்பத் தலையளிபெற்றின்புறுகின்ற வெல்லைக்கண்ணே அஃதிழந்து•துன்புறுதற்குடம்படுதல் அரியதொன்றாகலின் அரியதனைச்செய் •தென்றும், செல்லுந்தேயத்து அவர்க்கியாது நிகழுமென்றும் வருந்தனையும் யாமாற்றியிருக்குமாறென்னென்றும் அவ்வாவுதான் என்றான்று வந்தெய்து மென்றும் இவ்வாற்றானிகழுங் கவலை மனத்துநீங்காதாகலான் 'அல்லனோய் நீக்கி' என்றும், பிரிந்தால் வருந்துனையும் அகத்து நிகழுங் காமவேதனையும் புறத்து யாழிசை, மதி, தென்றலென்றிவைமுதலாக வந்து அதனை வளர்ப் பனவும் ஆற்றலரியவாகலிற் 'பிரிவாற்றி' என்றும், தங்காதலரை யின்றி யமையா மகளிருள் இவையெல்லாம் பொறுத்துப் பின்னுமிருந்து உயிர்வாழ் வார் ஒருவருமில்லையென்பது குறிப்பாற்றோன்றப் 'பின்னிருந்து வாழ்வார் பலர்' என்றுங் கூறினான். அரிதென்பது வினைக்குறிப்புப்பெயர். பிரிவின்க ணிகழ்வனவற்றைப் பிரிவென்றான். செய்து, நீக்கி, ஆற்றியென்பன ஓசை வகையான் அவ்வவற்றதருமையுணா நின்றன. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது யானுமிறந்து படுவலென்பது கருத்து. (௰)

விளக்கம் :—"தோழியே! நீ சொல்லுகின்றது பொருந்தும், தலை வன் பிரிந்துபோதலை உணர்த்திய காலத்து அப்பிரிவிற்கு உடன்பட் டுப் பின்னர்ப் பிரிந்துபோகு மிடத்து உண்டாகும் துன்பமாகிய நோயி னையும் நீக்கி, அப்பிரிந்ததால் உண்டாகிய பொறுக்க முடியாமையையும் பொறுத்து, அதன் பின்னரும் இவ்வுலகத்து இருந்து உயிரோடு வாழும் பெண்கள் பலருண்டு" என்று தலைவர் பிரிந்த காலத்துத் தலைவியர் பிரிவு ஆற்றியிருப்பர். நீயோ அது செய்கின்றிலை என்று கூறிய தோழிக்குத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது.

அதாவது, தலைவர் பிரிந்தால் தலைவியர் பொறுத்து இருப்பர் என்று நீ கூறுவது மிகுதியும் பொருத்தமன்றே! காட்சியளவையாகத் தலைவனைக் கண்டகாலத்து அவன் காட்டிய அன்பைக் காட்டிலும்





அவன் உடனிருந்து மகிழ்கின்ற காலத்து அவன் காட்டும் அன்பு மிகப்பெரியது ஆகலால் அவ்வித அன்பினை இழந்து இருப்பது எவ்விதமென்றும், அவ்வாறு இருக்கினும் அவன் செல்லுகின்ற தேயத்து அவனுக்கு யாது உண்டாகுமோ என்று மனத்துள் நீங்காத கவலையும் இருக்குமாதலால், அவன் திரும்பிவரும் வரையும் எவ்வாறு பொறுத்து இருப்பது என்றும், அதுவன்றியும் அவன் வரும்வரையில் மனத்தில் உண்டாகும் காமவேதனையும் வெளியில் காணப்படுகின்ற சந்திரன், தென்றற்காற்று, வீணையோசை ஆகிய இவைகள் அக்காமவேதனையை வளர்ப்பனவுமாய் இருக்குமாதலால், இவற்றையெல்லாம் நீக்கிப் பொறுத்து இருத்தல் எவராலும் முடியாததென்றும், இப்பிரிவினால் யானும் இறந்துபடுவதே உண்மையாகும் என்றும் தனக்குண்டாகிய பிரிவாற்றாமையைத் தோழியிடத்துக் கூறினாளாயிற்று.

---

## 117. அதிகாரம்.

---

## படர்மெலிந்திரங்கல்.

(பரி.) *அது படரான்மெலிந்திரங்கலென விரியும். அஃதாவது பிரிவாற்றாளாய தலைமகள் தானுறுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்தலின் அந்நினைவான் மெலிந்திரங்குதல் அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.*

விளக்கம் :—*அதாவது, துன்பத்தால் மெலிந்து தன் ஆற்றாமையை வாய்விட்டுக் கூறல் என்பதாகும். அது என்னையோவெனின்?*

தலைவன் தன்னைப் பிரிந்து சென்றமையைப் பொறுத்தற்கு ஆகாது, தலைமகளானவள் தான் அடைகின்ற துன்பத்தினை எக்காலத்தும் நினைக்கின்றாளாதலின், அந்நினைவின் மிகுதியால் தேகம்மெலிந்து, தன் துன்பத்திற்காக வருந்திக் கூறுதல் பிரிவாற்றாமைக்குப்பிறகு, இப்படர் மெலிந்திரங்கல் நேருகின்றதாதலால் இவ்வதிகாரம் இங்குவைக்கப்பட்டதாயிற்று.

1161. மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்
ஊற்றுநீர் போல மிகும். [பவர்க்

காமநோயை வெளிப்படுத்தல் நின்னாணுக்கேலாதென்ற
தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ - ள். நோயை யான் மறைப்பேன் = இந்நோயைப் பிறரறிதலஞ்சி யான் மறையாநின்றேன்; — இஃதோ இறைப்பவர்க்கு ஊற்றுநீர்போல



மிகும் = நிற்பவும், இஃது அந்நாண்வரை நில்லாது நீர் வேண்டுமென்றிறைப்பவர்க்கு ஊற்றுநீர்மிகுமாறுபோல் மிகாநின்றது. எ - று.

அம்மறைத்தலாற் பயனென்னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. "இஃதோ செல்வர்க்கொத்தனென்யான்" என்புழிப்போல ஈண்டுச் சுட்டுப்பெயரீறு திரிந்துநின்றது. இஃதோ நோயையென்று பாடமோதுவாருமுளர்; அது பாடமன்மை யறிக. இனி அதற்கடுத்தது நீ செயல்வேண்டுமென்பதாம். (க)

விளக்கம்:—"இக்காமநோயினைப் பிறர் அறிவரென்று எண்ணி அதற்காக நாணமடைந்து யான் அதனை மறைக்க முயல்கின்றேன். அவ்விதம் மறைத்தும் இந்நோயோ அந்நாண் அளவு நில்லாது நீரினை வேண்டுமென்று இறைப்பவர்க்கு ஊற்றிலிருந்து வரும் நீரானது மிகுவதுபோல் மிகுந்து நின்றது" என்று, காமநோயினை உனக்கு உண்டென்று வெளியார் அறியும்படிச் செய்தல் உனக்கியல்பாக உள்ள நாண்

என்னும் தன்மைக்கு ஏற்றதாகாது என்று கூறிய தோழிக்குத் தலைவி கூறினதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நாணமுடையார் காம நோயினை அயலவர் அறியும்படி மெலிதல் கூடாது என்று தோழி கூறுதலும், தலைவியானவள் அவளை நோக்கி "ஓ தோழியே! நாண் என்னும் மறைப்பால் காமமென்னும் துன்பத்தினை நான் எவ்வளவு மறைக்க முயன்றாலும் ஊற்றுநீர் எவ்வாறு இறைக்குந்தோறும், இறைக்குந்தோறும் அதிகமாகச் சுரக்கின்றதோ அதுபோல் மறைக்க முயலுந்தோறும் முயலுந்தோறும் அது அதிகமாகா நின்றது. ஆதலால் நான் மறைத்தலால் யாதொரு பயனும் உண்டாகவில்லை, இனி, நீயே இக்காம நோய் தோன்றாமைக்குச் செய்ய வேண்டியது செய்ய வேண்டும்" என்று கூறினாளாயிற்று.

## 1162. காத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
## குரைத்தலு நாணுத் தரும்.

இவ்வடையாறியாமன் மறைத்தல் ஆண்டையாறியத்
தூதுவிடுதலென்னு மிரண்டனுள் ஒன்றுசெயல்
வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். இந்நோயைக் காத்தலும் ஆற்றேன்=இந்நோயை ஈண்டையாரறியாமன் மறைத்தலும் வல்லேனாகின்றிலேன்;—நோய் செய்தார்க்கு



உரைத்தலும் நாணுத் தரும்=ஆகாக்கால், நோய்செய்தவர்க்குரைக்க வெனின், அதுவும் எனக்கு நாணினைத்தாராநின்றது, இனி யென்செய்கோ! எ - று.

ஒருகாலைக் கொருகான் மிகுதலிற் 'காத்தலுமாற்றேன்' என்றும், சேயிடைச் சென்றவர்க்கு இதுசொல்லித் தூதுவிட்டால் இன்னுமிருந்தேனென்பது பயக்குமென்னுங் கருத்தால் 'நாணுத் தரும்' என்றுங் கூறினாள்.

விளக்கம்:—"இக்காமநோயினை இங்கு உள்ளவர் அறியா விதமாக மறைப்பதற்கும் யான் வல்லவள் ஆக இருக்கவில்லை. அவ்வித வல்லமை இல்லாமையுடன் இந்நோயினை உண்டுபண்ணிய தலைவருக்குச் சொல்லவேண்டுமெனில், அதுவும் எனக்கு நாணத்தினை உண்டாக்குகின்றது. ஆதலால், இனி என் செய்வேன்?" என்று இவ்விடத்து உள்ளவர்கள் அறியாவண்ணம் மறைத்தலோ அன்றி அவ்விடத்து உள்ள தலைவர் அறியத் தூது விடுதலோ ஆகிய இரண்டனுள் ஒன்றினைச் செய்து நீ ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி கூறியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "காமநோயானது ஒரு காலைக்கு ஒரு காலை அதிகமாக மிகுதலால் அதை மறைப்பதற்கும் என்னால் முடியவில்லை. விட்டுப் பிரிந்து நெடுந்தூரத்தில் சென்று உள்ள தலைவர்க்குத் தூது விடவோ என்னில், தூது கண்ட தலைவர் இவள், 'விட்டுப் பிரியேன், பிரிந்தால் இறப்பேன்' என்று கூறியவள் பிரிந்து இத்துணை நாள்களாயும் இன்னும் பிழைத்திருக்கின்றாளன்றோ என்று கருதி என் அன்புடைமையைக் குறைவாகக் கருதுவார் என்ற நாணத்தால் தூது விடுவதற்கும் என்னால் முடியவில்லை' என்று கூறினாளாயிற்று

**1163. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்**
**னோனா வுடம்பி னகத்து.**

இதுவுமது.

(பரி.) இ - ள். காமமும் நாணும் = காமநோயும் அதனைச் செய்தவர்க்கு உரைக்கலொல்லாத நாணும்—நோனா என் உடம்பின் அகத்து = தம்மைப் பொறுத என்னுடம்பின்கண்ணே—உயிர் காவாத் தூங்கும் = உயிர்காத்தண்டாக அதனிருதலையினுந் தூங்காநின்றன. எ - று.

பொறுமை = மெலிவாலுள்ளது. தூங்குமென்பது, ஒன்றிறொன்று மிகாது இரண்டும் ஒத்தசிரவென்பது தோன்ற நின்றது. தூதுவிடவும் ஒழியவும் பண்ணுவனவாய காமநாணங்கள் தம்முளொத்து உயிரினையிறுவியாநின்றன, யான் அவற்றுளொன்றின்கணிற்கமாட்டாமையின் இஃதிற்றேவிடுமென்பதாம்.

விளக்கம்:—"காம நோயும் அந்நோயினைச் செய்தவருக்குச் சொல்ல முடியாத நாணமும் ஆகிய இரண்டும் அவற்றைப் பொறுக்க முடியாத என்னுடம்பினிடத்தே காவடித் தண்டுபோன்றுள்ள என்னுயிரின் இருமுனையிலும் நிலைத்திருக்கின்றன" என்று தலைவி தோழிக்குச் சொல்லியதாக இக்குறள் கூறுகின்றது. அதாவது, "காவடித் தாங்கிச் செல்லும் தண்டு ஒன்று தன்னுடைய இரண்டு முனைகளிலும் யாட்டித் தொங்குகின்ற ஒத்த அளவினையுடைய பாரங்களைத் தாங்கிச் செல்வதுபோல் என் உடம்பினிடத்தே உள்ள உயிரானது காவடித் தண்டுபோலிருந்து ஒரு பக்கத்து இழுக்கும் காமநோயாகிய பாரத்தினாலும் அக் காமத்தைத் தலைவனுக்குத் தூதுவிட்டு அறிவிக்கக் கூடாது தடுக்கும் நாணமென்னும் பாரத்தினாலும் இழுக்கப்பட்டு நடுவில் மிகுந்த பாரத்தால் உடைந்து போவதாகும். இனி உயிர்பிழைத்து இருத்தற்கு யாதும் வழியில்லை" என்று கூறினளாயிற்று.

**1164: காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து**
**மேமப் புணைமன்னு மில்.**

தலைவியர் காமக்கடற்படார், படினும் அதனை ஏற்றபுணையா
வீந்தீக் கடப்பரென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். உண்டு காமக்கடலே=யாவர்க்கும் உளவாய்வருகின்ற இவ்விரண்டனுள்ளும் எனக்குண்டாகின்றது காமக்கடலே;—அது நீந்தும் ஏமபுணை இல்=அதனை நீந்தும் அரணாகிய புணையில்லை. எ-று.

இருவழியும் மன்னும் உம்மும் அசைநிலை. தூதுவிட்டு இதற்குப் புணையாகற்பாலையாயதீயும் ஆயிற்றில்லையென்பது கருத்து. (௪)

விளக்கம்:—"யாவருக்கும் இருப்பனவாய் உள்ள இவ்விரண்டனுள்ளும் எனக்கு இருப்பது காமமாகிய கடலொன்றேயாம். அக்கடலை நீக்

திக் கரையேறும் அரணாகிய தெப்பமானது எனக்கு இல்லை" என்று தலைவியானவர் காமமாகிய கடலில் வீழ்வார். ஒரு கால் வீழினும் அக் காமக் கடலை அதற்குத் தகுதியாகிய தெப்பமொன்றைக் கொண்டு நீந் திக் கரையேறுவர் என்ற தோழிக்குத் தலைவி கூறியதாக இத்திருக் குறள் கூறுகின்றது. அதாவது காமக் கடலைக் கடப்பதற்கு ஏற்ற தெப்பமாயிருப்பது தலைவனுக்குத் தூது விடுதல் ஒன்றேயாம். எனக்கோ தூதுவிடுதற்கு உற்ற துணையில்லை. துணையாகிய நீயும் அக் கடலை நீந்துவதற்குத் தெப்பமாக ஆகவில்லை. ஆதலால் இக்காமக்



கடலை யான் கடந்து உயிர் வாழ்வது முடியாத காரியம் என்று கூறினாளாயிற்று.

1165. துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

தூதுவிடாமைநோக்கித் தோழியோடு புலந்து சொல்லியது.

(பரி.) இ-ள். நட்பினுள் துயர்வரவு ஆற்றுபவர்-இன்பஞ்செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்பவரவினைச் செய்யவல்லவர்—துப்பின் எவனாவர் கொல்=துன்பஞ்செய்தற்குரிய பகைமைக்கண் என்செய்வர்கொல்லோ!

துப்புப் பகையுமாதல் * "துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச சேய்மைய—நட்பெதிர்ந் தோர்க்கே யங்கை யண்மையன்" என்பதனானு மறிக. அப்பகைமை ஈண்டுக்காணாமையின் அவர்செய்வதுமறியப் பெற்றிலேமென் பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. துயர்வருதலை விலக்க லாயிருக்க அதுசெய்கின்றிலையெனப் புலக்கின்றமையின், துயர்வரவு செய்தா ளாக்கியும் பிறனாக்கியுங் கூறினான். (இ)

விளக்கம்:—"நம்மிடத்து நட்டார்க்கு இன்பத்தையே செய்ய வேண்டிய நட்பினை யுடையவரே துன்பத்தைச் செய்ய வல்லமையுடை

யவரா யிருப்பாராயின், அவ்வித நட்பினர் துன்பத்தையே செய்து தம் பகைமையைக் காட்டவேண்டிய பகைவராவாரென்னில், அக்காலத்து அவர் எது செய்து நிற்பரோ" என்று தூது விடாமையைப் பார்த்து தன் தோழியோடு கோபித்துச் சொல்லினளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! நீ எனது உயிர்த்தோழியாக இருந்தும் தலைவனுக்கு ஓர் தூதினை விட்டு எனக்கு உள்ள காமத் துன்பத்தினை நீக்குகின்றாயில்லை. ஆதலால் தோழியாகிய நீயே பகைவர் செய்யும் துன்பவருகையைச் செய்தாய் இவ்விதமாயின் வேறு எவர்தான் எனக்கு இன்பம் செய்ய வல்லவர் என்று தோழியை நட்பிற் பகைவளைப்போலாக்கி, துயர்செய்தாளாக்கி, வேறொருத்தியாக்கிக் கூறினளாயிற்று.

**1166. இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.**

காமத்தானின்பமுற்றார்க்கு அதனினுய துன்பமும் வருமெனற
தோழிக்குச் சொல்லியது

(பரி.) இ-ள். *காமம் இன்பம் கடல்=காமம் புணர்வாலின்பஞ்செய்யுங்கால், அவ்வின்பங் கடல்போலப் பெரிதாம்;—மற்றஃது அடுங்கால் துன்*

* புறநானூறு, கூ௪௦.



*பம் அதனிற் பெரிது=இனி அதுதானே பிரிவாற்றுன்பஞ்செய்யுங்கால், அத்துன்பம் அக்கடலினும் பெரிதாம்.* எ-று.

*மற்று வினைமாற்றின்கண் வந்தது. அடுங்காலென வந்தமையின், மறு தலையெச்சம் வருவிக்கப்பட்டது.* பெற்றவின்பத்தோடொத்தவரின் ஆற்றலாம்; இஃததனை தளவன்றென்பது கருத்து. (௬)

விளக்கம்:—" காமமானது புணர்ச்சியினிடத்தே இன்பத்தைச் செய்யுமிடத்து அவ்வின்பமானது கடல்போலப் பெரிதாக உள்ளது

இனி அக்காமந்தானே பிரிந்த இடத்துத் துன்பஞ் செய்யுமாயின் அத் துன்பமானது மேற்கூறிய இன்பக்கடலைக் காட்டிலும் பெரியதாக உள் ளது" என்று காமத்தால் இன்பத்தை அடைந்தார்க்கு காமத்தால் துன் பமும் வருமென் றுகூறிய தோழிக்குத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது காமமுற்றார்க்கு இன்பமும் துன்பமும் இரண் டும் வரும். ஆதலால் இன்பத்தை அனுபவித்ததுபோல் துன்பத்தையும் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும் என்று தோழி கூறினளாதலால் அவளை நோக்கி இன்பமும் துன்பமும் ஒத்து இருக்குமாயின் பொறுத் தல் கூடும். ஆயினும் முன்னர்த் தலைவனிருந்த காலத்து அடைந்த இன் பத்தைக் காட்டிலும் அவன்பிரிந்த காலத்துத் துன்பமானது மிகப்பெரி யதாக உள்ளது. அதனால் பொறுத்தல் முடியாது என்பதாம்.

1167. காமக் கடும்புன லீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.

காமக்கடல் நிறைபுணையாக நீந்தப்படுமென்றட்குச்
சொல்லியது.

(பரி.) இ-ள். காமக் கடும்புனல் நீந்திக் கரை காணேன் = காமமாகிய கடலை நீந்தாதேனல்லேன், நீந்தியும் அதற்குக் கரைகாண்கின்றிலேன், — யாமத்தும் யானே உளேன் = அக்காணாமைக்காலத்தான் எல்லாருந்துயிலும் அரையிருளாயிற்று, அவ்வரையிருட்கண்ணும் அதற்கொருதுணையின்றி யானேயாயினேன், ஆயும் இறந்துபட்டுய்ந்து போகாதுளேனாகின்றேன் ஈதொரு தீவினைப்பயனிருந்தவாறென். எ-று.

கடுமை ஈண்டு மிகுதிக்கணின்றது. உம்மை முன்னுங்கூட்டப்பட்டது. யானேயாயினேனென்பது நீ துணையாயிற்றிலையென்னுங் குறிப்பிற்று. (எ)

விளக்கம்:—"காமமாகிய கடலை நான் நீந்தக்கூடாதவள் அல்லள் ஆனால் நீந்தியும் அக்காமக் கடலுக்குக் கரைகாண்பதற்கு இல்லை அவ்

விதம் கரையைக் காணாமையால் எல்லாரும் தூங்குகின்ற பாதி இராத்திரியினிடத்தே அக்காமக் கடலுக்கு வேறு துணையில்லாமல் நானே துணையாக நிற்கின்றேன். அவ்விதம் நானே விழித்திருந்து வருந்துவதாயினும் அவ் வருத்தத்தினின்றும் நீங்க இறந்துபடாது இன்னும் இருக்கின்றேன். அவ்விதம் வருந்தி நிற்பது முன்செய்த தீவினைப் பயனேயாகும்" என்று காமமாகிய கடலை நிறை என்னும் புணையாலே நீந்துதல் கூடும் என்ற தோழிக்குத் தலைவி சொல்லியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! காமத்தான்பமென்னும் கடலைப் பிறர் அறியாமல் பொறுத்துக் கொள்ளுதல் என்னும் நிறையாகிய தெப்பத்தைக் கொண்டு நீந்துதல் கூடும் என்று கூறுகின்றாய். ஆனால்? பாதி இரவாயும் உறங்காது வருந்தச் செய்யும் இக்காமக் கடலோடு நான் துன்புற்று நிற்கின்றேனே யன்றி என் துணைவியாகிய நீ எனக்கு யாதொரு உதவியையும் செய்து அக்காமக் கடலினின்றும் கரையேற்றினாயில்லை என்பதாயிற்று.

## 1168. மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா வென்னல்ல தில்லை துணை.

இரவின்கொடுமைசொல்லி யிரங்கியது.

(பரி.) இ-ள். இரா அளிதது=இவ்விரா அளித்தாயிருந்தது;—மன் உயிர் எல்லாம் துயிற்றி என்னல்லது துணை இல்லை=உலகத்து நிலைபெறுகின்ற உயிர்களையெல்லாந் தானே துயிலப்பண்ணுதலான் என்னையல்லது வேறு துணையுடைத்தாயிற்றில்லை. எ-று.

துயிற்றியெனத் திரிந்துநின்ற வினையெச்சம் அவாய்நிலையான்வந்த உடைத்தாதலோடு முடிந்தது. துணையோடொன்றுகின்ற உயிர்களெல்லாம் விட்டு இறந்துபடுமெல்லையேனும் என்னையே துணையாகக்கோடலின் அறிவின்றென்பதுபற்றி அளித்தென்றான்; இகழ்ச்சிக்குறிப்பு. (அ)

விளக்கம்:—" இவ்விரவோ மிகுதியும் தயவுடையதா யிருந்தது.

உலகத்து நிலைபெற்றுள்ள உயிர்களையெல்லாம் அவை தூங்குவதற்கு முன் தானே தூங்கச் செய்வதாய் என்னையல்லாமல் அதற்கு வேறு துணையிருப்பதற்கு இல்லாததாய்" என்று இரவினால் தனக்குண்டாகிய கொடுமையைக் கூறித் தலைவி வருந்தினாள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது நாயகனைவிட்டுப் பிரிந்ததலைவி காமந்துன்பத்தால் தூங்காது வருந்துகின்ற தன்மையை உரைப்பவள் போன்று தனக்கு



உண்டாகிய துன்பத்தை இராப்பொழுதின் மீது ஏற்றி இவ்விரவானது தலைவரும் தலைவியருமாகிய இருவரும் ஒருவரோடு ஒருவர் துணை கொண்டு நிற்கின்ற அவர்களை யெல்லாம் விட்டு இறந்துபடுவதற்குச் சமீபமாகவுள்ள என்னையே தனக்குத் துணையாகக் கொண்டு இருத்தலால் அறிவுடையது அன்று. அறிவுடையதாயின் துணையுடைய உயிர்களைக் காம இன்பத்தின் பொருட்டு விழித்திருக்கச் செய்து தனக்குத் துணைகொண்டு இருக்கும். அவ்வாறு அல்லாது தலைவனைப் பிரிந்திருக்கின்ற என்னை விழித்திருக்கச்செய்து தனக்குத் துணைகொண்டமையால் வீழ்வார்க்கு வீழ்வாரைத் துணைகொள்வது போல் அறிவில்லாமையேயாகும் அதனோடு கொடுமையுமாகும் என்று தனக்கு இரவில் உண்டாகும் வருத்தத்தைக் கூறியதாயிற்று.

**1169.** கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா
ணெடிய கழியு மிரா.

இதுவுமது.

(பரி.) இ-ள். இந்நாள் நெடிய கழியும் இரா = காதலரொடு நாமின்புற்ற முன்னாள்களிற் குறியவாய் அவர்பிரிவாற்றேமாகின்ற இந்நாள்களிலே நெடியவாய்ச்செல்கின்ற கங்குல்கள்—கொடியார் கொடுமையின் தாம் கொடிய = அக்கொடியாரது கொடுமைக்குமேலே தாங்கொடுமை செய்யா

*கின்றன. எ-று.*

*தன்னாற்றாமை கருதாது பிரிதலின், 'கொடியார்' என்றாள். கொடுமை = கடிதின்வாராது நீட்டித்தல். அவர்பிரிவானும் நீட்டிப்பானுமுளதாய ஆற்றாமைக்குக் கண்ணோடாமைமேலும் பண்டையினெடியவாய்க் கொடியவாகாநின்றனவென்பதாம்.* (௯)

விளக்கம் :—"நம் காதலருடன் நாம் இன்புற்றிருந்த நாள்களில் குறுகினவாய் அவர் பிரிதலால் பொறுக்கமுடியாத துன்பத்தை யடைந்துள்ள இந்நாள்களில் நீண்டனவாய்க் கழிகின்ற இராக்காலங்கள் அப் பிரிந்து சென்ற கொடியாரது கொடுமையைக் காட்டிலும் அதிகமாகக் கொடுமை செய்கின்றன" என்று இரவின் கொடுமையைத் தலைவி கூறினாளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவனானவன் தன்னுடைய பிரிவினை யான் பொறுத்தற்கு ஆகாது என்று சிறிதுங் கருதாது பிரிந்து போனதுடன் விரைந்து வருவேனென்ற வாக்கின்படி விரைந்து வாராமல் காலத்தை நீட்டிக்கச் செய்யவும் தலைவன் பிரிவினா

12



லும் விரைந்து வாராமையினாலும் உண்டாகிய ஆற்றாமைக்கு இரக்கங் கொள்ளாதிருப்பதுடன் முன்னர் அவரிருந்த காலத்து விரைந்து கழிந்த இராக்காலங்களானவை இப்போது மிக நீண்டு கழிந்து துன்புறுத்துகின்றனவாதலால் மிகக் கொடியவாக உள்ளன என்று கழியாத இரவின் தன்மையை உணர்த்தியதாயிற்று.

1170. உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ள
நீந்தல மன்னோவென் கண். [நீர்

நீன்கண்கள் போழகழிகின்றனவாகலின் அழற்பாலை
யல்லையென்றட்துச் சொல்லியது.

(பரி.) இ-ள். உள்ளம் போன்று உள்வழிச் செல்கிற்பின் = மனம் போலக் காதலருள்ள தேயத்துக் கடிதிற்செல்லவல்லனவாயின், — என் கண்

வெள்ளநீர் நீந்தல=என் கண்கள் இங்ஙனம் வெள்ளமாகிய தந்நீரை நீந்தா. எ - று.

அது மாட்டாமையின் இனி அவற்றிற்கு நீந்துதலேயுள்ளதென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண்வந்தது. மனத்திற்குச் செலவாவது நினைவேயாகலின் 'உள்ளம்போன்று' என்றும், மெய்க்கு நடந்துசெல்ல வேண்டுதலிற் கண்கள் அதனொடுசென்று காதலரைக்காண்டல் கூடாதென்னுங் கருத்தாற் 'செல்கிற்பின்' என்றுங் கூறினள். இதனான் வருகின்ற வழிகாரமுந் தோற்றுவாய் செய்யப்பட்டது. (0)

விளக்கம்:—"மனம் எவ்வாறு செல்லுகின்றதோ அதுபோலக் காதலர் இருக்கின்ற தேயத்துக் கண்கள் விரைவில் செல்லவல்லனவாக இருக்குமாயின், அக்கண்கள் இவ்விதம் வெள்ளம்போல் வழியும் கண்ணீரின நீந்தவேண்டுவதில்லை" என்று 'உன்னுடைய கண்கள் பெரிய அழகினை இழக்கின்றன ஆகலின் அழுதல் வேண்டுவதில்லை' என்று கூறிய தோழிக்குத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! என் மனமானது இருந்த இடத்தில் இருந்து நினைப்பதாலேயே காதலன் உள்ள இடத்தே விரைந்து சென்று அடைவதாக உள்ளது. ஆனால் என் கண்களோ என்னோடு நடந்து சென்று காணவேண்டி உள்ளனவாதலால் நடந்துசெல்லக் கூடாதவளாகிய என்னோடு இருந்து அவரைக் காணக்கூடாமையால் வருந்தி அழுது அழகினை இழக்கின்றன. ஆதலால் அவ்வித கண்களின் தன்மையை எவ்வாறு நீக்குதல்கூடும் என்றாளாயிற்று.

---



## 118. அதிகாரம்.

---

## கண்விதுப்பழிதல்.

(பரி.) அஃதாவது கண்கள் தங்காட்சிவிதுப்பான் வருந்துதல். காட்சி விதுப்புத் தலைமகனைக் காண்டற்கு விரைதல். இது படரான்மெலிந்தவழி நிகழ்வதாகலின், படர் மெலிந்திரங்கலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது தாம் தலைமகனைக் காண்பதற்கு விரைதலால் வருந்துதல். இது நினைவின் முதிர்ச்சியால் துன்புற்று மெலிந்தவிடத்து உண்டாவது ஒன்று ஆதலால் படர்மெலிந்து இரங்கல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வைக்கப்பட்டுள்ளது.

**1171.** கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

**நின்கண்கள் கலுழ்ந்து தம்மழகிழவாநின்றன நீயாற்றல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.**

(பரி.) இ-ள். தண்டா நோய் யாம் கண்டது தாம் காட்ட=இத்தணியா நோயை யாமறிந்தது தாமெமக்குக் காதலரைக் காட்டலானன்றே,—கண்தாம் கலுழ்வது எவன் கொல்=அன்று அத்தொழிலவாய கண்கள் இன்று எம்மைக் காட்டச்சொல்லியழுகின்றது என்கருதி! எ-று.

காட்டவென்பதற்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன்றுந் தாமே காட்டுதலல்லது யாங்காட்டுதல் யாண்டையதென்பதாம். (க)

விளக்கம்:—"இவ்வித தணியா நோயினை யாம் அறிந்தது அக்கண்கள் தாம் எமக்குக் காதலரைக் காட்டியதாலன்றோ? முதலில்கண்ட அன்று அவ்விதம் காட்டும் தொழிலையுடைய இக்கண்கள் பிரிந்து உள்ள இன்று அவரைக் காட்டும்படி எம்மிடம் கூறி அழுகின்றது எது கருதி?" என்று 'உன் கண்கள் அழுது தம்முடைய அழகினை யிழக்கின்றன ஆதலால், நீ ஆறுதல் அடையவேண்டும்' என்ற தோழிக்குத் தலைமகள் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, இப்போது பிரிவால் வருந்தி அழுகின்ற கண்கள் அன்று முதலில் எமக்குத் தலைவரைக் காட்டாதிருக்கின் இவ்வித துன்பம் நேராதன்றோ? இத்தகைய துன்பத்திற்குக் காரணமாக இருந்த கண்களே இன்று அழுது அழகிழந்தால் நாம் அதற்குச் செய்வது யாது உள்ளது என்று கூறியு

1172. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன்.

இதுவுமது.

(பரி.) இ - ள். தெரிந்து உணரா நோக்கிய உண்கண் = மேல்விளைவதனை யாராய்ந்தறியாது அன்று காதலரை நோக்கிநின்ற உண்கண்கள் — பரிந்து உணராப் பைதல் உழப்பது எவன் = இன்று இது நம்மால்வந்ததாகலிற் பொறுத்தல் வேண்டுமெனக் கூறுபடுத்துணராது துன்பமுழப்பது என் கருதி! எ - று.

விளைவது = பிரிந்துபோயவர் வாராமையிற் காண்டற்கரியராய் வருத்துதல். முன்னே வருவதறிந்து அதுகாவாதார்க்கு அது வந்தவழிப் பொறுத்தலன்றே யுள்ளது, அதுவுஞ் செய்யாது வருந்துதல் கழிமடச்செய்கை யென்பதாம். (உ)

விளக்கம்:—"மேல்வரப்போவதை ஆராய்ந்து அறியாமல் காதலரைக் கண்ட காலத்து அவரையே பார்த்து நின்ற மைதீட்டிய கண்கள் அவர் பிரிந்து உள்ள இக்காலத்து இவ்வித துன்பம் நம்மால் வந்ததாதலின் பொறுத்து இருத்தலே வேண்டும் என்று உய்த்து உணராது துன்பத்தால் வருந்துவது எது கருதி" என்று தலைவி தோழிக்குக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஓர் காரியத்தைச் செய்வதற்கு முன்னரே அதனால் வரும் பயனை யறியாது அக்காரியத்தைச் செய்தார்க்கு அக்காரியத்தால் உண்டாகிய பயனைப் பொறுத்துக் கொள்ளுதலன்றோ தகுதியுள்ளது. அவ்விதம் ஆராயாது செய்ததுடன் வருகிற துன்பத்திற்கு வருந்துதல் மிகுதியும் அறியாமையே ஆகும் என்று தன் கண்கள் தலைவனைக் காண்டற்கு விரைவதைக் கூறியதாயிற்று.

1173. கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து.

இதுவுமது.

(பரி.) இ-ள். தாம் கதுமென நோக்கித் தாமே கலுழும் இது = இக் கண்கள் அன்று காதலரைத் தாமே விரைந்துநோக்கி இன்றுந் தாமேயிருந் தழுகின்றவிது — நகத்தக்கது உடைத்து = நம்மாற்சிரிக்கத்தக்க வியல்பினை யுடைத்து. எ-று.

கண்களென்பது அதிகாரத்தான் வந்தது. இதுவென்றது மேற்கூறிய



கழிமடச் செய்கையை. அது வருமுன்னர்க் காப்பார்க்கு நகைவிளைக்குமாகலான், 'நகத்தக்கதுடைத்து' என்றாள். (௩)

விளக்கம்:—"இக்கண்கள் அன்று காதலரைப் பார்த்த காலத்து தாமே விரைந்து பார்த்ததுடன் பிரிந்து உள்ள இன்றும் தாமேயிருந்து அழுகின்ற இத்தன்மை நம்மால் சிரிக்கக்கூடிய இயற்கையுடையதாக உள்ளது" என்று தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, முன்னர்த் தாமே விரைந்து பார்த்ததும் இப்போது வந்த துன்பத்திற்கு ஆற்றுது நிற்பதும் ஆகிய மிகுந்த அறியாமையை உடைய செய்கைக்கு நாம் பார்த்துச் சிரிக்க வேண்டியதாகவே உள்ளது. ஏனெனின்? ஒன்று வருதற்கு முன்னரே காத்துக்கொள்ளாத தகுதியுடையாரை வருமுன்னர்க் காக்கும் தகுதியுடையார் காணின் சிரிப்பதன்றி வேறு என்செய்வது என்று கண்கள் தலைவனைக் காணும் விதுப்பினைக் கூறினளாயிற்று.

1174. பெயலாற்ரு நீருலந்த வுண்க ணுயலாற்ரு
வுய்விலேநோ யென்க ணிறுத்து.

இதுவுமது.

(பரி.) இ-ள். உண்கண் = உண்கண்கள், —உயலாற்று உய்வு இல் நோய் என்கண் நிறுத்து = அன்று யானுய்யமாட்டாமைக் கேதுவாய ஒழிவில்லாத நோயை என்கண்ணே நிறுத்தி, —பெயலாற்று நீர் உலந்த = தாமுமழுதல மாட்டாவண்ணம் நீர் வற்றிவிட்டன. எ - று.

நிறுத்தல் = பிரிதலும் பின்கூடாமையுமுடையாரைக் காட்டி அதனால் நிலைபெறச் செய்தல். முன் எனக்கின்னாதனசெய்தலாற் பின் தமக்கின்னாதன தாமேவந்தன வென்பதாம். (௪)

விளக்கம்:—"என்னுடைய மையுண்ட கண்கள் தலைவனைக் கண்ட அன்று நான் பிழைப்பதற்கு முடியாத,நீங்காத நோயினை என்னிடத்தே உண்டாக்கி, பிரிந்து உள்ள இன்று தாம் அழுவதற்கு முடியாத விதமாக நீர் வற்றி விட்டன" என்று தலைவி தோழிக்குக் கூறியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, கண்ட காலத்துப் பின்னர்ப் பிரிதலும் விரைந்து வந்து கூடாமையும் உடைய தலைவரை முன்னர் எனக்குக் காட்டி எனக்கு ஒழியா நோயினை உண்டுபண்ணினவாதலால் அக்கொடுமை காரணமாக,



"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்"

என்றபடி தாம் தேடாமலே தமக்குத் துன்பங்கள் வந்தன என்று கூறியதாயிற்று.

1175. படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண்.

இதுவுமது.

(பரி.) இ-ள். கடல் ஆற்றாக் காமநோய் செய்த என்கண் = எனக்குக் கடலுஞ் சிறிதாம்வண்ணம் பெரிதாய காமநோயைச் செய்த என்கண்கள்— படல் ஆற்றா பைதல் உழக்கும் = அத்தீவினையாற் றாமுந் துயில்கிலவாய்த்

துன்பத்தையு முழவாநின்றன. எ - று.

காமநோய் காட்சியான் வந்ததாகலின், அதனைக் கண்களேசெய்ததாக்கிக் கூறினான், துன்பம் அழுதலானுயது. (ரு)

விளக்கம் :—"எனக்குக் கடலும் சிறிய அளவினை யுடையது என்னும்படிப் பெரியதாகிய காமநோயினைச் செய்தனவாகிய என் கண்கள் அத்தீவினையினால் தாமும் தூங்காதனவா யிருப்பதுடன் துன்பத்தையும் அடைந்து வருந்துகின்றன" என்று தலைவி தோழிக்குக் கூறினாளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, முன்னர்க் கண்ட காட்சியால் தலைவி காம நோயினைக் கொண்டாளாதலால் அந்நோயினைக் கண்களே செய்தனவாகக் கூறி அவ்விதம் முன்னர் எனக்குத் துன்பஞ் செய்த கண்கள் தலைவனும் பிரிந்துள்ள இப்பொழுது தாம் அழுது அழுது துன்பத்தை அடைகின்றன என்று தலைவனைக் காண்டற்குக் கண்கள் விரைவதைக் கூறினாளாயிற்று

## 1176. ஓஒவினிதே யெமக்கிந்நோய் செய்தகண் டாஅ மிதற்பட் டது.

இதுவுமது.

(பரி.) இ - ள். எமக்கு இந்நோய் செய்த கண் தாம் இதற்பட்டது= எமக்கிக்காமநோயினைச் செய்த கண்கடாமும் இத்துயிலாதழுதற் கண்ணே பட்டது—ஓஒ இனிதே=மிகவுமினிதாயிற்று. எ - று.

ஓவென்பது மிகுதிப்பொருட்கண்வந்த குறிப்புச்சொல். தம்மால் வருத்தமுற்ற வெமக்கு அது தீர்ந்தாற்போன்றதென்பதாம். (சு)



விளக்கம் :—" எமக்கு இக்காம நோயினை உண்டாக்கிய கண்கள் தாமும் அவ்விதம் தூங்காது அழுதல் தொழிலில் சேர்ந்தது. ஓகோ! இது மிகவும் இனிமையுடையதாயிற்று" என்று தலைவி தோழிக்குக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தன் காமநோய்க்குக் கண்

களைக் காரணமாகக் கூறினாதலால் அக்கண்கள் இப்பொழுது அழுது படுகின்ற துன்பத்தை நோக்கிய தலைவியானவள் அக்கண்களால் தான் அடைந்த வருத்தம் அக்கண்கள் இப்பொழுது படும் துன்பத்தை நோக்குங் காலத்துத் தன்னை விட்டு நீங்கியது போலுள்ளது என்று கூறியதாயிற்று. அது என்னையோவெனில்? உலகத்துத் தமக்குத் துன்பஞ் செய்த ஒருவர் துன்பம் அடைவதைக் காணின் மகிழ்ச்சி கொண்டு தாம் அடைந்த துன்பம் கழிந்ததுபோல் இன்புறுவது வழக்காதலால், இவ்விதம் கூறினாளாயிற்று.

## 1177. உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

இதுவுமது.

(பரி.) இ-ள். விழைந்து இழைந்து வேண்டி அவர்க் கண்ட கண் = விழைந்து உண்ணெகிழ்ந்து விடாதே அன்று அவரைக் கண்ட கண்கள்— உழந்துழந்து உள்நீர் அறுக = இன்று இத்துயிலாதழுங்கலாய துன்பத்தினை யுழந்துழந்து தம்மகத்துள்ளநீர் அற்றேபோக. எ-று.

அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகிய இடத்துநிகழ் பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. (எ)

விளக்கம்:—"விரும்பி மனங் குழைந்து விடாது அன்று தலைவரைக் கண்ட கண்கள் இன்று இவ்விதம் தூங்காது வருந்துவதாகிய துன்பத்தினை மிகுதியும் மேற்கொண்டு தம் முள்ளிடத்தே உள்ள நீரானது அற்றேபோக" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஆய்ந்து உணராமல் அன்று விருப்ப மிகுதியால் இடைவிடாது பார்த்தமையாலன்றோ பிரிவாகிய இக்காலத்து இத்துணைத் துன்பத்தை யடைதல் வேண்டியுள்ளது. ஆகலால் இனி அழுவதற்கு மில்லாமல் தன்னிடத்தே உள்ள நீரும் அற்றுப்போகும்படி வருந்துக

என்று தனக்குள்ள துன்பத்தை எடுத்துக் கூறினாளாயிற்று.



1178. பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண்.

காதலர் பிரிந்துபோயினாரல்லர் அவரிண்டுளர் அவரைக் காணுமளவும் நீயாற்றல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். பேணாது பெட்டார் உளர்=நெஞ்சால் விழையாது வைத்துச் சொன்மாத்திரத்தால் விழைந்தவர் இவ்விடத்தேயுளர்;—மற்று அவர்க்கண் காணாது அமைவில=அவ்வுண்மையாற் பயன்யாது, அவரைக் கண்கள் காணாதமைகின்றன வில்லையாயின. எ-று.

செயலாற்பிரிந்து நின்றமையிற் 'பேணாது' என்றும், முன்னலம்பாராட்டிப் பிரிவச்சமும் வன்புறையுங் கூறினாராகலிற் 'பெட்டார்' என்றுங் கூறினாள். மன் ஒழியிசைக்கண் வந்தது. மற்று வினைமாற்றின்கண் வந்தது. ஒகாரம் அசைநிலை. யானாற்றவுங் கண்கள் அவரைக் காண்டற்கு விரும்பா நின்றன வென்பதாம். இனிக்கொண்கனைபென்று பாடமாயின், என்கண்கள் தம்மைக்காணாதமைகின்ற கொண்கனைத் தாங்காணாதமைகின்றனவில்லை இவ்வாறே தம்மையொருவர் விழையாதிருக்கத் தாமவரை விழைந்தார் உலகத்துளரோவென்றுரைக்க. இதற்கு மன் அசைநிலை. (அ)

விளக்கம்:—"மனத்தால் விரும்பாது இருந்து சொல்லளவால் விரும்பிய தலைவர் இவ்விடத்தே உள்ளனர். அவ்விதம் அவர் இவ்விடத்தே இருந்தும் பயன் ஒன்றுமில்லை. ஏனெனில்? அவரைக் கண்கள் காணுமல் பொருந்துவனவாய் இல்லையாதலின்" என்று 'உன்னுடைய காதலர் உன்னைவிட்டுப் பிரிந்துபோவதில்லை அவர் இங்குதான் இருக்கின்றனர். அவரைக் காணும்வரையும் நீ பொறுத்திருத்தல் வேண்டும்' என்று கூறிய தோழிக்குத் தலைமகள் கூறினாள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து, அகநக நட்பது நட்பு" என்று கூறிய வண்ணம் மனத்தால் விரும்பாது முகத்தால் விரும்பி வாக்களவாக நலம் புணர்ந்து உரைத்துப் பிரிவினால் உண்டாகிய துன்பத்தையும் கூறி விரைந்து வருவேன் என்று கூறிய சொற்களையும் காப்பாற்றாமல் நின்ற தலைவர் சமீபத்திலிருக்கிலென்? தூரத்தில் சென்றாலென்? அவரைப் பாராத கண்கள் என்னைத் துன்புறுத்துகின்றன. தம்மைக் காணவிரும்பாத தலைவனை விரும்பி இடர்ப்படுகின்ற இக்கண்களின் அறிவு இருந்தவாறு என்னே! என்று கூறியதாயிற்று.

## கண்விதுப்பழிதல் 97

1179. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்.

நீயுமாற்றி நின்கண்களுந் துயில்வனவாதல் வேண்டுமென்ற
தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். வாராக்கால் துஞ்சா=காதலர் வாராதஞான்று அவர் வரவு பார்த்துத் துயிலா,—வரின் துஞ்சா=வந்தஞான்று அவர்பிரிவஞ்சித் துயிலா,—ஆயிடைக் கண் ஆரஞர் உற்றன=ஆகலான் அவ்விருவழியும் என் கண்கள் பொறுத்தற்கரிய துன்பத்தினையுடைய. எ-று.

ஆயிடையெனச் சுட்டு நீண்டது. இனி அவற்றிற்குத் துயில் ஒரு ஞான்று மில்லையென்பதாம். (கூ)

விளக்கம் :—"நம் காதலர் வாராத நாளில் அவர் வருகையைப் பார்த்துத் தூங்காதனவாயின. அவர் வந்த நாளில் அவர் எங்குப் பிரிந்து போகின்றாரோ என்று பயந்து தூங்காதனவாயின. ஆதலால் வந்த நாளிலும் வாராத நாளிலும் என்னுடைய கண்கள் பொறுத்தற்கு முடியாத துன்பத்தினையே உடையவாயின" என்று நீயும் பொறுத்துக் கொண்டு இருத்தல் வேண்டும், உன் கண்களும் தூங்குதல் வேண்டும் என்று கூறிய தோழிக்குத் தலைவி பதில் கூறினளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோ வெனின்? என் கண்கள் தலைவர் வந்த காலத்தும் தம்மைவிட்டுப் பிரிந்து போகாவண்ணம் விழித்த வண்ணமாக இருந்தன. பிரிந்து வாராத இக்காலத்தும் அவரைக் காண விரும்பித் தூங்காதனவாயுள்ளன. இவ்வித தகுதியுடையனவாகிய என் கண்கள் ஓர் காலத்தும் தூங்குவது இல்லை என்று கூறியதாயிற்று.

1180. மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

காதலரை இவ்வூர் இயற்பழியாமல் அவர்கொடுமையை
மறைக்கவேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ - ள். எம்போல் அறைபறை கண்ணார் அகத்து மறை பெறல் = எம்மைப்போலும் அறைபறையாகிய கண்ணினையுடையார் தந்நெஞ்சின்கணடக்கிய மறையையறிதல்—ஊரார்க்கு அரிதன்று = இவ்வூரின்கணுள்ளார்க்கு எளிது. எ - று.

மறையென்றது ஈண்டு மறைக்கப்படுவதனை. அகத்துநிகழ்வதனைப் புறத்துள்ளார்க் கறிவித்தலாகிய தொழிலான் ஒற்றுமையுண்மையின், 'அறைபறை





யாகிய கண்' என்றான். இங்ஙனஞ் செய்யுள்விகாரமாக்காது அறைபறைக் கண்ணாரென்று பாடமோதுவாரு முளர். யான் மறைக்கவும் இவை வெளிப்ப

டுத்தா நின்றன வென்பதாம். (ஸ)

விளக்கம் :—"எம் போல் ஊரார்க்கு அறிவிப்பதற்கு அடிக் கின்ற பறை வாத்தியம்போன்ற கண்ணினை உடையவர்கள் தம் மனத்தில் அடக்கிய இரகசியமாகிய விஷயங்களை அறிந்து கொள்ளு தல் இவ்வூரில் உள்ளவர்களுக்கு மிக எளிமையே யாகும்" என்று 'உன் தலைவரை இவ்வூரவர் அவர் குணத்தைப் பழியாத விதமாக அவர் வா ராத கொடுமையை மறைத்து வைத்தல் வேண்டும்' என்று கூறிய தோ ழிக்குத் தலைவி பதில் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதா வது, நான் எவ்வளவு மறைத்து வைக்கினும் என்னுடைய கண்கள் ஊரி லுள்ளார்க்குக் கூவிச் சொல்லுகின்ற பறை வாத்தியம்போல் விடாது அழுதலால் வெளிப்படுத்தி விடுகின்றன. ஆதலால், இவ்வித கண் களையுடைய யான் காதலரை ஊரவர் பழியா வண்ணம் எவ்வாறு காப் பது? என்று கண்களின் விதுப்பை மிகுத்துக் கூறினளாயிற்று.

---

## 119. அதிகாரம்.

---

## பசப்புறுபருவரல்.

(பரி.) அது பசப்புற்ற பருவரலென விரியும். அஃதாவது பசப்புறுத லானுய வருத்தம். இதனைப் "பக்தெறிந்தவயர்"* என்பதுபோலக் கொள்க. பசப்பாவது பிரிவாற்றுமையான் வருவதோர் நிறவேறுபாடு. இது, தலைமக னைக் காணப்பெறுதவழி நிகழ்வதாகலின், கண்விதுப்பழிதலின்பின் வைக் கப்பட்டது.

விளக்கம்:—அதாவது நிறவேறுபடுதலால் உண்டாகும் வருத் தம். இந்நிற வேறுபாடானது தலைமகனைக் காணுமையால் பிரிவாற்

றுது வருந்துவதால் உண்டாகும் தன்மையாதலால் கண் விதுப்பு அழிதல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வைக்கப்பட்டுள்ளது.

---

* கலி.



1181. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற.

முன் பிரிவுடம்பட்ட தலைமகள் அஃதாற்றாது பசந்தவழித் தன்னுள்ளே சொல்லியது.

(பரி.) இ-ள். நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன்=என்னை நயந்தவர்க்கு அதுபொழுது பிரிவையுடம்பட்ட நான்—பசந்த என் பண்பு யார்க்கு உரைக்கோ=அதனையாற்றாது இதுபொழுது பசந்தவென்னியல்பினை யார்க்குச் சொல்வேன்! எ-று.

பிறவென்பது அசைநிலை. உடம்படாவழி ஒழிதல்குறித்துப் பிரிவுணர்த்தினாராகலின் அவரன்புடையரென்னுங்கருத்தான் 'நயந்தவர்' என்றும், இதுவேயுடம்பாடாக மேலும் பிரிவு நிகழுமாகலின் இனி அவரைக் கூடுதலரிதென்னுங் கருத்தான் 'நல்காமை' என்றும், முன்னருடம்படுதலும் பின்னராற்றாது பசத்தலும் பிறர்செய்தனவல்ல வென்பான் 'பசந்தவென் பண்பு' என்றும், யான் செய்துகொண்ட துன்பத்தினை இனியொருவர்க்குச் சொல்லலும் பழியாமென்னுங் கருத்தால் 'யார்க்குரைக்கோ' என்றுங் கூறினள். (க)

விளக்கம்:—"என்னை விரும்பி நின்றவராகிய தலைவர் தான் பிரிவதாகக் கூறிய காலத்து அப்பிரிவினுக்கு உடன்பட்டவளாகிய நான் இப்பொழுது அப்பிரிவினைப் பொறுக்க முடியாமல் நிறவேறுபாட்டினை அடைந்த என் தன்மையை யாருக்குச் சொல்லுவேன்?" என்று முன்

பிரிவிற்கு உடன்பட்ட தலைமகளானவள் அப்பிரிவிற்குப் பொறுக்க முடியாது தன் மேனி குலைந்த காலத்து தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அவர் பிரிவிற்கு உடன்படாவிடின் துன்பமாமென்று எண்ணி உடன்பட்டு இப்போது அப்பிரிவிற்கு ஆற்றாது நிறவேறுபாட்டினை அடையும் துன்பமானது யானே செய்து கொண்டது ஒன்று ஆதலால் இதனை யார்க்கு எடுத்துச் சொல்லுதல் கூடும் என்று தன்னையே நொந்துகொண்டாளென்று கூறியதாயிற்று.

1182. அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.

ஆற்றாளெனக் கவன்றதோழிக்கு ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.

(பரி.) இ-ள். யானாற்றியுளேனாகவும்,—பசப்பு = இப்பசப்புத்தான் தந்தார் அவர் என்னும் தகையால் = என்னையுண்டாக்கினார் அவரென்னும்



பெருமிதத்தான்,—என் மேனிமேல் இவர்ந்து ஊரும் = என்மேனியைமேல்கொண்டு செலுத்தாநின்றது. எ-று.

“குருதிகொப் புளிக்கும் வேலான் கூந்தன்மா விவர்ந்து செல்ல”* என்புழியும் இவர்தல் இப்பொருட்டாதலறிக. இஃது உரிமைபற்றி யூர்கின்றது, இதற்கு நீ கவலல்வேண்டா வென்பதாம். (உ)

விளக்கம்:—“நான் பொறுத்துக்கொண்டு இருப்பேனாகவும், இப்பசப்பு என்னும் நிறவேறுபாடானது தன்னை உண்டாக்கினார் அத்தலைவர் என்கின்ற இறுமாப்பினால் என் மேனியின்மீது தானே மேற்கொண்டு செலுத்துகின்றது” என்று பொறுக்கமாட்டாள் என்று கவலை கொண்ட தோழிக்குப் பொறுத்துக் கொள்வேன் என்பதுபடத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! நீ கவலைப்படுதல் வேண்டாம். இப்பசப்பு என்னும் நிறவேறுபாடோ

என் மீது தனக்கு உள்ள உரிமையால் மேலும் மேலும் அதிகரித்தது. எவ்வாறெனின்? என்னை உண்டாக்கியவர் இவளது தலைவராகும். இவள் மீது நான் அஞ்சாது பரவுவேன் என்று படருகின்றது என்று தலைவனைப் பிரிந்த துன்பத்தினைக் கூறியதாயிற்று.

1183. சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையுந் தந்து.

அழகுநாணு மழியாமல் நீ யாற்றல்வேண்டுமென்ற
தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ - ள். கைம்மாறு நோயும் பசலையும் தந்து = பிரிகின்றஞான்றே அவ்விரண்டற்குத் தலைமாறாக இக்காமநோயினையும் பசலையையும் எனக்குத் தந்து, — சாயலும் நாணும் அவர் கொண்டார் = என்மேனியழகினையும் நாணினையும் அவர் கொண்டுபோயினர். எ - று.

எதிர்நிரனிறை. அடக்குந்தோறும் மிகுதலான், நோய் நாணிற்குத் தலை மாறாயிற்று. இனி, அவர் தந்தாலல்லது அவையுளவாகலும் இவையில வாதலுங் கூடாவென்பதாம். (௩)

விளக்கம்:—"பிரிந்ததினமே அழகிற்கும் நாணத்திற்கும் மாறுதலாக இக்காம நோயினையும் பசலை பூப்பதையும் எனக்குக் கொடுத்து என்மேனி அழகினையும் நாணத்தையும் என் தலைவராய இவர் கொண்டு போய்விட்டனர்" என்று அழகும் நாணமும் அழியாதிருக்கும்படி நீ

* சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம், 1.



பொறுத்தல் வேண்டும் என்று கூறிய தோழிக்குத் தலைவி பதில் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, எனது காமநோயை நான் அடக்க முயலுந்தோறும் அந்நோய் மிகுந்து நாணத்திற்குப் பகையாகி அந்நாணினை அடக்குதலாலும், நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் நிறவேறுபடுதலால் மேனியழகை யிழத்தலாலும் அந்நினைப்பும்

அதனால் உண்டாகும் நோயும் அவரைக் கண்டு கூடும் வரையில் நீங்காதனவாகும் ஆதலால், அவர் கொடுப்பாராயின் அழகும் நாணமும் எனக்கு உண்டாகும், அல்லையேல் இல்லையாம் என்பதாயிற்று.

1184. உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு.

பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் நற்றிறங்களையு மறிதியாகலின் நீட்டியாது வருவரென்றவழிச் சொல்லியது

(பரி.) இ-ள். யான் உள்ளுவன் = அவர்சொற்களை யான் மனத்தாலினையா நிற்பேன்,—உரைப்பது அவர் திறம் = வாக்காலுரைப்பதும் அவர் நற்றிறங்களையே;—பசப்புக் கள்ளம் = அங்ஙனஞ் செய்யா நிற்கவும், பசப்பு வந்து நின்றது, இது வஞ்சனையாயிருந்தது. எ-று

'பிற'வும் 'ஓ' வும் அசைநிலை. மெய் மற்றை மனவாக்குககளின் வழித்தாகலின் அதன்கண்ணும் வாற்பாற்றன்றுயிருக்க வந்தமையின், இதன்செயல் கள்ளமாயிருந்ததெனத் தானுற்றுகின்றமை கூறியவாறாயிற்று. (௪)

விளக்கம்:—“தோழியே! அவர் சொல்லிய சொற்களை யான் மனத்தால் நினைந்தவண்ணமாக இருப்பதுடன் வாக்கால் கூறுவதும் அவருடைய நல்ல குணங்களே. அவ்விதம் நான் செய்துகொண்டிருந்தும் என் மேனியழகு குலையப் பசப்பு வந்துள்ளது. இது ஓர் வஞ்சனையாக உள்ளது” என்று தலைவர் பிரிந்தகாலத்து அவர் நீ தெளியும்படிச் சொல்லிய சொற்களையும், அவர் நல்ல குணங்களையும் அறிவாயாயின் காலம் நீட்டியாமல் வருவார் என்று உனக்குத் தோன்றும் என்று தோழியானவள் சொல்லியகாலத்து தலைவியானவள் கூறினளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தோழியை நோக்கி மனத்தில் தோன்றுவன எவையோ,வாக்கால் கூறுவன எவையோ,அவைகளின் வழியாகத் தேகத்தின் நிலையிருப்பது இயல்பாக இருக்கவும் மனத்தால் தலைவரை நினைந்தும் வாக்கால் அவர் நல்ல குணங்களை எடுத்துச்சொல்லியும் இருக்கும் நிலைமையிலும் தேகமானது பசப்புக் கொண்டு

அழகினை இழந்தது ஓர் கள்ளச்செய்கையாகவே உள்ளது என்று பசப்பினால் வந்த துன்பத்தைக் கூறினளாயிற்று.

**1185. உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்**
**மேனி பசப்பூர் வது.**

காதலர் பிரிந்தணித்தாயிருக்கவும் ஆற்றுகின்றிலையென்ற
தோழிக்கு முன்னிகழ்ந்தது கூறியது.

(பரி.) இ - ள். எங்காதலர் உவக்காண் செல்வார்=பண்டும் நங்காதலர் உங்கேசெல்வாராக,—என்மேனி பசப்பூர்வது இவக்காண்=என்மேனிபசப்பூர்வதிங்கேயன்றே! அப்பெற்றியது இன்று பிறிதொன்றுமோ! ஏ - று.

'உவக்காண்' 'இவக்காண்' என்பன ஒட்டிநின்ற விடைச்சொற்கள். தேயவண்மையாற் காலவண்மை கருதப்பட்டது. அவர்செலவும் பசப்பினது வரவும் பகலிரவுகளின்செலவும் வரவும்போல்வதறிந்துவைதது அறியாதாய்போல நீ சொல்லுகின்ற தென்னை யென்பதாம் (6)

**விளக்கம்:**—"ஓ தோழியே! நம்முடைய காதலர் நம்மைவிட்டுப் பிரிந்த அன்றைய தினம் சில அடிகள் எடுத்து வைத்ததும் என்மேனி நிறவேறுபாடாகிய பசப்பினை அடைந்தது அல்லையோ. அவ்விதம் இருக்க அவர் பிரிந்து சமீபமாக இருக்கினும் இன்று பசலை இராதிருக்குமோ" என்று உன்னுடைய காதலர் உன்னைப் பிரிந்து வெகு சமீபத்திலிருக்கவும் அவரது பிரிவிற்குப் பொறாது வருந்துகின்றனை என்று கூறிய தோழியைப் பார்த்து தலைவி கூறினளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது பகலும் இரவும் ஒன்று சென்றால் மற்றொன்று வருவதுபோல் அவர் பிரிவும் பசப்பும் சேர்ந்திருக்கவும் நீ அதனைத் தெரிந்திருந்தும் அறியாதவள்போல் கூறுகின்றனை. என் தலைவர் உள்ள சமீபத்தையும் சுருங்கியகாலத்தில் வந்து என்னைச் சேருவர் என்னும் நினைவையும் கொள்ளுவதால் இப்பசப்பு நீங்குவதில்லை. அவர்

வந்த பிறகே இப்பசப்பு நீங்கும் என்றதாயிற்று.

1186. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

இதுவுமது

(பரி.) இ - ள். விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல்=விளக்கி னது மெலிவுபார்த்து நெருங்கிவரு மிருளேபோல—கொண்கன் முயக்கு



அற்றம் பார்க்கும் பசப்பு=கொண்கன்முயக்கினது மெலிவுபார்த்து நெருங்கி வரும் இப்பசப்பு. எ - று.

பார்க்குமென்பன இலக்கணைச்சொல். முன்பிரியாதிருக்கவுந் தனக்கவ காசம் பார்த்துவரும் பசப்புப் பிரிவுபெற்றால் என்செய்யாதென்பதாம். (௬)

விளக்கம்:—"ஓ! தோழியே! விளக்கினது ஒளியானது குறைந்து வருவதைப்பார்த்து நெருங்கி வருகின்ற இருளைப்போல, தலைவனது புணர்ச்சியின் மெலிவினைப் பார்த்து இப்பசப்பானது நெருங்கி வரு கின்றது" என்று தலைவர் சமீபத்திலுள்ளார் நீ ஆற்றுதல்வேண்டும் என்ற தோழிக்குத் தலைவி கூறினளென்று இத்திருக்குறள் கூறுகின் றது. அதாவது நாயகன் என்னோடு சேர்ந்திருந்த காலமெல்லாம் இப் பசப்பென்னும் நிறவேறுபாடானது என்னை அணுகப் பயந்தும் சிறிது என்னை விட்டு அசைவாராயின் மகிழ்ச்சியோடு என் மீது ஏறியும் வருவதாக விருக்க தலைவர் முழுவதும் என்னை விட்டுப் பிரிந்து உள்ள இக்காலத்து என்னை என் செய்யாது. அதனால் எனக்கு வரும் துன் பத்தை எவ்விதம் ஆற்றிக் கொள்வது என்று கூறினளாயிற்று.

1187. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு.

இதுவுமது.

(பரி.) இ - ள். புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் = முன்னொரு ஞான்று காதலரைப் புல்லிக்கிடக்க யான் அறியாது புடைபெயர்ந்தேன், — அவ்வளவில் பசப்பு அள்ளிக்கொள்வற்று = அப்புடைபெயர்ந்தவளவிலே பசப்பு அள்ளிக்கொள்வதுபோல வந்து செறிந்தது. எ - று.

கொளவென்பது குறைந்துநின்றது. அள்ளிக்கொள்வது = அள்ளிக்கொள்ளப்படும் பொருள். அப்புடைபெயர்ச்சி மாத்திரத்துக்கு அவ்வாறாயது இப்பிரிவின்கணுமாறு சொல்லவேண்டுமோ வென்பதாம். (எ)

விளக்கம்:—"முன்னொரு நாள் என் காதலரை அணைத்த வண்ணமாகப் படுத்திருக்க யான் சிறிது அறியாமல் அணைத்த கையைச் சிறிது நீக்கினேன். அவ்விதம் தேகத்தைச் சிறிது அசைத்த அளவிலேயே நிறவேறுபாடாகிய பசப்பு என்பது என் தேகத்தைக் கையால் அள்ளி வாயால் உண்டு விடுவதுபோல் வந்து முழுவதும் மூடிக்கொண்டது" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது.



அதாவது ஒருவரோடொருவர் அணைத்து இருந்த காலத்துச் சிறிது தேகத்தை அசைத்து மறுபடியும் பொருந்துவதற்கு முன் தேகம் பசலை பூத்து விடுமாயின் இவ்விதம் தலைவன் பிரிந்து உள்ள காலத்து நான் எவ்வாறு அந்நிறவேறுபாட்டைக் கொள்ளாது நிற்பது என்று ஆற்றாமையைத் தலைவி தோழிக்குக் கூறியதாயிற்று.

1188. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

நீ யிங்ஙனம் பசக்கற்பாலையல்லையென்ற தோழியோடு
புலந்து சொல்லியது.

(பரி.) இ - ள். இவள் பசந்தாள் என்பது அல்லால் = இவள் ஆற்றியிராது பசந்தாளென்று என்னைப் பழிகூறுவதல்லது — இவளை அவர் துறந்தார் என்பார் இல் = இவளையவர் துறந்துபோயினாரென்று அவரைக் கூறுவாரொருவருமில்லை. எ - று.

என்பாரென வேறுபடுத்துக்கூறினள், தன்னையே நெருங்குதல்பற்றிப் புலக்கின்றமையின். (அ)

விளக்கம்:—"இவள் பொறுத்து இராது நிறவேறுபாட்டினை அடைந்தாளென்று என்னைப் பழி கூறுவதல்லாமல் இவளை அவர் விட்டு நீங்கிப் போயினர் என்று என்னைப் பிரிந்து உள்ள அவரைக் கூறுவார் ஒருவருமில்லை" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது நீ இவ்விதம் நிறவேறுபாடு கொள்ளுதல் ஆகாது என்று கூறிய தோழியை நோக்கி இவ்வூரவர் என்னைப் பழி கூறுவது அல்லாமல் என்னை விட்டுச் சென்ற தலைவரைப் பழித்தலைக் காணேன் என்று கோபித்துச் சொன்னாளென்று அறிந்ததாயிற்று.

1189. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

இதுவுமது.

(பரி.) இ-ள். நயப்பித்தார் நன்னிலையராவர் எனின்=இப்பிரிவை யானே யுடம்படும்வகை சொல்லியவர் இன்று நின்கருத்தான் நல்ல நிலையின ராவராயின்,—என்மேனி பட்டாங்கு பசக்க=என்மேனி பட்டதுபடப் பசப்பதாக. எ-று.

நன்னிலையராதல்=நன்மைக்கண்ணே நிற்றலையுடையராதல். பட்டாங் காகவென ஆக்கம் விரித்துரைக்க. முன் இப்பிரிவின் கொடுமையறியாத



வென்னை இதற்குடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராகவேவேண்டுவது, என் மேனியும் பசப்பும் யாதுசெய்யினென் னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. (க)

விளக்கம்:—"இப்பிரிவினை யான் உடன்படும் விதமாகச் சொல்லிய காதலர் இன்று உன் கருத்தின் வண்ணம் நன்னிலையில் நிற்பவராக இருப்பாராயின் என் மேனி எவ்வளவு பசப்பினை யடைந்தாலும் அத

ஞல் எனக்கு யாதொரு துன்பமுமில்லை. எதுவாயினும் ஆகட்டும்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஆற்றுதல் வேண்டுமென்ற தோழியை நோக்கித் தோழியே! தலைவரானவர் பிரிவு என்பது இதுவென்று அறியாத என்னை இப்பிரிவிற்கு உடன்படுத்திப் பிரிந்து சென்றவர் பிரிந்ததுடன் குறித்த காலத்தில் வரவில்லை யாதலால் அவர் நன்மையினைக் கடைபிடித்தவர் அல்லர். நன்மையுடையவராயின் என் மேனி வேறுபட்டது இன்னும் படட்டும். அதனுல் எனக்கு யாதொரு துன்பமுமில்லை என்று தன் தலைவரைப் பழியாது தனக்கு ஆறுதல் சொல்லிய தோழிக்குக் கோபித்துக் கூறியதாயிற்று.

1190. பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்று ரெனின்.

தலைமகளாற்றுதற்பொருட்டுத் தோழி தலைமகனையியற்
பழித்தவழி அவள் இயற்படமொழிந்தது.

(பரி.) இ - ள். நயப்பித்தார் நல்காமை தூற்றுரெனின்=அன்று தாங் குறைநயப்பித்துக் கூடினவர்க்கு இன்று நல்காமையை நட்டோர் தூற்றுராயின்,—பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே=பசப்புற்றளென வேற்றுமையானன்றிப் பசப்புத்தானுயினளென ஒற்றுமையாற்றுஞ்சொல்ல அப்பெயரைப் பெறுதல் எனக்கு நன்று; எ - று.

நட்டாரென்பது அவாய்நிலையான் வந்தது. இயற்பழித்தல்பொறுது புலக்கின்ருளாகலின், இகழ்ச்சிக்குறிப்பாற் கூறினுள். அவரை அருளிலரென்னுது இன்னும் பசந்தாளிவளென்கையே யானுற்று நெறியாவதென்பதாம்.

விளக்கம்:—" என்னை எதிர்ப்பட்ட அன்று தாம் தம்முடைய குறையைக் கூறி என்னை விரும்பும்படிச் செய்து என்னேடு கூடினவர்க்குப் பிரிந்து நின்ற இன்று அவர் வந்து இன்பம் தாராமையை நட்

14

பினராவார் எடுத்துச் சொல்லாராயின் பசப்பினை இவள் அடைந்தாள் என்ற வேறுபாடு கொள்ளும் வண்ணம் கூறாது பசப்பே ஆய்விட்டனள் என்று ஒற்றுமையால் சொல்லும் அப்பெயரினை யான் பெறுதல் எனக்கு நன்றாகும்" என்று தலைமகள் பிரிவினைப் பொறுத்துக் கொள்ளும் வண்ணம் தோழியானவள் தலைமகனது நற்குணங்களைப் பழித்துச் சொல்லிய விடத்துத் தலைமகள் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! தலைவன்பொருட்டு நான் நிறவேறு பட்டேன் என்று உலகத்தவர் கூறுகின்றனரே அன்றி, அன்று தம் குறைநீங்கும் வண்ணம் எனக்கு நயப்பாகிய வார்த்தைகளைக்கூறி கூடினராகிய தலைவற்கு என் குறை இதுவென்று சொல்வார் இல்லை. இவ்விதம் அவர்க்கு என் குறை கூறாது அவரை அருளில்லாதவர் என்று கூறுவதல்லாமல் இவளே இன்னும் முற்றும் நிறவேறுபாடு ஆயினாள் என்று என்னைப் பழிக்க அதுவே நான் ஆற்றி நிற்கும் வழியாகும் என்று கோபித்துத் தலைவி இகழ்ச்சிக் குறிப்பாகக் கூறியதாயிற்று.

---

## 120. அதிகாரம்.

---

# தனிப்படர்மிகுதி.

(பரி.) அது தனியாகிய படர்மிகுதியென விரியும். அஃதாவது படர்மிகுதி தலைவன்கணின்றித் தன்கண்ணேயாதல் கூறுதல். அறமும் பொருளுநோக்கிப் பிரிதலின் அவன்கண் இல்லையாயிற்று. இது, பசப்புற்று வருந்தியாட்குரியதாகலின், பசப்புறுபருவரலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது தனியாகியதால் உண்டான துன்பமிகுதி என்பதாம். அதாவது பிரிவினால் உண்டாகும் துன்பமிகுதி பிரிந்து சென்ற தலைவனிடத்து இல்லாது பிரிவு ஆற்றாத தன்னிடத்தே இருப்

பதாகக் கூறுதல். ஏனெனில் அறத்தைக் கருதியோ, பொருளைக் கருதியோ தலைவன் பிரிந்தானாதலின் அப்பிரிவினால் உண்டாகும் துன்ப மிகுதி அவனுக்கு இல்லையாயிற்று. இத்தனிப்படர் மிகுதி பிரிவினால் நிறவேறுபட்டு வருந்திய தலைவிக்கு உரியதாகலின் பசப்புறுபருவரல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வைக்கப்பட்டு உள்ளது.

## தனிப்படர்மிகுதி 107

1191. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.

காதலரும் நின்னினுமாற்றாராய்க் கடிதின்வருவர் நீயவரோடு
பேரின்பநுகர்தியென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். தாம் வீழ்வார் தம் வீழப் பெற்றவர் = தம்மாற்காதலிக் கப்படுங் கணவர் தம்மைக் காதலிக்கப்பெற்ற மகளிர்—பெற்றாரே காமத்துக் காழ் இல் கனி = பெற்றாரன்றே காமநுகர்ச்சியென்னும் பரலில்லாத கனியை; எ-று.

காமம் ஆகுபெயர். அத்து அல்வழிக்கண் வந்தது. முன்னை நல்வினை இல்வழிப்பெறப்படாமையிற் 'பெற்றார்' என்றும், அவராற் றடையின்றி நுகரப்படுதலிற் 'காழில்கனி' என்றுங் கூறினாள். நங்காதலர் பிரிதலே யன்றிப் பின் வாராமையுமுடைமையின், அக்கனி யாம் பெற்றிலே மென்ப தாயிற்று. (க)

விளக்கம் :—"தம்மால் விரும்பப்படும் கணவர் தம்மை விரும்பும் படி அடையப்பெற்ற பெண்கள் அல்லவோ காம இன்பமென்னும் விதையில்லாத கனியை அடைந்தவர்கள்" என்று பிரிவினால் வருந்து கின்ற தலைவியை நோக்கித் தலைவியே! உம்முடைய காதலரும் பிரிவினால் உண்டாகும் துன்பத்து உன்னைக் காட்டிலும் அதிகமாகப் பொறுக்க முடியாத தன்மையராக விரைவில் வருவர். நீ அவரோடு கூடி பேரின் பத்தை அனுபவிப்பாயாக என்று கூறிய தோழியைப் பார்த்துத் தலைவி

கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தோழியே! நாம் கணவரை விரும்புவதுபோல் கணவராலும் விரும்பப்படும் பெண்களல்லவோ தாம் அனுபவிப்பதற்கு உரிய விதை இல்லாத பழங்களைக் கண்டவுடன் போக்கில்லாமல் முற்றும் உடனே அருந்துவதுபோல் காமநுகர்ச்சி யென்னும் இன்பத்தை அனுபவிப் பர். இவ்விதம் ஒருவரை யொருவர் விரும்பி அனுபவிக்கும் இன்பம் முன்னை நல்வினையுடையார் பெறுவரே அன்றி நல்வினை யில்லாத யான் பெறுவதற்கு இல்லை. இனி நம் காதலர் பிரிந்து சென்றமையே அல் லாமல் பின் வாராமையும் உடையராயிருத்தலால் அவரோடு கூடி அனு பவிக்கும் இன்பத்தை நான் பெறுவதற்கு இல்லையாயிற்று என்று கூறி யதாயிற்று.



1192. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.

இதுவுமது.

(பரி.) இ - ள். வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி=அறமும் பொருளு நோக்கிப் பிரிந்தாற் றம்மை யின்றியமையா மகளிர்க்கு அவரை யின்றியமையாக்கணவர் அளவறிந்து வந்து செய்யுந் தலையளி—வாழ்வார்க்கு வானம் பயந்தற்று=தன்னையே நோக்கி உயிர்வாழ்வார்க்கு வானம் அள வறிந்து பெய்தாற்போலும்; எ - று.

நங்காதலர் நம்மை விழையாமையின் அத்தலையளி யில்லையாகலான், மழைவறந்துழி அதனுன் வாழாதார்போல இறந்துபடுதலே நமக்குள்ள தென்பதாம். (உ)

விளக்கம்:—“ அறத்தினையும் பொருளினையும் எண்ணி தலைவர் பிரிந்தால், தாம் இல்லாது உயிர் வாழாத பெண்களுக்கு அப்பெண் களை யில்லாது உயிர் வாழாத தலைவர், பிரிந்த காலத்தின் அளவை

அறிந்து, குறித்த பருவத்து வந்து செய்யுந் தலை அளியாகிய இன்பம் நுகர்தல், தன்னையே நோக்கி உயிர் வாழ இருக்கின்ற மக்கட்கு மழை யானது வந்து பெய்து இன்பத்தைத் தந்ததுபோலும்" என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது மழையானது பெய்யவேண்டிய காலத்து எவ்வாறு பெய்து அம்மழையையே நம்பியுள்ள உயிர்களை வாழச் செய்கின்றதோ அதுபோல் மகளிர்மீது நீங்கா அன்புடைய தலைவர்கள் அம்மகளிரைப் பிரிந்த காலத்து அளவறிந்து தாம் குறித்த காலத்து விரைந்து வந்து, கூடி, இன்பத்தை யடையச் செய்வர். நம் காதலரோ பிரிந்ததுடன் குறித்த பருவத்தும் வாராமையால் மழை வறண்ட காலத்து உயிர்கள் வாழாமல் போவதுபோல் வாழாது இறந்துபடுதலே நமக்கு உள்ளதாயிற்று என்று தலைவி தோழிக்குக் கூறினளென்பதாம்.

1193. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு.

இதுவுமது.

(பரி.) இ-ள். வீழுநர் வீழப்படுவார்க்கு அமையுமே=தாம் விழையுங் கணவரான் விழையப்படுமகளிர்க்கு ஏற்புடைத்து—வாழுநம் என்னும்



செருக்கு=காதலர் பிரிந்தாராயினும் நம்மை நினைந்து கடிதின் வருவர், வந்தால் நாமின்புற்று வாழ்துமென்றிருக்குந் தருக்கு; எ-று.

நாம் அவரான் விழைப்படாமையின், நமக்கமைவது இறந்துபாடென்பதாம். (௩)

விளக்கம்:—" தாம் விரும்பப்படும் கணவரால் தம்மை விரும்பப்படும் பெண்களுக்குப் பொருந்தும் 'காதலர் பிரிந்தாராகிலும் நம்மை நினைந்து விரைந்து வருவார். அவ்விதம் வந்தால் நாம் இன்பத்தைப் பெற்று வாழ்வோம்' என்று இருக்கும் இறுமாப்பு" என்று தலைவி கூறின

ளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது நாம் விரும்பும் கண வரால் விரும்பப்பட்டுள்ள பெண்களுக்குக் காதலர் நம்மைப் பிரிந்து சென்றாராயினும் நம்மீது உள்ள அன்பின் மிகுதியால் விரைந்து வருதல் கூடும். அவ்வாறு வருங் காலத்து நாம் காமநுகர்ச்சியாகிய இன்பத்தை அனுபவித்து வாழ்ந்து இருப்போம் என்று எண்ணக்கூடிய கர்வம் பொருத்தமாம். ஆயின் நாம் விரும்பிய காதலர் நம்மை விரும்பவில்லையாதலால் நாம் தருக்கோடு பகர்வதற்கு இல்லாதிருப்பதுடன் இறந்துபடுவதே நமக்குப் பொருந்தியதாயிற்று என்று தலைவனது அன்பின்மையையும் தனது பிரிவாற்றாமையையும் தலைவி கூறினளென்பதாயிற்று.

## 1194. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார் வீழப் படாஅ ரெனின்.

**காதலரை யியற்பழித்தலையஞ்சி அவரதளின்மை மறைத்த நீ கடவுட் கற்பினையாகலிற் கற்புடைமகளிரால் நன்கு மதிக்கப்படுதியென்ற தோழிக்குச் சொல்லியது.**

(பரி.) இ - ள். வீழப்படுவார்=கற்புடைமகளிரால் நன்குமதிக்கப்படுவாரும்—தாம் வீழ்வார் வீழப்படாரெனிற் கெழீஇயிலர்=தாம் விரும்புங் கணவரான் விரும்பப்படாராயிற் றீவினையாட்டியர்; எ-று.

சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. கெழீஇயின்மை=நல்வினையின்மை; அஃது அருத்தாபத்தியாற் றீவினையுடைமையாயிற்று. தீவினையுடையேற்கு அந்நன்குமதிப்பாற் பயனில்லை யென்பதாம் (ச)

**விளக்கம்:—**" கற்புடைய பெண்களால் நன்மதிப்பை அடைந்த பெண்களும் தம்மால் விரும்பப்பட்ட கணவரால் விரும்பப்படாது



போவாராயின் அப்பெண்கள் தீவினையின் பயனை அனுபவிப்பவராவர்" என்று ஓ! தலைவியே! உன்னுடைய காதலர் உன்னைப் பிரிந்தமையை

யும் குறித்த காலத்து வாராமையையும் எண்ணி அவர் குணங்களைப் பிறர் பழித்த காலத்து அப்பழி கூறலுக்குப் பயந்து அவர் அருளில்லாமையை மறைத்து அருளுடையவர் என்று புகழ்ந்து கூறிய நீ தெய்வத் தன்மை தங்கிய கற்புடையவளாகின்றாய். அதனால் கற்புடைய பெண்களால் மிகவும் மதிக்கப்படுவாய் என்று தான் ஆற்றும்படி கூறிய தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! நீ கூறியது ஒக்கும். கற்புடைய பெண்களால் மதிக்கப்படக்கூடிய கற்புடைய பெண்களாயினும் தாம் விரும்பி மணந்து கொண்ட தலைவரால் விரும்பப்படாவிடில் தாம் பிறரால் அடைந்த நன்கு மதிப்பால் என்ன பயனை அடைதல் கூடும் நல்வினைப் பயனால் ஒரு பக்கத்து நன்கு மதிப்பை அடையினும் தீவினைப் பயனுகைக் கணவரால் விரும்பப்படாது இறந்து போதலே உண்டாகும் என்று பிரிவாற்றாமையையும் காதலர் குறித்த பருவத்து வாராமையை யுப் கூறியதாயிற்று.

1195. நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

அவர்மேற் காதலுடைமையின் அவர் கருத்தறிந்தாற்றின
யென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ன். நாம் காதல் கொண்டார் நமக்கு எவன் செய்ப = நம்மாற் காதல்செய்யப்பட்டவர் நமக்கென்னவின்பத்தைச் செய்வர், — தாம் காதல் கொள்ளாக் கடை = அவ்வாறே தாமும் நங்கட்காதல் செய்யாவழி; எ-று.

எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அக்காதலுடைமையால் நாம் பெற்றது துன்பமே யென்பதாம். (௫)

விளக்கம்:—"நம்மால் விரும்பப்பட்ட காதலர் நாம் காதல் கொண்டதுபோல் அவரும் நம்மிடத்துக் காதல் செய்யாவிடின் அவர் நமக்கு என்ன இன்பத்தைச் செய்தல் கூடும்" என்று தலைவியே! நீ தலைவர்மீது

காதல் உடையவள் ஆதலின் அத்தலைவர் கருத்தினை யறிந்து ஆறுதல் அடைந்திருந்தனை என்று கூறிய தோழியை நோக்கித் தலைவி கூறிய



தாக இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனின், நாம் தலைவர் மீது எவ்வளவு காதலுடையவராக இருப்பினும் அவர் நம்மீது காதல் செலுத்தவில்லையாதலால் நாம் காதலுடையவராக இருப்பதின் பயன் துன்பம் அனுபவித்தலே அன்றி வேறு யாது உளது என்று கூறியதாயிற்று.

1196. ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது.

இதுவுமது.

(பரி.) இ-ள். காமம் ஒரு தலையான் இன்னாது = மகளிர் ஆடவ ரென்னு மிருதலையினும் வேட்கை ஒரு தலைகண்ணேயாயின் அஃதின்னாது; —காப்போல இருதலையானும் இனிது = காவினது பாரம்போல இருதலைக் கண்ணுமொப்பின், அஃதினிது; எ - று.

மூன்றனுருபுகள் ஏழன்பொருண்மைக்கண் வந்தன. கா = ஆகுபெயர். என்மாட்டுண்டாயவேட்கை அவர்மாட்டுமுண்டாயின், யானிவ்வாறு துன்ப முழத்தல் கூடுமோ வென்பதாம். (௬)

விளக்கம்:—“பெண்களென்றும் ஆண்மக்களென்றும் கூறுகின்ற இருவரிடத்தும் சமமாகிய அன்பில்லாது ஒருவரிடத்தே அன்பு இருக்குமாயின் அவ்வன்பானது மிகுதியும் துன்பத்தையே தருவதாகும். ஆயின் காவடிக் கொம்பு தாங்கும் பாரத்தைப்போல இருவரிடத்தும் அன்பு ஒத்து இருக்குமாயின் அது மிகுதியும் இனிமையைத் தருவதாகும்” என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது அதாவது தோழியே! நீ சொல்லுவது ஒக்கும், தலைவர் மீது எனக்குள்ள அன்பைப போல அவருக்கும் என்மீது அன்பு இருக்குமாயின் யான் இத்துணைத் துன்பங்களை அனுபவிக்கக் கூடுமோ? என்மீது அவர்க்கு அன்பிலலை ஆதலால யான் அடைவது துன்பம்

ஒன்றேயாம் என்று கூறியதாயிற்று

1197. பருவாலும் பைதலுங் காணான்கொல் காம
னொருவர்க ணின்றொழுகு வான்.

இதுவுமது.

(பரி.) இ-ள். ஒருவர்கண் நின்று ஒழுகுவான் காமன் = காமநுகர்தற்குரிய இருவரிடத்தும் ஒப்பநிற்றலொழிந்து ஒருவரிடத்தே நின்று பொருகின்ற



காமக்கடவுள்—பருவாலும் பைதலும் காணான்கொல் = அவ்விடத்துப் பசப்பாய பருவரலும் படர்மிகுதியும் அறியான்கொலோ ! எ-று.

விழைவும் வெறுப்புமின்றி எல்லார்கண்ணும் நிகழ்ச்சியறிதற்குரிய கடவுளும் என்கண் வேறுபட்டான், இனி யானுய்யுமா றென்னை யென்பதாம்.

விளக்கம் :—" காம இன்பத்தை அனுபவிப்பதற்கு உரிய பெண்கள் ஆண்களாகிய இருவரிடத்தும் பொதுவாக இருப்பதை யொழிந்து ஒருவரிடத்தேயே நிலையாக யுத்தத்தைச் செய்யக் காமக்கடவுளாகிய மன்மதன் தான் எண்ணிச் செய்கின்ற இடத்து உண்டாகும் நிறவேறுபாட்டாலாகிய துன்பத்தினையும், தனியாக நினைத்து இருப்பதால் உண்டாகும் துன்பத்தினையும் அறியமாட்டானோ" என்று தலைவி கூறியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே ! யாவரிடத்தும் விருப்பும் வெறுப்பு மில்லாமல் பொதுவாக நின்று எல்லாரிடத்தும் உண்டாவனவற்றை யறிகின்ற கடவுளும், இவ்விதம் என்னிடத்தே நிலைதவறி என்னை மாத்திரம் காமத்துன்பத்தால் வருத்துவானாயின் யான் பிழைப்பதெவ்விதம் ? என்று கூறியதாயிற்று.

1198. வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

தலைமகன் றூதுவரக்காணாது சொல்லியது.

(பரி.) இ-ள். வீழ்வாரின் இன்சொற் பெறாது வாழ்வாரின் = தம்மால்

விரும்பப்படுங் காதலர்திறத்துநின்றும் ஓரின்சொல்லளவும்பெறுதே பிரிவாற்றி உயிர்வாழ்கின்ற மகளிர்போல—வன்கணார் உலகத்து இல்=வன்கண்மை யுடையார் இவ்வுலகத்தில்லை. எ-று.

காதலர்திறத்துச்சொல் யாதானும் எனக்கினிதென்னுங் கருத்தால், 'இன்சொல்' என்றாள். இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. யான் வன்கண்ணேனாகலின் அதுவும் பெறாது உயிர்வாழாநின்றே னென்பதாம். (அ)

விளக்கம்:—"தம்மால் விரும்பப்படுகின்ற காதலரிடத்து இருந்து ஓர் இனிய சொல்லேனும் வரப்பெறாமல் பிரிவினை ஆற்றி உயிர்வாழ்ந்து கொண்டு வருகின்ற பெண்கள் போல அஞ்சா மனத்தினையுடையவர்கள் இவ்வுலகத்து இல்லை" என்று பிரிந்து சென்ற தலைமகனிடத்தினின்றும் தூது ஒன்றும் வரக்காணாத தலைமகள் ஆற்றாளாய்க் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது பிரிந்து சென்ற தலை



மகன் குறித்தகாலத்து வாராவிடின் ஓர் இனிய சொல்லையேனும் தூதுவர் மூலமாகக் கேட்டு வாழ்ந்து இருத்தல் பெண்களுக்கு இயல்பாகும் யானோ அவ்வோர் இனிய சொல்லைக் கேட்பதற்கு ஓர் தூதும் வரப்பெறாது இருக்கவும் இன்னும் உயிர்வாழ்கின்றேன். இவ்விதச் செயல் உலகத்திலுள்ள வன்கண்மைக்கெல்லாம் தலைமை உடையதாக உள்ளது என்று ஆற்றாமை மிகுதியால் தன்னைப் பழித்துக் கூறியதாயிற்று.

1199. நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

இதுவுமது.

(பரி.) இ-ள். நசைஇயார் நல்கார் எனினும்=என்னால் நச்சப்பட்ட காதலர் என்மாட்டு டன்பிலரேயாயினும்,—அவர்மாட்டு இசையும் செவிக்கு இனிய=அவர்திறத்தியாதானுமோர்சொல்லும் என்செவிக்கினியவாம்.

இழிவுசிறப்பும்மை, அவர் வாரலரென்னுஞ் சொல்லாயினும் அமையு மென்பதுபட நின்றது. அதுவும் பெற்றிலேனென்பதாம். (௯)

விளக்கம் :—“என்னால் விரும்பப்பட்ட காதலர் என்னிடத்து அன்பு இல்லாதவராயினும் அவரைக் குறித்துக் கேள்விப்படும் ஏதேனும் ஒரு சொல்லும் என் காதிற்கு இனியவாயிருக்கும்” என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தலைவரிடத்து இருந்து யாதொரு தூதும் வரப்பெறாத காலத்து என் தலைவர் என்னிடத்து அன்புகொண்டு குறித்த பருவங் கழிந்தும் வாரா விடினும் நான் வருவது இல்லை என்று சொல்லும் ஓர் சொல்லை யேனும் கேட்பேனாயின் அச்சொல்லும் எனக்கு இனிமையைத் தருமே அன்றி துன்பத்தைத் தாராது. அவ்விதச் சொல்லையும் சொல்லி அனுப் பக்கூடிய நல்வினையும் நான் பெறவில்லை என்று தலைவி தனது பிரிவின் ஆற்றாமையைக் கூறியதாயிற்று.

1200. உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.

தலைமகன் றூதுவரப்பெறாது தான்றூதுவிடக்கருதியாள்
நெஞ்சொடு சொல்லியது.

(பரி.) இ-ள். உறார்க்கு உறுநோய் உரைப்பாய் நெஞ்சு=நின்னோ டுறாதார்க்கு நின்னுறுநோயை யுரைக்கலுற்ற நெஞ்சே,—கடலைச் செறாய்=





நீயாற்றாயாயினும் அரிதாய அதனையொழித்து, நினக்குத் துயர்செய்கின்ற கடலைத் தூர்க்க முயல்வாயாக, அஃதெளிது. எ-று.

உரைக்கலுற்றது அளவிறந்தநோயாகலானும் கேட்பார் உறவிலராகலா னும் அது முடிவதொன்றன்று; முடிந்தாலும் பயனில்லையென்பது கருதாது, முயலாநின்றாயென்னுங் குறிப்பான், ‘வாழிய’ என்றான். (௧௦)

விளக்கம்:—"உன்னை விரும்பாதாரிடத்து உனக்கு உள்ள பெரிய தோர் துன்பத்தினைச் சொல்லுவோம் என்று எண்ணுகின்ற என் நெஞ்சே! அவர் பிரிவினாலாகும் ஆற்றாமையால் வருந்தி நீ துன்புறுவை யாயினும் அத் துன்பத்தையும் அவர்க்குக் கூறுவது உனக்கு மிகவும் அருமையாதலால் அவ்வித அருமையாகிய தொழில் செய்வதை யொழிந்து உனக்கு இரவெல்லாம் துன்பஞ் செய்கின்ற சமுத்திரத் தைத் தூர்த்துவிட முயற்சி செய்ய எண்ணுவாயாக! அது மிகுதி யும் எளிமையான காரியம்" என்று தலைமகனது தூது வரப் பெறாமை யால் அவனிடத்துத் தூதுவிட எண்ணிய தலைவி தன் நெஞ்சிற்குக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவி தன் நெஞ்சை நோக்கி ஓ! நெஞ்சே! அவரில்லாமையால் உனக்கு உள்ள பெரியதோர் துன்பத்தினை அவர்க்குச் சொல்லலாம் என்று எண்ணு கின்றனை, உன்னைத் துன்புறுத்துகின்ற கடலைத் தூர்த்துவிட நீ முயல்வாயாயின் அவ்வித பெரியதோர் முயற்சியும் ஓர்கால் கைகூடுதல் கூடும். அன்பிலராய அவர்க்கு நீ எண்ணியதைச் சொல்லி வரும்படிச் செய்தல் கைகூடாதது ஒன்றாகும். அவ்விதம் கைகூடாதது ஒன்றினை இது நமக்கு முடியாதது என்று விட்டுவிடாமல் நீ முயற்சிக்க எண் ணினையாதலால் உன் முயற்சிக்கு யான் மகிழ்கின்றேன். இவ்விதப் பெரியதோர் முயற்சி செய்கின்ற நீ வாழ்வாயாக! என்று தன் நெஞ்சை வாழ்த்தினளாயிற்று.

---

## 121. அதிகாரம்.

---

## நினைந்தவர்புலம்பல்.

(பரி.) அஃதாவது முன்கூடியஞான்றையின்பத்தினை நினைந்து தலைமக டனிமையெய்தலும், பாசறைக்கட்டலைமகன் றனிமையெய்தலுமாம். இவ் வாறு இருவர்க்கும் பொதுவாதல்பற்றிப் பன்மைப்பாலாற் கூறப்பட்டது.

இது, படர்மிகுதி தன்கண்ணதாக நினைந்த தலைமகட்கு முரித்தாகலின், அவ் வியைபுபற்றித் தனிப்படர்மிகுதியின்பின் வைக்கப்பட்டது.

## நினைந்தவர்புலம்பல் 115

விளக்கம்:—அதாவது இவர்கள் ஒருவரோடு ஒருவர் கூடிய நாளில் அடைந்த இன்பத்தினை எண்ணி, தலைமகளானவள் ஓர் தனியிடத்து இருந்து தனக்குத் தானே புலம்பலும், யுத்தத்திற்குச் சென்ற தலைமகன் தான் தங்கின இடமாகிய பாசறையினிடத்தே தனிமையாக இருந்து புலம்பலும் ஆகும். இவ்வதிகாரம் தலைவன் தலைவியாகிய இருவருக்கும் பொதுவாக உள்ளதால் நினைந்து அவர் புலம்பல் என்று பன்மையாகக் கூறப்பட்டது. இவ்விதம் புலம்புதல் தனித்து நிற்பதால் தனக்கே துன்பம் உள்ளதாக எண்ணிய தலைமகளுக்கும் உரியது ஒன்றுதலால் அச்செயற்கை கருதி தனிப்படர் மிகுதி என்னும் அதிகாரத்திற்குப் பிறகு இவ்வதிகாரம் வைக்கப்பட்டுள்ளது.

1201. உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது.

வினைவயிற்சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது.

(பரி.) இ-ள். உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்=முன்கூடிய ஞான்றை யின்பத்தினைப் பிரிந்துழி நினைந்தாலும் அதுபொழுது பெற்றாற்போல நீங்காத மிக்கமகிழ்ச்சியைத் தருதலால்,—கள்ளினும் காமம் இனிது=உண்டுழியல்லது மகிழ்ச்சிசெய்யாத கள்ளினுங்காமம் இன்பம்பயத்தலுடைத்து; எ-று.

தன்றனிமையுந் தலைமகளை மறவாமையுங் கூறியவாறு. (க)

விளக்கம்:—"முன் ஊழின் வலியால ஒருவரை யொருவர் கண்டு கூடிய காலத்தில் உண்டாய இன்பத்தினைப் பிரிந்த காலத்து எண்ணினும் அப்புணர்ந்த காலத்து உண்டாகிய இன்பம் எத்தன்மையதோ

அத்தன்மையாகிய இன்பத்தை ஒத்தது போலவே நீங்காத மிக்கதோர் மகிழ்ச்சியை எனக்குத் தருதலால் உண்ட காலத்து அல்லாது ஏனைய காலத்தில் மகிழ்ச்சி செய்யாத கள்ளைக்காட்டிலும் காமமானது இன்பத்தை உண்டுபண்ணுவதாக உள்ளது" என்று தூதாய்ச் சென்ற பாங்கனிடத்துத் தலைமகன் கூறினானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைமகனானவன் ஓ! பாங்கனே! என் தலைவியிடத்து நீ கூற வேண்டுவது நாங்கள் இருவரும் தெய்வத் திருவருளால் புணர்ந்த முதல் நாள் இன்பத்தை நான் தனித்து நிற்கின்ற இன்றைப் பொழுதும் மனத்தால் எண்ணினும் அம்மெய்யுறு புணர்ச்சியால் அடைந்த இன்பத்தைக் காட்டிலும் மிக்கதோர் மகிழ்ச்சியைத் தரும்



இன்பம் உடையதாக உள்ளது என்றும், உண்டு களிக்கின்ற கள்ளைப் போல் நினைந்து களிக்கின்ற இன்பத்தைத் தந்த தலைமகளை நான் மறந்து விடுவதற்கு இல்லையென்றும் அறிவித்தல் வேண்டும் என்று தான் தனியாய் இருப்பதால் உண்டாகும் துன்பத்தையும் தலைமகளை மறவாதிருத்தலையும் கூறினானாயிற்று.

1202. எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

இதுவுமது.

(பரி.) இ - ள். தாம் வீழ்வார் நினைப்ப வருவது ஒன்று இல் = தம்மால் விரும்பப்படுவாரைப் பிரிவின்கணினைத்தால் அந்நினைவார்க்கு அப்பிரிவான் வருவதோர் துன்பமில்லையாம்;—காமம் எனைத்து இனிது ஒன்றேகாண் = அதனாற் காமம் எத்துணையேனு மினிதொன்றே காண் ; எ - று.

புணர்ந்துழியும் பிரிந்துழியும் ஒப்ப வினிதென்பான், 'எனைத்துமினிது என்றான். சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. தானுற்றியவகை கூறியவாறு.

விளக்கம்:—" தம்மால் விரும்பப்படுபவரை அவரைப் பிரிந்து உள்ள காலத்தில் நினைத்தாலும் அவ்விதம் நினைப்பவர்க்கு அப்பிரிவி

ஞல் வருவதாகிய ஓர் துன்பமும் இல்லையாகும். அதனல் காமமானது எவ்விதமாயிருக்கினும் இனியது ஒன்ருகவே உள்ளது" என்று பாங்கனை நோக்கித் தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவனானவன் ஓ! பாங்கனே! என் தலைவியைப் பிரிந்து உள்ள இக்காலத்து அவளை எக்காலத்தும் நினைத்திருப்பதாலேயே புணர்ந்த காலத்து உண்டாகும் இன்பம் எனக்கு உண்டாகின்றது. ஆதலால் தாம் விரும்பும் மகளிரைப் பிரிந்த காலத்தும் காமமானது நினைப்பு ஒன்றினலேயே இன்பத்தைத் தருவதால் அந்நினைப்பையே உறுதியாகக் கொண்டு அவள் பிரிவினை ஆற்றி நிற்கின்றேன் என்று கூறியதாயிற்று.

**1203.** *நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்*
*சினைப்பது போன்று கெடும்.*

தலைமகனை நினைந்து வருந்துகின்ற தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். தும்மல் சினைப்பதுபோன்று கெடும்=எனக்குத் தும்முல் எழுவதுபோன்று தோன்றிக் கெடாநின்றது,—நினைப்பவர்போன்று



நினையார் கொல்=அதனுற் காதலர் என்னை நினைப்பார்போன்று நினையாராகல் வேண்டும். எ-று.

சினைத்தல்=அரும்புதல். சேய்மைக்கண்ணராய கேளிர் நினைந்துழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மறேன்றுமென்னு முலகியல்பற்றித் தலைமகனெடுத்துக்கொண்டவினை முடிவதுபோன்று முடியாமை யுணர்ந்தாள் சொல்லியதாயிற்று. (௩)

விளக்கம்:—"எனக்குத் தும்மல் வருவது போன்று தோன்றி பின்பு வாராமல் நின்றது. அதனல் என் காதலர் என்னை நினைப்பவர் போன்று இருந்து நினையாதவராக இருக்கல் வேண்டும்' என்று தலைமகனது பிரிவாற்றுமையால் அவனை நினைந்து வருந்துகின்ற தலைமகளானவள் தோழியை நோக்கிக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஓ! தோழியே! எனக்குத் தும்மல் வருவது போலக் காணப்பட்டுப் பின்னர் வாராமல் நின்றுவிடுவதால் என்

னுடைய காதலர் நினைப்பவர் போன்றும் நினையாதவர் போன்றும் இருத்தல் வேண்டும். அதனுமேலும் எனக்கு இவ்விதம் தோன்றுகின்றது. அது எனெனின், தலைமகன் எடுத்துக் கொண்ட வினை முடியாது போன்று காணப்படுங் காலத்து என்னை நினைத்தும் முடியாதிருந்த காலத்து என்னை நினையாமலும் இருத்தல் வேண்டும் என்று கூறியதாயிற்று.

1204. யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர்.

இதுவுமது.

(பரி.) இ - ள். எந்நெஞ்சத்து அவர் ஓ உளரே = எம்முடைய நெஞ்சத்து அவர் எப்பொழுதுமுளரேயாயிராநின்றார்; — அவர் நெஞ்சத்து யாமும் உளேங் கொல் = அவ்வகையே அவருடைய நெஞ்சத்தும் யாமுமுள மாதுமோ, ஆகேமோ! எ - று.

ஓகாரவிடைச்சொல் சண்டிடைவிடாமை யுணர்த்திநின்றது. உளமாயும் வினைமுடியாமையின் வாராராயினரோ, அது முடிந்தும் இலமாகலின் வாரார்ராயினரோவென்பது கருத்து. (௪)

விளக்கம்:—"எம்முடைய நெஞ்சினிடத்து அவர் எப்பொழுதும் உள்ளவராகவே இருக்கின்றார். அவ்விதமே அவருடைய நெஞ்சததில் யாமும் இருப்பவராக இருப்போமோ அல்லது இருக்கமாட்டோமோ"



என்று தலைவனை நினைந்து வருந்துகின்ற தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தோழியே! எக்காலத்தும் நாம் தலைவரை நினைந்தவண்ணமாக இருக்கின்றோம். அவ்விதம் அவரும் இருப்பாராயின் அவர் எடுத்த வினை முடியாமையினால் வாராமல் போயினரோ, அலலது எடுத்தவினை முடிந்தும் நம்மை அவர் நினையாமையினால வாராமல போயினரோ யாதோ அறியேன் என்று கூறியதாயிற்று.

1205. தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்
எந்நெஞ்சத் தோவா வரல். [கொ

இதுவுமது.

(பரி.) இ - ள். தந்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார்=தம்முடைய நெஞ்சின்கண்ணே யாஞ்செல்லாமல் எம்மைக் காவல்கொண்ட காதலர்— எந்நெஞ்சத்து ஓவாவரல் நாணார்கொல்=தாமெம்முடையநெஞ்சின்கண் ஒழியாது வருதலை நாணார்கொல்லோ! எ - று.

ஒருவரைத் தங்கண வருதற்கு ஒருகாலு முடம்படாது தாமவர்கட் பலகாலுஞ் சேறல் நாணுடையார் செயலன்மையின், 'நாணார்கொல்' என்றான்.

விளக்கம்:—"தம்முடைய நெஞ்சினிடத்தே யாம் ம்பாக வொட்டாமல் எம்மைக் காவல் கொண்டு தடுத்து நின்ற காதலர் தாம் எம்முடைய மனத்தினிடத்தே எக்காலமும் வந்து கொண்டு இருப்பதற்கு நாணத்தை யடையாமல இருக்கின்றாரோ" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! உகைத்து ஒருவரைத் தம்மிடத்துக்கு வருவதற்கு உடன் படாது இருந்து தாம் மாத்திரம் அவரிடத்துப பலகாலும் செலலுதல நாணுடையவர் செயலாகாது. அவ்விதம் இருந்தும் தலைவர் என் நெஞ்சத்தினிடத்து வருவது நாணமென்பதே இல்லாமைபோலும்! என்று தலைவி கூறியதாயிற்று.

1206. மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன்.

அவரோடு புணர்ந்தஞான்றையின்பத்தை நினைந்து இறந்துபாடெய்தாநின்றாய் அதுமறத்தல் வேண்டுமென்றாட்குச் சொல்லியது.

(பரி.) இ - ள். யான் அவரொடு உற்ற நாள் உள்ள உளேன்=யான் அவரோடு புணர்ந்த ஞான்றையின்பத்தை நினைதலான் இத்துன்ப வெள்ளத

தம் உயிர்வாழகின்றேன்;—மற்று யான் என்னுளேன்—அதுவின்றாயின், வேறெத்தால் உயிர்வாழ்வேன்! எ - று.

நாள் = ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு வேறுமுள, அவைபெற்றிலேனென்பதுபட நின்றமையின், மன் = ஒழியிசைக்கண் வந்தது. அவை அவன்றூது வருதல், தன்றூது சேறன்முதலாயின. அவையாவுமின்மையின், இதுவல்லது எனக்குப் பற்றுக்கோடில்லையென்பது கருத்து. (சு)

விளக்கம்:—"யான் அவரோடு புணர்ந்த நாள் இன்பத்தை நினைத்திருப்பதாலேயே இவ்வித துன்பமாகிய சமுத்திரத்தில் புரண்டும் உயிர் வாழ்ந்து கொண்டு இருக்கின்றேன். அவ்விதம் அவ்வின்பத்தை நினையேனாயின் வேறு எவ்விதத்தால் உயிர் வாழ்ந்திருப்பேன்" என்று நீ உன் தலைவரைக் கண்ட தினத்துப் புணர்ந்ததால் உண்டாகிய இன்பம் ஒன்றனையே நினைந்து நினைந்து இறப்பதற்கு உரிய தகுதியிலிருக்கின்றாய். ஆதலால் நீ உயிர் வாழும் பொருட்டு அவ்விதம் நினைப்பதை மறந்து இருத்தல் வேண்டும் என்று சொல்லிய தோழிக்குத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் ஓ! எனது உயிர்த்தோழியே! உலகத்துத் தலைவரைப் பிரிந்து உள்ள பெண்களுக்கு உயிர் வாழ்வதற்குப் பற்றுக் கோடாய் உள்ளன தலைவன் அனுப்பிய தூது வருதலும், தான் அனுப்புகின்ற தூது செல்லலும் ஆகிய பலவிருந்தும் அவற்றுள் எனக்கு ஒன்றும் இல்லாமையால் முதல் நாள் புணர்ந்த இன்பத்தை நினைந்து பிரிவாற்றாமையால் உண்டாகும் துன்ப சமுத்திரத்தில் உழன்றும் உயிர் வாழ்கின்றேன். ஆதலால் ஈது ஒன்றே எனக்குப் பற்றுக்கோடாக உள்ளது என்று கூறினளாயிற்று.

1207. மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும்.

இதுவுமது.

(பரி.) இ - ள். மறப்பு அறியேன் உள்ளினும் உள்ளம் சுடும் = அவ்வின்பத்தை மறத்தலறியேனாய் இன்றுள்ளாநிற்கவும், பிரிவு என்னுள்ளத்தைச் சுடாநின்றது,—மறப்பின் எவனாவன் = அங்ஙனம் பிரிவாற்றாத யான் மறந்

தால் இறந்துபடாது உளேனாவது எத்தால்! எ - று.

மறக்கப்படுவது அதிகாரத்தான் வந்தது. மன் = ஈண்டும் அதுபடநின்று ஒழிவிசையாயிற்று. கொல் = அசைநிலை. (எ)



விளக்கம் :—" அப்புணர்ந்த தினத்து இருந்த இன்பத்தைச் சிறிதும் மறத்தல் அறியாதவளாய் நின்று நினைந்து கொண்டே இருக்கவும், அவரைப் பிரிந்து உள்ள பிரிவினால் உண்டாகும் துன்பமானது என் மனத்தைச் சுட்டுக்கொண்டு இருக்கின்றது. அவ்விதம் பிரிந்ததற்கு ஆற்றாத நான் நினைப்பதையும் விட்டு மறப்பேனாயின் இறக்காது உயிர் வாழ்வது எத்தன்மை கொண்டு" என்று தலைவி கூறினளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! நீ தலைவரை நினைத்தலை மறத்தல் வேண்டும் என்கின்றாய். மறவாது நினைக்கின்ற இக்காலத்தேயே பிரிவின் துன்பமானது என்னைக் கொளுத்துகின்றது. அவ்விதம் கொளுத்தியும் அவரை மறவாது நினைத்தலாலேயே இறவாது இருக்கின்றேன். அந்நினைத்தலும் செய்யேனாயின் உயிர் வாழ்வதற்கு வேறு துணை இல்லை என்று தலைவி கூறினளாயிற்று.

1208. எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு.

இஃது அவ்வாறு நினைந்துவந்து காதலர் நினைக்கின்பஞ்
செய்பவரோ வென்றாட்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். எனைத்து நினைப்பினும் காயார் = தம்மை யானெத்துணையும் மிக நினைந்தாலும் அதற்கு வெகுளார்;—காதலர் செய்யும் சிறப்பு அனைத்து அன்றோ = காதலர் எனக்குச் செய்யுமின்பமாவது அவ்வளவன்றோ! எ-று.

வெகுளாமை அதற்குடன்பட்டு நெஞ்சின்கணிற்றல். தனக்கு அவ்வின்பத்திற் சிறந்ததின்மையின், அதனைச் 'சிறப்பு' என்றான். காதலர் நம்மாட்

டருளென்றும், செய்யுங்குணமென்றும் பாடமோதுவாரு முளர். தோழி கூறி யவதனைக் குறிப்பானிகழ்ந்து கூறியவாறு. (அ)

விளக்கம்:—"தம்மை யான் எவ்வளவு அதிகமாக நினைத்தாலும் அதற்கு அவர் கோபிபார். ஆதலால் காதலர் எனக்குச் செய்யும் இன்ப மானது அவ்வளவு அல்லவோ" என்று நீ படுகின்ற துன்பத்தினை அறிந்து வந்து காதலர் உனக்கு இன்பம் செய்வர் என்று கூறிய தோழிக்குத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தோழியே! நீ கூறுவது பொருந்தும். என் தலைவரான வர் நான் எவ்வளவு அவரை அதிகமாக நினைத்தும் அதற்குச் சிறிதும்



வெகுளாது என் விருப்பத்திற்கு உடன்பட்டு என் நெஞ்சினிடத்தேயே நிற்கின்றாராதலால் எனக்கு அவ்வின்பத்தில் சிறந்த இன்பம் வேண்டுவது இல்லையாகும். இனி அவர் வந்து எனக்கு இன்பஞ் செய்வர் என்பது அத்துணைப் பெரியதோர் சிறப்பு ஆகாது என்று தோழி கூறிய தொன்றைக் குறிப்பாக இகழ்ந்து பேசினாள் என்றதாயிற்று.

1209. விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.

தலைமகன் நாதுவரக் காணாது வருந்துகின்றாள் வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். வேறு அல்லம் என்பார் அளியின்மை ஆற்ற நினைந்து = முன்பெல்லாம் நாமிருவரும் வேறல்லமென்று சொல்லுவார தளியின்மையை மிகவுநினைந்து,—என் இன்னுயிர் விளியும் = எனதினியவுயிர் கழியாநின்றது.

அளியின்மை = பின்வருவாராகவுமாய்ப் பிரிதலும், பிரிந்துவாராமையும் ஆண்டுநின்றுழித் தூதுவிடாமையும் முதலாயின. பிரிவாற்றல்வேண்டுமென வற்புறுத்தாட்கு என்னுயிர் கழிகின்றது பிரிவிற்கன்று அவரன்பின்மைக் கென எதிரழிந்து கூறியவாறு. (கூ)

விளக்கம்:—"முன்பு எல்லாம் நாம் இருவரும் வேறு அல்லம் என்று சொல்லுகின்றவரது அருள் இல்லாமையை மிகுதியும் நினைந்து எனது இன்னுயிரானது போகா நின்றது" என்று தலைமகனது தூது வரக் காணாமையால் வருந்துகின்ற தலைவியானவர் பிரிவிற்கு ஆற்றுதல் வேண்டும் என்று வலிந்து கூறிய தோழியை நோக்கிக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! நான் வருந்துவது அவருடைய பிரிவாற்றாமைக்கு அன்று. அவர் முன்னெல்லாம் இருவரல்லே ஒருவரேயாகும் என்ற புணர்ச்சி மகிழ்தலில் கூறி இப்போது சிறிதும் அன்பில்லாதவராய் வருவேன் என்று பிரிந்ததும், குறித்த பருவத்து வாராமையும், தாமிருக்கின்ற இடத்தினின்றும் தூது விடாமையும் ஆகிய அன்பின்மைக்கே என்னுயிர் என்னுடலை விட்டுப் பிரிவதாக உள்ளதே யன்றி வேறு இல்லை என்று கூறியதாயிற்று.

16



1210. விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி.

வன்புறையெதிரழிந்தாள் காமமிக்க கழிபடாற் சொல்லியது.

(பரி.) இ-ள். மதி=மதியே!—விடாது சென்றாரைக் கண்ணினால் காணப்படாதி=என்னெஞ்சின் இடைவிடாதிருந்தே விட்டுப்போயினாரை யானென்கண்ணளவானுயினும் எதிர்ப்படும்வகை நீ படாதொழிவாயாக

கண்ணளவா னெதிர்ப்படுதலாவது மதி இருவரானு நோக்கப்படுதலின் இருவர்கண்ணும் அதன்கண்ணே சேர்தல். முதலொடு சினைக்கொற்றுமையுண்மையிற் சென்றாரைக் 'காண'என்றும், குறையுறுகின்றாளாகலின் 'வாழி' என்றுங் கூறினாள். இனிப் படாதென்பது பாடமாயின், கனவிடைக் கண்ணினாற்காணுமாறு மதிபடுகின்றதில்லையென அதனாற்றுயில்பெறாது வருந்துகின்றாள் கூற்றாக்குக. இப்பொருட்கு வாழியென்பது அசைநிலை. (ய)

**விளக்கம்** :—"மதியே! என் மனத்தில் இடைவிடாமலிருந்தே என்னைவிட்டுப் போயினவரை யான் என் கண்ணாலாயினும் பார்க்கும் வண்ணம் நீ மறைந்து போகாதிருத்தல் வேண்டும்" என்று பிரிவாற்று தல் வேண்டுமென்று வற்புறுத்திக் கூறிய தோழியை எதிர் அழிந்து கூறிய தலைவியானவள் மிகுந்த காமத்தால் உண்டாகிய துன்பமிகுதி யால் சந்திரனைப் பார்த்துக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஓ! சந்திரனே! நானும் உன்னை நோக்குகின்றேன். என் தலைவரும் உன்னை நோக்குகின்றனர். ஆதலால் உன்னைப் பார்த்தல் அவரைப் பார்ப்பதுபோல ஆகும். ஆதலால் நீ எக்காலத்தும் மறையாது எனக்குத் தோன்றுதல் வேண்டும். இவ்விதம் செய்வாயாகில் உன்னை யான் வாழ்த்துவேன். நீ நெடுங்காலம் அதனால் வாழ்வாய் என்று தலைவனைக் காண்பதற்கு விரும்பிய தலைவி கூறியதாயிற்று.

---

## 122. அதிகாரம்.

---

## கனவுநிலையுரைத்தல்.

(பரி.) அஃதாவது தலைமகள் தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக்கனவு நனவின்கணினைவுமிகுதியாற் கண்டதாகலின் இது நினைந்தவர்புலம்பலின்பின் வைக்கப்பட்டது.



**விளக்கம்** :—அதாவது தலைமகளானவள் தான் கண்ட கனவினுடைய நிலைமையினைத் தோழிக்குச் சொல்லுதல். அக்கனவானது நனவினிடத்தே நினைவு மிகுதியால் உண்டாவது ஆதலின் இதனை நினைந்தவர் புலம்பல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வைக்கப்பட்டு உள்ளது.

1211. காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.

தலைமகன்றூது வரக்கண்டாள் சொல்லியது.

(பரி.) இ-ள். காதலர் தூதொடு வந்த கனவினுக்கு=யான் வருந்துகின்றதறிந்து அது தீரக் காதலர் விடுத்த தூதினைக்கொண்டு என் மாட்டுவந்த கனவினுக்கு—விருந்து யாது செய்வேன்=யான் விருந்தாக யாதனைச்செய்வேன்! எ-று.

விருந்தென்றது விருந்திற்குச்செய்யு முபகாரத்தினை. அது கனவிற்கொன்று காணுமையின், 'யாதுசெய்வேன்' என்றாள். (க)

விளக்கம்:—"யான் வருந்துவதை யறிந்து அவ்வருத்தம் நீங்கும்படி காதலர் அனுப்பிய தூதினைக் கொண்டு வந்த கனவினுக்கு யான் விருந்தாக எதனைச் செய்வேன்" என்று தலைமகனது தூதுவரக்கண்டவளாகிய தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைமகளானவள் கனு நிலையில் தூது வந்ததுபோல் கண்டாளாதலால் அவ்விதத் தூதிற்கு விருந்தாக வந்தவர்க்குச் செய்யும் உபகாரம் ஒன்றினைச் செய்வதற்கு இல்லை என்று கூறியதாயிற்று.

1212. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற்கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

தூதுவிடக்கருதியாள் சொல்லியது.

(பரி.) இ-ள். கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின்=துஞ்சாது வருந்துகின்ற என் கயல்போலு முண்கண்கள் யானிரந்தாற் றுஞ்சுமாயின்,—கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன்=கனவிடைக் காதலரைக் காண்பேன், கண்டால் அவர்க்கியானுற்றியுேனுைய தன்மையை யானே விரியச் சொல்வேன்; எ-று.

'கயலுண்கண்' என்றாள், கழிந்தகலத்திற்கிரங்கி. உயல்=காமநோய்க்குத் தப்புதல். தூதர்க்குச்சொல்லாது யாமடக்குவனவும் சொல்லுவனவற்

றுன்னுஞ் சுருக்குவனவற்றின் பரப்புந் தோன்றச்சொல்வேனென்னுங் கருத் தாற் 'சாற்றுவேன்' என்றான். இனி, அவையுந்துஞ்சா சாற்றலுங்கூடா தென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. முன்னுங் கண் டான் கூற்றாகலின், கனவுநிலை யுரைத்தலாயிற்று. (உ.)

விளக்கம் :—"தூங்காமல் வருந்துகின்ற கயல்மீன்போலும் என் னுடைய மையுண்ட கண்கள் யான் அவற்றை யாசித்துக் கேட்கும் காலத்துத் தூங்குமாயின் கனவு உண்டாகும். அக்கனவினிடத்தே காத லரைப் பார்ப்பேன்; பார்ப்பேனாயின், அவருக்குப் பிரிவினால் உண்டாகும் துன்பத்தை யான் பொறுத்துக் கொண்டு உள்ள தன்மையெல்லாம் யானே விரிவாக எடுத்துக் கூறுவேன்" என்று தூதுவிடக் கருதிய தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியான வள் தூங்காது என்னை வருத்துகின்ற கண்கள் தூங்குமேயாயின் கனவு உண்டாகும். அக் கனவினிடத்தே வருகின்ற காதலர்க்கு நான் காம நோய்க்குத் தத்தளித்தலை ஒன்றும் விடாது அவற்றின் பரப்பை யெல் லாம் நன்றாகச் சொல்லுவேன். என் கண் தூங்குவதுமில்லை. நான் அவர்க்குச சொல்லுவதற்கு மில்லை. தூது அனுப்புவேனாயின் சொல் லக் கூடாதனவற்றை அடக்கியும், சொல்லக் கூடியவற்றுள் சுருக்கி யும் சொல்லவேண்டியுள்ளதால், கனவு நிலையிலாயினும் அவரைக் கண் டுச் சொல்வதற்குக் கூடாமையாக உள்ளது என்று கூறியதாயிற்று.

1213. நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர்.

ஆற்றளெனக் கவன்றட்கு ஆற்றுவலென்பதுபடச்
சொல்லியது.

(பரி.) இ-ள். நனவினான் நல்காதவரை=நனவின்கண் வந்து தலையளி செய்யாதாரை—கனவினாற் காண்டலின் என் உயிர் உண்டு=யான் கனவின் கட்கண்ட காட்சியானே என்னுயிருண்டாகா நின்றது; எ-று.

மூன்றனுருபுகள் ஏழன்பொருண்மைக்கண் வந்தன. அக்காட்சியானே யானுற்றியுளேனுகின்றேன் நீ கவலல் வேண்டா வென்பதாம். (௩)

விளக்கம்:—"நனவினிடத்தே வந்து எனக்கு இன்பத்தைத் தாரா தாரை நான் கனவினிடத்தே காண்கின்றமையாலேயே என்னுயிரானது இன்னும் தங்கியுள்ளது" என்று இவள் பிரிவிற்கு ஆற்றாது வருந்து கின்றாளென்று கவலையுற்ற தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்



திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தோழியே! நீ கவலல் வேண்டாம். நனவில் வாராவிடினும் என் தலைவர் கனவில் வருகின்றார். அக் கனவிடத்தே அவரை நான் காணும் காட்சி யளவினாலேயே நான் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றேன். அவ்விர மல்லாவிடின் உயிர் வாழேன் என்று தன் கனவின் நிலையை உரைத்ததாயிற்று.

1214. கனவினு னுண்டாகுங் காம நனவினு
னல்காரை நாடித் தரற்கு.

இதுவுமது.

(பரி.) இ-ள். நனவினன் நல்காரை நாடித் தரற்கு=நனவின்கண்வந்து தலையளிசெய்யாதாரை அவர்சென்றுழி நாடிக்கொண்டுவந்து கனவு தருத லான்,—கனவினுற் காமம் உண்டாகும்=அக்கனவின்கணே எனக்கின்ப முண்டாகாநின்றது; எ-று.

காமம் ஆகுபெயர். நான்காவது மூன்றன்பொருண்மைக்கண் வந்தது. இயல்பான் நல்காதவரை அவர்சென்ற தேயமறிந்துசென்று கொண்டு வந்துதந்து நல்குவித்த கனவால் யானுற்றுவ லென்பதாம். (௪)

விளக்கம்:—"நனவில் வந்து எனக்கு இன்பத்தைச் செய்யா தாரை அவர் சென்ற விடத்துத் தேடிக் கொண்டுவந்து கனவு கொடுத்தலால் அக்கனவினிடத்தே எனக்கு இன்பம் உண்டாகின்றது" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தோழியை நோக்கித் தோழியே! யான் ஆற்றாது வருந்து

கின்றேன் என்று எண்ணுகின்றனை. என் காதலர் என்னிடத்தில் நனவில் வாராவிடினும் கனவில் வருகின்றாராதலால் எனக்கு இன்பம் உண்டாகின்றது. அதனால் நான் பொறுத்துக் கொள்வேன் என்று கூறியதாயிற்று.

1215. நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

இதுவுமது.

(பரி.) இ-ள். நனவினாற் கண்டதூஉம் (இனிது) ஆங்கே=முன்னனவின்கண் அவரைக்கண்டு நுகர்ந்தவின்பந்தானுமினிதாயிற்று அப்பொழுதே;—கனவுந்தான் கண்டபொழுதே இனிது=இன்று கனவின்கட்கண்டு நுகர்ந்த வின்பமும் அக்கண்டபொழுதே யினிதாயிற்று; அதனான் எனக்கிரண்டு மொத்தன; எ-று.



இனிதென்பது முன்னுங்கூட்டப்பட்டது. கனவு ஆகுபெயர். முன்னும் யான்பெற்ற திவ்வளவே, இன்னும் அதுகொண்டாற்றுவ லென்பதாம். (6)

விளக்கம்:—"முன் நனவில் அவரைக் கண்டு அடைந்த இன்பமும் அப்பொழுது இனிமை யுடையதாகவே இருந்தது. இன்று அவரைக் கனவில் கண்டு அடைந்த இன்பமும் முதலாகக் கண்ட இன்பத்தைப் போல் இனிமையுடையதாக உள்ளது. ஆதலால் எனக்கு நனவிடத்தேயும் கனவிடத்தேயும் அடைந்த இன்பங்கள் ஒரு தகுதியுடையனவாகவே உள்ளன" என்று தலைவி கூறினாளென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தோழியை நோக்கித் தோழியே! யான் என் காதலரால் நனவினிடத்தே அடைந்த இன்பமும் அவர் பிரிவின்கண் கனவிலடைகின்ற இன்பமும் இரண்டும் ஒத்த தகுதியுடையனவாகவே உள்ளனவாதலால் இக் கனவினைக் கொண்டு பொறுத்து இருப்பேன் என்பதாயிற்று.

1216. நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்

காதலர் நீங்கலர் மன்.

இதுவுமது.

(பரி.) இ-ள். நனவென ஒன்று இல்லையாயின் = நனவென்று சொல்லப் படுகின்ற ஒருபாவியில்லையாயின்,— கனவினாற் காதலர் நீங்கலர் = கனவின் கண் வந்துகூடிய காதலர் என்னைப் பிரியார்; எ-று.

ஒன்றென்பது அதன்கொடுமைவிளக்கி நின்றது. அஃது இடையே புகுந்து கனவைப்போக்கி அவரைப் பிரிவித்த தென்பதுபட நின்றமையின, மன் ஒழியிசைக்கண் வந்தது. கனவிற்பெற்றுாற்றுகின்றமை கூறியவாறு. (சு)

விளக்கம்:—"நனவு என்று சொல்லப்படுகின்ற ஒரு பாவியான வன் இல்லையாயின் கனவினிடத்தே வந்து கூடுகின்ற என் காதலர் என் னைவிட்டுப் பிரியார்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின் றது. அதாவது தோழியே! கனவில் என்னைவந்து கூடுகின்ற என் காத லரைப் பிரியும்படிச்செய்யும் நனவு என்னும் ஒரு பாவியானவன் இடை யேவாராவிடில் அக்கனவில் காணும் இன்பத்தால் யான்மிகுதியும் மகிழ்ச் சியுற்றிருப்பேன். நனவென்பது ஒன்று தடுக்கினும் கனவில் காண் கின்ற அவ்வளவு பொழுது அனுபவிக்கின்ற இன்பத்தால் பிரிவிற்கு ஆற்றி நிற்கின்றேன் என்று கூறியதாயிற்று.



1217. நனவினா னல்காக் கொடியார் கனவினா
னென்னெம்மைப் பீழிப் பது.

விழித்துழிக் காணாளாயினாள் கனவிற்கூட்டநினைந்து
ஆற்றளாய்ச் சொல்லியது.

(பரி.) இ-ள். நனவினான் நல்காக் கொடியார் = ஒருஞான்றும் நனவின் கண் வந்து தலையளிசெய்யாத கொடியவர்,—கனவினான் எம்மைப் பீழிப்பது என் = நாடோறுங் கனவின்கண்வந்து நம்மை வருத்துவது எவ்வியைபுபற்றி!

பிரிதலும் தன்னினைந்துவாராமையுநோக்கிக் 'கொடியார்' என்றும், கன

விற்றோண்மேலராய் விழித்துழிக் காத்தவின் அதனானும் துன்பமாக நின்ற தென்பான் 'பீழிப்பது' என்றுங் கூறினாள். நனவினில்லது கனவினுமில்லை யென்பர், அது நண்டில மென்பதாம். (எ)

விளக்கம்:—"ஓர் நாளும் நனவினிடத்தே வந்து எனக்கு இன்பத்தைத் தாராத கொடியவர் தினந்தோறும் கனவினிடத்தே வந்து நம்மை வருத்திக்கொண்டிருப்பது எவ்வித உரிமை கருதியோ ?" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! என்னைப் பிரிந்து சென்றும் குறித்தகாலத்து வாராது நின்ற கொடியவர் கனவினிடத்தே தோள்மேலராயிருந்து விழித்துப் பார்க்குமிடத்து ஒளித்து எனக்குத் துன்பத்தைத் தருவது எது கருதியோ அறிகிலேன். நனவில் வாராதது கனவில் வருவதில்லை என்னும் உலக வழக்கையும் கடந்து நனவில் வாராத தலைவர் கனவில் நாள்தோறும் வருகின்றனர். இது யாதோ அறிகிலேன் என்று தன் கனவின் நிலையை உரைத்தாளாயிற்று.

1218. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவர் விரைந்து.

தாஅற்றுதற்பொருட்டுத் தலைமகனையியற்பழித்தாட்
இயற்பட மொழிந்தது.

(பரி.) இ-ள். துஞ்சுங்கால் தோண்மேலராகி=என்னெஞ்சுவிடாதுறைகின்ற காதலர் யான்றுஞ்சும்பொழுது வந்து என்றோண்மேலராய்,—விழிக்குங்கால் விரைந்து நெஞ்சத்தராவர்=பின் விழிக்கும்பொழுது விரைந்து பழைய நெஞ்சின்கண்ணராவர்; எ-று.

கலவிவிட்டுமறையுங் கடுமைபற்றி 'விரைந்து' என்றாள். ஒருகாலும் என்னினீங்கி யறியாதாரை நீ நோவற்பாலையல்லை யென்பதாம். (அ)



விளக்கம்:—"என் மனத்தினிடத்தே நீங்காது வசிக்கின்ற காதலர் யான் தூங்கும்பொழுது வந்து தோள்மேலிருந்தும் பின் விழிக்கும் காலத்து விரைந்து சென்று பழைமைபோல் நெஞ்சினிடத்தேயே

ஒளித்துக் கொள்ளுகின்றனர்" என்று தோழியானவள் தலைமகள் பிரிவிற்கு ஆற்றுதற் பொருட்டுத் தலைமகனது குணங்களைப் பழித்தவிடத்தே தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! என் காதலரை ஏன் பழிக்கின்றாய். அவர் என்னைவிட்டு ஓர்காலும் நீங்கி அறியார். அவர் என் நெஞ்சிடத்தேயே எப்போதும் இருப்பவராய் இருந்தும் கனவில் மாத்திரம் என் தோள்மீதிருந்து கலவியை நடத்துகின்றனர். இவ்விதம் நனவிலும் கனவிலும் விட்டுப் பிரியாத அவரை நீ நொந்து கொள்ளுதல் வேண்டுவதில்லை என்று கூறியதாயிற்று.

1219. நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்.

இதுவுமது.

(பரி.) இ-ள். கனவினாற் காதலர்க் காணாதவர்=தமக்கொருகாதலரின்மையின் அவரைக் கனவிற்கண்டறியாத மகளிர்—நனவினான் நல்காரை நோவர்=தாமறிய நனவின்கண் வந்து நல்காத நங்காதலரை அன்பிலரென நோவா நிற்பர்; எ-று.

இயற்பழித்தது பொறாது புலக்கின்றாளாகலின், அயன்மைதோன்றக் கூறினாள். தமக்குங் காதலருளராய் அவரைக் கனவிற் கண்டறிவாராயின் நங்காதலர் கனவின்கணூற்றி நல்குதலறிந்து நோவாரென்பதாம். (கூ)

விளக்கம்:—"தமக்கு ஒரு காதலர் இல்லாமையால் அக்காதலரைக் கனவில் கண்டறியாத பெண்கள் தாம் பார்க்கும்படி நனவினிடத்தே வந்து எனக்கு இன்பத்தைத் தாராத என் காதலரை அன்பில்லாதவரென்று நொந்துகொள்ளுவர்" என்று தோழியானவள் தலைவனைப் பழித்த காலத்து அப்பழித்தலைப் பொறாதவளாகிய தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் கோபங்கொண்டு தமக்கும் ஓர் காதலரிருந்து பிரிந்தகாலத்து அவரைக் கனவில் காண்பது வழக்கமாக இருப்பின் என் காதலர் பிரிந்து நனவில் வாராவிடினும் கனவில் வருவதை அறிந்து நான் பிரிவிற்கு ஆற்றி நிற்கின்றேன் என்பதை அறிவர். அப்பெண்கள் காதலரைப் பெற்றில்லாமை

யால் என் காதலரைப் பழிக்கின்றனர் என்று தன் தலைவனுக்குப் புகழுண்டாகக் கூறியதாயிற்று.

1220. நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.

இதுவுமது.

(பரி.) இ-ள். இவ்வூரவர் நனவினான் நந்நீத்தார் என்பர்=இவ்வூரின் மகளிர் நனவின்கண் நம்மை நீத்தாரென்று நங்காதலரைக் கொடுமைகூறுகிற்பர்,—கனவினாற் காணார்கொல்=அவர் கனவின்கண் நீங்காதுவருதல் கண்டறியாரோ! எ-று.

என்னொடு தன்னிடை வேற்றுமையின்றாயின் யான்கண்டது தானுங் கண்டமையும், அதுகாணாது அவரைக் கொடுமைகூறுகின்றமையின் அயலாளே யாமென்னுங் கருத்தால், 'இவ்வூரவர்' என்றாள். (௰)

விளக்கம்:—"இவ்வூரினிடத்தே உள்ள பெண்கள் நனவினிடத்தே நம்மை விட்டுப் பிரிந்தாரென்று நம்முடைய காதலரைக் கொடுமை கூறுகின்றனர். அவ்விதம் கொடுமை கூறுபவர் அவர் நம் கனவினிடத்தே நீங்காது வருதலைப் பார்த்து அறியாரோ" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தானென்றும் அவளென்றும் வேற்றுமை காணாத தன்னோடு பழகிய தோழியாக இருந்தும் தான் நனவில் காணாவிடினும் கனவில் கண்டு இன்பமடைந்து நிற்கும் நிலையை அறியாது தன் காதலரைப் பழிக்கின்றாளாதலால் அவள் அயலாளே யாகும் என்று கோபித்துக் கூறிய தலைவி இவ்வூரவர் என்று தோழியைப் பிரித்துக் கூறியதுடன் தன் கனவின் நிலையையும் கூறி முடித்தாளாயிற்று.

---

## 123. அதிகாரம்.

## பொழுதுகண்டிரங்கல்.

(பரி.) அஃதாவது மாலைப்பொழுது வந்துழி அதனைக்கண்டு தலைமகளி ரங்குதல். கனவுமுந்துறுத வினையில்லை யென்பதுபற்றிப பகற்பொழுதாற்றி யிருந்தாட்கு உரியதாகலின், இது கனவுநிலை யுரைத்தலின்பின் வைக்கப் பட்டது.

17



விளக்கம் :—அதாவது மாலைப் பொழுது வந்த காலத்து அம் மாலைப் பொழுதைக் கண்டு தலைமகள் வருந்துதல். கனவு நிலையடை யாததற்கு முன் யாதொரு தொழிலும் நேராது என்பது பற்றி பகற் பொழுதெல்லாம் பிரிவினை ஆற்றியிருந்தாளுக்கு இம் மாலைப்பொழுது உரியதாகலின் இதனைக் கனவுநிலையுரைத்தல் என்னும் அதிகாரத்துக் குப் பிறகு வைக்கப்பட்டுள்ளது.

1221. மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.

பொழுதொடு புலந்து சொல்லியது.

(பரி.) இ-ள். பொழுது=பொழுதே,—நீ மாலையோ அல்லை=நீ முன் னாள்களின் வந்த மாலையோவெனின், அல்லை;— மணந்தார் உயிர் உண்ணும் வேலை=இருந்தவாற்றான் அக்காட்காதலரைமணந்து மகளிருயிரையுண்ணும் இறுதிக்காலமாயிருந்தாய்; எ-று.

முன்னாள்=கூடியிருந்த நாள். அந்நாண்மணந்தாரெனவே, பின்பிரிந் தாராதல் பெறுதும். வாழியென்பது குறிப்புச்சொல். "வாலிழை மகளி ருயிர்ப்பொதி யவிழ்க்குங் காலை" என்றாற்போல ஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்டது. வேலையென்பது ஆகுபெயர். வேலையென்பதற்கு வேலா யிருந்தாயென்பாரு முளர். (க)

விளக்கம் :—"பொழுதே! நீ முன் நாள்களில் வந்த மாலைப் பொழுது தானோ என்று எண்ணின் அது அல்லை. ஆயின் இப்போது இருந்த விதத்தை நோக்கின் அந் நாள் காதலரை மணந்து கொண்ட பெண்களது உயிரை உண்ணுகின்ற கடைநாளாக இருந்தாய்" என்று மாலைப் பொழுதோடு கோபித்துத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைமகளானவள் அப் பொழுதை நோக்கி ஓ! மாலையே! முன் தலைவரோடு கூடியிருந்த நாள்களில் வந்த மாலைக் காலமாக நீ காணப்படவில்லை ஆயின் தலைவரைப் பிரிந்த பெண்களது உயிரைக் கொள்ளை கொள்ளுகின்ற இறுதிக் காலத்தைச் செய்யும் எமன் போல் இருக்கின்றாய் என்று மாலைப் பொழுதில் உண்டாகும் காமத்துன்பத்தைக் கூறியதாயிற்று.



1222. புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை.

தன்னுட்கையாற்றை அதன்மேலிட்டுச் சொல்லியது.

(பரி.) இ-ள். மருண்மாலை = மயங்கியமாலாய்,—புன்கண்ணை = நீயுமெம் போலப் புன்கணுடையையாயிருந்தாய்,—நின்றுணை எங்கேள்போல் வன் கண்ணதோ = நின்றுணையும் எந்துணைபோல வன்கண்மையுடையதோ, கூறுவாயாக; எ-று.

மயங்குதல் = பகலுமிரவுந் தமமுள்ளே விரவுதல்; கலங்குதலுந்தோன்ற நின்றது. புன்கண் = ஒளியிழத்தல்; அதுபற்றித் துணையுமுண்டாக்கிக் கூறினாள். எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. எமக்குத் துன்பஞ்செய்தாய், நீயு மின்பமுற்றிலையென்னுங் குறிப்பால் 'வாழி' என்றாள். (உ.)

விளக்கம்:—"மயங்கிய மாலைக் காலமே! நீயும் என் போல் ஒளி யிழந்து நிற்கின்றாய். உன் துணைவனும் என் துணைவன் போல் வன் கண்ணனோ சொல்லுவாயாக!" என்று காமத் துன்பத்தால் வருந்தும் தலைவியானவள் தன் மனப் பாங்கினை மாலையின் மீது வைத்துக் கூறிய

தாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஓ! மாலையே! நீயும் பகலும் இரவும் இரண்டும் ஒன்றாகக் கலக்கின்ற கலக்கத்தையுடையை. அன்றியும் ஒளியிழந்து நிற்கின்றனை. யானும் கலங்கி நிற்கின்றேன். ஒளியிழந்தும் உள்ளேன். என் தலைவன் போல் உன் துணைவனும் ஓர் கால் அஞ்சா நெஞ்சினனாய் இருத்தல் வேண்டும். ஆயினும் ஒருவர்க்குத் துன்பஞ்செய்தால் தாமும் துன்பம் அடைவது உலக வழக்காக உள்ளது என்பது போதா முன்னர் எனக்குத் துன்பஞ்செய்த மாலைப் பொழுதாகிய நீயும் இன்பத்தை அடையவில்லை. இவ்விதம் மயங்கி ஒளியிழந்த நீ வாழ்ந்துகொண்டிருப்பாய் என்று மாலைப்பொழுதில் உண்டாகும் துன்பத்தைக் கூறினளாயிற்று.

1223. பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்
துன்பம் வளர வரும். [பித்

ஆற்றல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். பனி அரும்பிப் பைதல்கொள் மாலை=காதலர்கூடிய நாளெல்லாம் என்முன் நடுக்கமெய்திப் பசந்துவந்த மாலை,—துனி அரும்பித் துன்பம் வளர வரும்=இந்நாள் எனக்கிறந்துபாடு வந்துதோன்றி அதற்கு ஏதுவாகிய துன்பம் ஒருகாலைக்கொருகால் மிக வாராநின்றது; எ-று.



குளிர்ச்சிதோன்ற மயங்கிவருமாலையென்னுஞ் செம்பொருள் இக்குறிப் புணர நின்றது. துனி=உயிர்வாழ்தற்கண் வெறுப்பு. அதனால் யானாற்றுமா றென்னை யென்பது குறிப்பெச்சம். (௩)

விளக்கம்:—"என் காதலர் கூடியிருந்த நாள்களிலெல்லாம் என் முன் தோற்றுவதற்கு நடுக்கமடைந்து நிறவேறுபட்டு நின்ற மாலையானது, காதலரைப் பிரிந்து உள்ள இந்நாள்களில் நான் இறந்துபடுவ

தற்கு உரிய தன்மையோடு வந்து காணப்பட்டு அவ்விறத்தலுக்கு உரியதாம் துன்பம் ஒரு காலத்திற்கு ஒருகாலம் மிகும்படி வருகின்றது" என்று பிரிவினைப்பொறுத்திருத்தல் வேண்டும் என்றதோழியை நோக்கி, தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! இம்மாலைக் காலமானது காதலர் என்னோடு கூடியிருந்த காலத்து வந்த மாலைக்காலமல்ல, நான் இறப்பதற்கு உரிய காலத்துத் தோன்றும் துன்பமானது மேலும் மேலும் வளர்வதுபோல் இப்போது வருவதாக உள்ளது. ஆகலால அக்காலத்துக் குளிர்ச்சி தோன்றவந்த மாலையானது இக்காலத்து அழல்போல் காணப்படுவதால் எவ்விதம் யான் ஆற்றியிருந்து உயிர் வாழ்வேன் என்று குறிப்பாகக் கூறியதாயிற்று.

## 1224. காதல ரில்வழி மாலை கொலைக்களத்
## ஏதிலர் போல வரும்.

இதுவுமது.

(பரி.) இ-ள். மாலை=காதலருள்ளபொழுதெல்லாம் என்னுயிர்தளிர்ப்ப வந்தமாலை,—காதலர் இல்வழி=அவரில்லாத இப்பொழுது—கொலைக்களத்து ஏதிலர்போல வரும்=அஃதொழிந்துகற்றலேயன்றிக் கொல்லுங்களரியிற் கொலைஞர் வருமாறுபோல அவ்வுயிரைக்கோடற்கு வாராநின்றது.

ஏதிலர்=அருள்யாதுமில்லார். முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ்செய்து வந்தபொழுதும் இன்று என்மேற் பகையாய்த் துன்பஞ்செய்து வாராநின்றது. இனி யானாற்றுமாறென்னை யென்பதாம். (௪)

விளக்கம்:—"காதலர் என்னோடு கூடியிருந்த காலமெல்லாம் என்னுயிர் தளிர்த்து நிற்கும்படி வந்து கொண்டிருந்த மாலைப்பொழுதானது அக்காதலர் என்னைவிட்டுப் பிரிந்து நிற்கின்ற இக்காலத்து அத்தளிர்த்தற்கு உரிய குளிர்ச்சி ஒழிந்ததோடு கொலைக்களத்து உள்ள கொல்லும் தொழிலைச் செய்யும் கொலைஞர் நெருங்கி வருவதுபோல்

தளிர்க்கச் செய்திருந்த உயிரை கொண்டுபோவதற்கு வருகின்றது" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! காதலர் என்னோடு இருந்த காலமெல்லாம் எனக்கு நட்பாக இருந்து இன்பத்தைச் செய்துவந்த மாலைப்பொழுதும் அவர் பிரிந்து உள்ள இக்காலத்து என்மீது பகைகொண்டு துன்பத்தைச் செய்துவருகின்றது. அவ்விதம் இருக்குமாயின் இனி யான் பொறுத்து இருப்பது எவ்விதம் என்று கூறினளாயிற்று.

1225. காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்
மாலைக்குச் செய்த பகை. [யான்

இதுவுமது.

(ப.உ.) இ-ள். காலையும், மாலையும் அவர் கூடியஞான்றுபோலாது இஞ்ஞான்று வேறுபட்டு வாராநின்றன: அவற்றுள்.—யான் காலைக்குச் செய்த நன்று என்=யான் காலைக்குச் செய்தவுபகாரம் யாது ?— மாலைக்குச் செய்த பகை எவன்=மாலைக்குச்செய்த அபகாரம் யாது ? எ-று.

கூடியஞான்று பிரிவஞ்சப்பண்ணிய காலை அஃதொழிந்து இஞ்ஞான்று கங்குல்வெள்ளத்திற்குக் கரையாய் வாராநின்றதென்னுங் கருத்தால் 'நன்றென்கொல்' என்றும், கூடியஞான்று இன்பஞ்செய்துவந்த மாலை அஃதொழிந்து இஞ்ஞான்று அளவிறுன்பஞ்செய்யாநின்றதென்னுங் கருத்தாற் 'பகையெவன்கொல்' என்றுங் கூறினள். பகை ஆகுபெயர். தன்னோடொத்த காலைபோலாது மாலை தன்கொடுமையாற்றுன்பஞ் செய்யாநின்றதென்பதாம். (௫)

விளக்கம்:—"காலைப்பொழுதும் மாலைப்பொழுதும் என் தலைவர் என்னோடு கூடியிருந்த நாள்களில் இருந்தனபோல் அல்லாமல் அவர் பிரிந்து உள்ள இந்நாளில் வேறுபட்ட தன்மை உடையனவாய் வருகின்றன. அக்காலையும் மாலையுமாகிய இரண்டனுள் யான் காலைப்பொழுதிற்குச் செய்த உபகாரம் எது ? மாலைப் பொழுதிற்குச் செய்த அபகாரம் யாது?" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது.

அதாவது தோழியே! காதலர் என்னோடு கூடியிருந்த நாள்களில்பொழுது விடியின் நம்மை நம் தலைவர் பிரிந்துபோவரே என்று பயப்படச் செய்த காலைப்பொழுதானது காதலர் பிரிந்து உள்ள இக்காலத்து அவ் விதம் அஞ்சச் செய்தலை ஒழித்து கழியாத இராக்காலமாகிய சமுத்தி ரத்திற்கு ஒரு கரைபோல் வந்து நான் இரவெல்லாம் அடைந்த துன்



பத்தை நீக்கியும், கூடியிருந்த காலத்து எனக்கு இன்பத்தைச் செய்து வந்த மாலைப்பொழுதானது எனக்கு இன்பஞ்செய்தலை யொழிந்து இக் காலத்து அளவில்லாத துன்பத்தைச் செய்தும் வருகின்றன. ஆத லால் பகைபோன்றிருந்த காலை நட்புப்போன்று எனக்கு நன்மை செய்வதால், அக்காலைப பொழுதிற்கு நான் செய்த உபகாரம் ஏது? நட்புப் போலிருந்து எனக்கு நன்மை செய்து வந்த மாலை இக் காலத்துக் கொடுமை செய்து வருவதால் இம்மாலைக்குச செய்த அப காரம் ஏது? இவ்விதம் கொடுமை செய்யும் மாலைக்காலத்து நான் ஆற்றியிருப்பது எவ்விதம் என்பதாம்.

1226. மாலைநோய் செய்தல் மணந்தா ரகலாக்
காலை யறிந்த திலேன்.

இஃது இன்னையாகின்ற நீ அன்று அவர்பிரிவிற்குடம்பட்ட
தென்னையென்றாட்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். மாலை நோய் செய்தல்=முன்னெல்லாம எனகது நட் பாய் இன்பஞ்செய்துபோந்த மாலை இன்று பகையாய்த் துன்பஞ்செய் தலை—மணந்தார் அகலாத காலை அறிந்தது இலேன்=காதலர் பிரிதற்கு முன்னே அறியப் பெற்றிலேன்! எ-று.

இங்ஙனம் வேறுபடுதலறிந்திலேன், அறிந்தேனாயின் அவர்பிரிவிற்குடம் படேனென்பதாம். (சு)

விளக்கம்:—"காதலர் கூடியிருந்த காலமெல்லாம் எனக்கு நட்புப்

போலிருந்து இன்பத்தைச் செய்து வந்த மாலைக்காலமானது, காதலர் பிரிந்துள்ள இன்று பகையாய்த் துன்பஞ் செய்தலை என் காதலர் என்னைவிட்டுப் பிரிவதற்கு முன்னர் அறிந்திலேன்" என்று தோழியான வள் தலைவியை நோக்கி, தலைவியே! காதலர் பிரிவினால் இவ்விதம் துன் பப்படுகின்ற நீ அன்று அவர் பிரிவினை உணர்த்திய காலத்து ஏன் அதற்குச் சம்மதித்தனை என்னலும், தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தோழியே! காதலர் இருந்தகாலத்து இன்பத்தைத் தந்த இம்மாலைக் காலம் அவர் இல்லாத காலத்துத் துன்பத்தைத் தரும் என்னும் வேறுபாட்டினை அறியாதிருந் தேன். அவ்விதம் அறிந்திருப்பேனாயின் அவர் பிரிந்து போதற்குச் சம்மதித்திரேன் என்று கூறியதாயிற்று.

## பொழுதுகண்டிரங்கல் 135

1227. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

மாலைப்பொழுதின்கண் இனையாதற்குக் காரண
மென்னையென்றாட்குச் சொல்லியது.

(பரி.) இ - ள். இந்நோய்=இக்காமநோயாகிய பூ—காலை அரும்பி= காலைப்பொழுதின்கணரும்பி,—பகல் எல்லாம் போது ஆகி=பகற்பொழு தெல்லாம் பேரரும்பாய் முதிர்ந்து,—மாலை மலரும்=மாலைப்பொழுதின்கண் மலரா நிற்கும்; எ - று.

துயிலெழுந்த பொழுதாகலிற் கனவின்கட்கூட்ட நினைந்தாற்றுதல் பற்றிக் 'காலையரும்பி' என்றும், பின் பொழுது செலச்செல அதுமறந்து பிரிவுள்ளியாற்றளாதல்பற்றிப் 'பகலெல்லாம் போதாகி' என்றும், தத்தந் துணையையுள்ளிவந்துசேரும் விலங்குகளையும் மக்களையுங் கண்டு தான் அக் காலத்தினுகர்ந்த வின்பநினைந்தாற்றாமைமிகுதிபற்றி 'மாலைமலரும்' என்றுங் கூறினள். பூப்போல இந்நோய் காலவயத்த தாகாநின்றதென்பது உருவகத் தாற் பெறப்பட்டது. ஏகதேசவுருவகம். (எ)

விளக்கம்:—" காலைப் பொழுதிடத்தே அரும்புபோல் தோன்றி

பகற்போதெல்லாம் பேரரும்பாய் முதிர்ந்து மாலைப்பொழுதினிடத்தே மலராகி இக்காம நோயாகிய பூ மலர்கின்றது" என்று மாலைப் பொழுதிடத்தே நீ இவ்வித தன்மை அடைவதற்குக் காரணம் எது? என்ற தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவியானவள் தோழியே! இக்காம நோயாகிய பூவானது, காலைப் பொழுதிடத்தே அரும்பாகத் தோன்றியும், பின்பு பகற்பொழுதெல்லாம் அவ்வரும்பு பெரிய அரும்பாக முதிர்ச்சி கொண்டும், மாலைப்பொழுதிடத்தே மலர்வதாயும் இருக்கின்றது. எவ்விதம் எனின் யான் இரவினில் கனவினிடத்தே தலைவன் வந்து கூடுவதை நினைந்தகாலத்து அந்நினைவின் மிகுதியால் சிறிது ஆறுதலடைந்து அக்காமத்துன்பம் சிறிதாக உள்ளது. பின்பு பொழுது செல்லச்செல்ல அக்கனவினிடத்தே கூடிய கூட்டத்தை மறந்து காதலர் பிரிந்து இருப்பதை நினைந்து ஆற்றாமை கொண்டு நிற்பதால் அக்காமத் துன்பமானது மலர்வதற்கு உரிய பக்குவங் கொண்ட அரும்புபோல் என்னைத் துன்புறுத்துகின்றது. பிறகு மாலைப் பொழுதிடத்தே தம்



தம் துணையாயுள்ள பெண்களை நினைத்துக்கொண்டு இடத்தில் சேருகின்ற மிருகங்களையும் மக்களையும் பார்ப்பதால் அத்தலை நாளில் புணர்ந்த புணர்ச்சியால் உண்டாகிய இன்பத்தை நினைந்து ஆற்றாமை மிகுதியாகின்றது. மலரும் மலர் எவ்விதம் தன் தன்மையை யாவரும் அறியச் செய்கின்றதோ அதுபோல் இந்நோய் என்னை இவ்விதமாக இருக்கச் செய்கின்றது என்று கூறியதாயிற்று.

1228. அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.

இதுவுமது.

(பரி.) இ - ள். ஆயன் குழல்=முன்னெல்லாம் இனியதாய்ப்போந்த ஆயன் குழல்—அழல்போலும் மாலைக்குத் தூதாகி=இதுபொழுது அழல் போலச் சுடுவதாய மாலைக்குத் தூதுமாய்,—கொல்லும் படை=அது வந்தென்னைக் கொல்வுழிக் கொல்லும் படையுமாயிற்று ; எ - று.

பின்னின்ற போலுமென்பது உரையசை. முன்னரே வரவுணர்த்தலிற்றூதாயிற்று. கோறற்கருவியாகலிற் படையாயிற்று. தானே சுடவல்ல மாலை இத்துணையும் பெற்றால் என்செய்யாதென்பதாம். (அ)

விளக்கம் :—“தலைவன் பிரிவதற்கு முன்னெல்லாம் இனிமையாய்த் தோன்றிய இடையரது குழலோசையானது பிரிந்து உள்ள இக்காலத்துத் தீப்போல் சுடுவதாகிய மாலைப் பொழுதிற்குத் தூதுமாகி, அம்மாலைப் பொழுதானது வந்து என்னைக் கொல்லுங் காலத்து கொல்லும் படையாகவும் உள்ளது” என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது அதாவது தோழியே! நாயகனோடு இருந்த காலத்து மாலைக் காலத்து ஊதும் இடையரது குழலோசையானது எனக்கு மிகுதியும் இன்பத்தைத் தந்து கொண்டிருந்தது. அக் குழலோசையே இக்காலத்து என்னைத் தீப்போல் சுடுகின்ற மாலைப் பொழுதானது வருகின்றது வருகின்றது என்று தூது சொல்வது போல் இருப்பதுடன், மாலைப் பொழுது வந்த பிறகு காமத் துன்பத்தினை அதிகரிக்கச் செய்து என்னைக் கொல்வதற்கு உரிய ஆயுதமுமாயிற்று. இவ்விதம் முன்னர் இனிமையாகக் காணப்பட்ட குழலோசையே எனக்கு இப்போது தீமையாக வருவதால் இவ்வித தீமை தரத்தக்க துணையையும் பெற்ற மாலையானது என்னை யாது செய்யாது என்று கூறியதாயிற்று.



1229. பதிமருண்டு பைதல் உழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

இதுவுமது.

(பரி.) இ - ள். இதற்கு முன்னெல்லாம் யானேமயங்கி நோயுழந்

தேன்,—மதி மருண்டு மாலை படர்தரும் போழ்து=இனிக் கண்டாரும் மதிமருளும்வகை மாலை வரும்பொழுது,—பதி மருண்டு பைதல் உழக்கும்= இப்பதியெல்லாம் மயங்கி நோயுழக்கும். எ - று.

மதிமருளவென்பது மதிமருண்டெனத் திரிந்துநின்றது. கூற்றமாகக் கருதிக் கூறினாளாகலின் 'மாலைபடர்தரும் போழ்து' என்றாள். யானிறந்துபடுவலென்பதாம். மாலை மயங்கிவரும் போழ்து என் பதி நிலை கலங்கி நோயுழக்குமென் றுரைப்பாரு முளர். (கூ)

விளக்கம்:—"இதற்கு முன்னெல்லாம் யானே மயங்கி நோயால் வருந்தினேன்; இனி, கண்டவரும் அறிவு மயங்கும் விதமாக மாலைவருங் காலத்து இப்பதியில் உள்ளா ரெல்லாம் மயங்கி நோயுழப்பர்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தோழியே! இம்மாலைப் பொழுதானது இதுவரையில் யான் மாத்திரம் அறிவுகலங்கி நோயால் வருந்துவதாக இருந்தது. இனி என்னைப் பார்ப்பவரும் அறிவுகலங்கும்படி இம்மாலைக் காலமானது வருங் காலத்து அது உயிரைக்கொள்ளைகொள்ளும் எமனைத் தோன்றுமாதலால் அதற்கு ஆற்றுதவளாய் யான் இறந்துபடுவேன். அதனைக்கண்ட இவ்வூரி லுள்ளாரெல்லாம் மயங்கி வருந்துவர்" என்பதாயிற்று.

1230. பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர்.

இதுவுமது.

(பரி.) இ - ள். மாயா என் உயிர்=காதலர்பிரிவைப் பொறுத்து இறந்துபடாதிருந்த என்னுயிர்,—பொருண்மாலையாளரை உள்ளி மருண் மாலை மாயும்=இன்றுபொருளியல்பே தமக்கியல்பாகவுடையவரை நினைந்து இம்மயங்கு மாலைக்கண்ணே இறந்துபடா நின்றது. எ - று.

குறித்தபருவங் கழியவும் பொருண்முடிவு நோக்கி வாராமையிற் சொல் வேறுபடாமையாகிய தம்மியல்பொழிந்தவர் அப்பொருளியல்பே தம்மியல் பாயினர், காலமிதுவாயிற்று, இனி நீ சொல்கின்றவாற்றுற் பயனில்லை யென்பதாம். (ல)

விளக்கம்:—"காதலருடைய பிரிவினைப் பொறுத்துக் கொண்டு இறந்துபடாதிருந்த என் உயிரானது இன்று பொருளின் தன்மையே பெரிதென எண்ணி அதன் பொருட்டுப் பிரிந்து உள்ளவரை நினைந்து இம்மாலைக்காலத்து இறந்துபடுவதாயுள்ளது" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தோழியே! நீ ஆற்றியிருத்தல் வேண்டும் என்கின்றாய்; இத்துணைக் காலமும் அவர் வருவரென்று பொறுத்து இறந்துவிடாதிருந்த எனது உயிரானது அவர் குறித்த பருவம் கழிந்தும் பொருள் தேடுதலையே நமக்கு ஓர் இயல்பாக எண்ணி வாராதிருப்பதாலும், சொல்லிய சொல் வேறுபடாத அத்தலைவர் அப் பொருள் தன்மையைக் கருதித் தம் இயற்கையை ஒழிந்தாராதலாலும், இனி நீ சொல்லும் ஆறுதலால் பயனில்லை. என் உயிர் இறந்துபடுவ தாகவே உள்ளது" என்று கூறியதாயிற்று.

---

## 124. அதிகாரம்.

---

## உறுப்புநலனழிதல்.

(பரி.) அஃதாவது தலைமகடன் கண்ணும், தோளும், நுதலு முதலாய அவயவங்கள் தம்மழகழிதல். இஃது இரக்கமிக்குழி நிகழ்வதாகலின் பொழுது கண்டிரங்கலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, தலைமகளுடைய கண்களும், தோள்களும், நெற்றியும் முதலாகிய அவயவங்கள் தம்முடைய அழகினை இழந்து விடுதல் இவ்வழகழிதல் வருத்தம் மிகுந்து இரங்கும் காலத்து உண்டாவது ஒன்று ஆதலால் பொழுது கண்டிரங்கல் என்னும் அதிகாரத் துக்குப் பிறகு வைக்கப்பட்டு உள்ளது.

1231. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண்.

ஆற்றாமை மிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத் தோழி

சொல்லியது.

(பரி.) இ-ள். சிறுமை நமக்கு ஒழியச் சேட்சென்றார் உள்ளி=இவ்வாற்றாமை நங்கண்ணே நிற்பத் தாஞ்சேணிடைச்சென்ற காதலரை நீ நினைந்தழுதலால்,—கண் நறுமலர் நாணின=நின் கண்கள் ஒளியிழந்து முன் நமக்கு நாணிய நறுமலர்கட்கு இன்று தாம் நாணிவிட்டன. எ-று.



நமக்கென்பது வேற்றுமைமயக்கம். உள்ளவென்பது உள்ளியெனத் திரிந்து நின்றது. உள்ளுதலென்பது காரணப்பெயர் காரியத்திற்காயவாகு பெயர். இவைகண்டார் அவரைக் கொடுமைகூறுவர், நீ யாற்றல் வேண்டுமென்பது கருத்து. (க)

விளக்கம்:—"இவ்வித ஆற்றாமையானது நம்மிடத்தே இருக்கும்படி நம்மைப் பிரிந்து தூரத்தில் சென்ற காதலரை எண்ணி நீ அழுதலால், நின் கண்கள் ஒளியினை யிழந்து முன் தமக்கு வெட்கிய வாசனை தங்கிய பூக்களுக்கு இன்று தாம் வெட்கிவிட்டன" என்று பிரிவின் ஆற்றாமை மிகுதியால் உறுப்பு அழகினையிழந்த தலைமகளை நோக்கித் தோழி சொல்லியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியானவள் "தலைவியே! இவ்விதம் நீ ஆற்றாமையால் வருந்தும்படி விட்டுப் பிரிந்து நெடுந்தூரத்திலுள்ள உன் காதலரை நீ நினைந்து அழுவதால், பூக்களுக்கு உவமை சொல்லக்கூடிய உன் கண்கள் ஒளியிழந்து அப்பூக்களினும் தாழ்ந்தனவாயின. ஆதலால், இவ்வித வேறுபாட்டினைக் கண்ட நம்மவர் பிரிந்து சென்ற காதலரைக் கொடுமை கூறுவர். அதன் பொருட்டேனும் நீ ஆற்றியிருந்தல் வேண்டும்" என்பதாயிற்று.

1232. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்.

இதுவுமது.

(பரி.) இ-ள். பசந்து பனிவாரும் கண=பசப்பெய்தன்மேனீர்வார் கின்ற நின்கண்கள்,—நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்=நம்மானயக் கப் பட்டவரது நல்காமையைப் பிறர்க்குச் சொல்லுவபோலாநின்றன, இனி நீ யாற்றல் வேண்டும். எ-று.

சொல்லுவபோறல் = அதனையவருணர்தற்கனுமானமாதல். நயந்தவர்க் கென்று பாடமோதுவாரு முளர். (௨)

விளக்கம்:—"பசப்பு அடைதலோடு நீர் சொரிகின்ற உன்னுடைய கண்கள் நம்மால் விரும்பப்பட்டவருடைய அன்பில்லாமையைப் பிறர்க்கு எடுத்துச் சொல்லுவதுபோ லுள்ளனவாதலால்,நீ ஆற்றியிருத்தல் வேண் டும்" என்று ஆற்றாமை கொண்ட தலைவியை நோக்கித் தோழி கூறிய தாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தலைவியே! முன்னரே



தலைவர் பிரிவினால் நிறவேறுபாட்டினை அடைந்த உன் கண்கள் அவ் வளவோடு நில்லாமல் இப்போது அழுவதால் நீரையும் சொரிகின்றனவா தலால், இவ்வித வேறுபாடானது இவளுக்கு ஏன் வந்தது? இவள் காதல் கொண்ட நாயகனும் இவளைப் பிரிந்து உள்ளமையால் இவ்வித செயல் உண்டாகின்றது என்று அயலவர் சந்தேகம் கொள்வதற்கு இடமாகும். ஆதலால் நீ பொறுத்து இருத்தல் வேண்டும்" என்று கூறியதாயிற்று. மேற்கூறிய இரண்டு திருக்குறள்களும் அவயவங்க ளில் சிறந்த கண்களானவை தம் அழகினை இழத்தலைச் சொல்லியதா யிற்று.

1233. தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள்.

இதுவுமது.

(பரி.) இ-ள். மணந்த நாள் வீங்கிய தோள்=காதலர் மணந்தஞான்று இன்பமிகுதியாற் பூரித்த நின்றோள்கள்,—தணந்தமை சால அறிவிப்ப போலும்=இன்று அவர் பிரிந்தமையை விளங்க உணர்த்துவபோல மெலியா நின்றன, இது தகாது. எ-று.

அன்றுமவ்வாறு பூரித்து இன்றுமிவ்வாறு மெலிந்தால் இரண்டுங் கண்டவர் கடிதினறிந்து அவரைத் தகவின்மை கூறுவரென்பதாம். (௩)

விளக்கம்:—"காதலர் மணந்த தினத்தன்று மிகுந்த இன்பத்தால் பூரித்த உன் தோள்கள் அவர் பிரிந்த இன்று அவர் பிரிவினை யாரும் அறிய உணர்த்த வேண்டுவனபோல மெலிகின்றன. இவ்வித மெலிவு தகுதியாகாது" என்று ஆற்றாமை மிகுதியால் வேறுபாட்டினை அடைந்த தலைமகளை நோக்கித் தோழி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியானவள் "ஓ தலைவியே! நீ மணந்த காலத்து அடைந்த இன்பத்தின் மிகுதியால் பருத்து நின்ற தோள்கள் இன்று தலைவர் பிரிந்த காலத்து மிகுதியும் மெலிந்து போயின வாதலால், அன்று பூரித்தமையும், இன்று மெலிந்தமையும் ஆகிய இரண்டு வேறுபாட்டினையும் கண்டவர் விரைவில் அறிந்து இவ்வித வேறுபாடு இவளுக்கு வந்தது இவளது தலைவன் பிரிந்து சென்று குறித்த பருவத்து வாராமையேயாகும் என்று அவரைப் பழிப்பர் ஆகலால் நீ ஆற்றியிருத்தல் வேண்டும்" என்று கூறியதாயிற்று.



1234. பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

இதுவுமது.

(பரி.) இ-ள். துணை நீங்கித் தொல் கவின் வாடிய தோள் = அன்றுந் தந் துணைவர் நீங்குதலான் அவராற்பெற்ற செயற்கையழகேயன்றிப் பழைய வியற்கையழகுமிழந்த இத்தோள்கள்,—பணை நீங்கிப் பைந்தொடி சோரும் = இன்றதற்குமேலே தம்பெருமையிழந்து வளை கழலாநின்றன, இவையிங்ஙனஞ் செயற்பாலவல்ல. எ-று.

பெருமையிழத்தல் = மெலிதல். பைந்தொடி = பசிய பொன்னாற்செய்த

தொடி. சோருமென்னும் வளைத்தொழில் தோன்மேனின்றது. அன்றும் பிரிந்தாரென்று அவரன்பின்மையுணர்த்தி இன்றுங் குறித்தபருவத்து வர்திலரென்று அவர் பொய்ம்மை யுணர்த்தாநின்றன; இனி அவர்றைக் கூறு கின்றார்மேற் குறையுண்டோ வென்பதாம். (௯)

விளக்கம்:—"தலைவர் பிரிந்த அன்றும் தம் துணைவர் நீங்குதலால் அவரால் அடைந்த செயற்கை அழகு மாத்திரமல்லாமல் பழைய இயற்கையழகையும் இழந்தனவாகிய இத்தோள்கள் குறித்தபருவத்து வாராது வருந்தும் இன்றும் அதற்குமேலே தம் பெருமை இழந்து வளைகளும் கழலும்படி நின்றன. இத்தோள்கள் இவ்விதம் செய்யக் கூடியன அல்ல" என்று தோழி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தலைவியே! தலைவர் பிரிவிற்கு உடன்பட்டு அவர் பிரிந்த காலத்து மணப்பதற்கு முன்னிருந்த இயற்கையாகிய அழகினையும், மணந்ததால் உண்டாகிய செயற்கையாகிய அழகினையும் இழந்தனவாகிய உன் தோள்கள் அன்றும் அவர் பிரிந்தனரென்று அவர் அன்பில்லாமையை உணர்த்திக் குறித்தபருவத்து வாராத இன்றும் தம் வலிமை இழந்து மிகுதியும் மெலிந்து அம்மெலிவால் வளையல்களும் கீழ் வீழும்படி நின்று அவர் சொல்லிய சொல் பொய்த்தது என்னும் பொய்ம்மையையும் உணர்த்தா நின்றன. இனி இவ்வுண்மையை அறிந்தார் பழி கூறுவராயின், பழி கூறுகின்ற அவர் மீது என்ன குறை உள்ளது?" என்று கூறியதாயிற்று.



1235. கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

இதுவுமது.

(பரி.) இ-ள். கொடியார் கொடுமை உரைக்கும் = கலவுக்கை நெகிழினும் ஆற்றுதாட்கு இக்கால நீட்டத்து என்னுமென்று நினையாத கொடியாரது கொடுமையைத் தாமே சொல்லாநின்றன,—தொடியொடு தொல் கவின்

வாடிய தோள் = வளைகளுங் கழன்று பழைய வியற்கையழகுமிழந்த இத் தோள்கள், இனியதனை யாமறைக்குமாறென்னை! எ று.

மறைக்குமென்பது அப்பொருண்மைதோன்ற நின்ற குறிப்புச்சொல். ஒடு—வேறுவினைக்கண் வந்தது. அவரொடு கலந்ததோள்களே சொல்லுவன வானால் அயலார் சொல்லுதல் சொல்லவேண்டுமோ வென்பதாம். (௩)

விளக்கம்:—"இறுகத் தழுவிய கையானது சிறிது நெகிழ்ந்தாலும் பொறாது இருந்தவளுக்குப் பிரிந்து உள்ள இக்கால அதிகரிப்பு யாதாகுமோ என்று எண்ணாத கொடியராகிய தலைவரது கொடுமையைத் தாமே சொல்லுகின்றன. வளைகளும் கழலப்பெற்று, பழைய இயற்கை யழகினையும் இழந்த இத்தோள்கள். இனி, அவ்விதம் நேர்ந்த செயலையும் யாம் பிறரறியாது மறைக்கும் விதம் என்னை?" என்று தோழி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "வளையல்களும் கழலப் பெற்று மணப்பதற்கு முன்னிருந்த பழைய இயற்கை யழகினையும் பிரிவால் இழந்த இத்தோள்கள் புணர்ந்தகாலத்து நெருக்கி அணைத்த கையானது சிறிது தளர்ச்சி யடையுமாயின் அத்தளர்ச்சிக்கும் பொறாக் காது நிறம் வேறுபாட்டினை யடைந்த தலைவிக்கு இந்நெடுங்காலப் பிரிவினிடத்தே யாதாகுமோ என்று சிறிதும் எண்ணாத கொடியவரது கொடுமையைத் தாமே சொல்லுவதாக உள்ளன. அவ்விதம் அத்தலைவரோடு கலந்த தோள்களே அவரது கொடுமையைச் சொல்லுவனவா யிருப்பின் நட்பில்லாத அயலவர் சொல்லுதலைச் சொல்லவும் வேண்டுமோ?" என்று தோள் நலன் அழிந்ததைத் தோழி கூறியதாயிற்று.

1236. தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடியரெனக்கூற றொந்து.

தானாற்றுதற்பொருட் டியற்பழித்த தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(பரி.) இ - ள். தொடியொடு தோள் நெகிழ = யானாற்றவும் என்வயத்த வன்றித் தொடிகள் கழலுமாறு தோள்கண்மெலிய.—அவரைக் கொடியர்

எனக் கூறல் நொந்து நோவல்=அவர்தைக் கண்டு நீயவரைக் கொடிய ரெனக் கூறுதலைப் பொறுது யானென்னுள்ளே நோவாநின்றேன். எ-று.

ஓ—மேல்வந்தபொருணமைத்து. யானும்பிறனுநின்றது அவர் வாராததற்கன்று, நீகூறுகின்றதற் கென்பதாம். (௯)

விளக்கம்:—"தோழியே! யான் பொறுத்திருக்கவும் என் வசப் படாவாய் வளையல்கள் கழலுண்டு தோள்கள் மெலியவும், அம்மெலி கின்ற தோள்களைக் கண்டு நீ காதலரைக் கொடியர் என்று சொல்லுத லைப் பொறாமல் யான் என் மனத்துள் மிக நொந்து கொண்டுள்ளேன்" என்று தான் பொறுக்கும் பொருட்டுத் தலைவன் தன்மையைப் பழித்த தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைமகளானவள், "தோழியே! என் தோள்கள் யான் பொறுத்திருக்கவும் என் வழி நில்லாது வளையல்கள் கழலுவதும் மெலி வதும் செய்வதைக்கண்டு என்னைப் பிரிந்து சென்ற தலைவரைக் கொடியரென்று கூறுகின்றாய். அவ்விதம் அவரைப் பழிப்பதற்கு யான் ஆற்றாது நிற்கின்றேனேயன்றி அவர் குறித்த பருவத்து வாராதது பற்றியல்லை" என்று கூறியதாயிற்று.

1237. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து.

அவ்வியப்பழிப்புப் பொறாது தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். நெஞ்சே=நெஞ்சே!—கொடியார்க்கு என் வாடுதோட் பூசல் உரைத்து=இவள் கொடியாரென்கின்றவர்க்கு நீ சென்று என்மெலி கின்ற தோளினால் விளைகின்ற ஆரவாரத்தைச் சொல்லி,-பாடு பெறுதியோ= ஒருமேம்பாடெய்தவல்லையோ, வல்லையாயின் அதனையொப்பதில்லை. எ-று.

கொடியார்க்கென்பது கொடியரல்லரென்பது தோன்றநின்ற குறிப்புச் சொல்.வாடுதோளென்பதும் அவை தாமே வாடாநின்றனவென்பது தோன்ற நின்றது. பூசல்—ஆகுபெயர். அஃது அவள் தோளுநெக்கியியற்பழித்தன் மேலும் அதனாற் றனக்காற்றாமைமிகன்மேலும் நின்றது. நின்னுரை கேட் டலும் அவர் வருவர், வந்தால் இவையெல்லாநீங்கும், நீங்க அஃதெனக்குக்

காலத்திஞற்செய்த நன்றியாமாகலின், அதன்பயனெல்லாமெய்துதியென்ஹுங் கருத்தாற 'பாடுபெறுதியோ' என்ருன். (எ)

விளக்கம்:—"நெஞ்சே! இவள் கொடியார் என்கின்ற காதலர்க்கு நீ போய் என்னுடைய மெலிகின்ற தோள்களிஞல் உண்டாகும் ஆரவா



ரங்களைச சொலலி ஒரு மேம்பாட்டினை அடையவலலையோ! அவவித மேம்பாட்டினை அடையாவலலையாயின் அதறகொப்பது வேறொன்றும் இல்லையாகும்" என்று தோழியானவள் காதலரைப் பழித்த பழிச சொற்களுக்குப பொறுகவாறாபத தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவியானவள் தன் நெஞ்சினை நோக்கி "நெஞ்சே! கொடியாரலலா க என் காதலரைத தாமே வாடுகின்ற தோளகளை நோக்கிக் கொடியாரென்ற இவா கூறுகின்ருளாதலால அதற்கு நான் மிகுதியும் வருந்துகின்றேன், அதனால நீ காதலரிடஞ் சென்று என் தோள்கள மெலிதலால அவரைக் காணும் ஊரவர் பழியை யெலலாம் கூறின், என் காதலா வருவா வருவாராயின் இத்தோள்களால உணடாகும் ஆரவாரங்களெலலாம நீஙகும். நீங்கலும், நீ செய்த நன்றியானது காலத்திஞல் செய்த நன்றியாகும். அதஞல் நீ அடையவேண்டிய பயன் எல்லாம் அடையக் கூடும். இவவித பெருமையை நீ அடையவல்லை யாயின் அதனினும் மேம்பட்ட பெருமையொன்றும் இல்லையாகும்" என்று கூறியதாயிற்று.

1238. முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

வினைமுடித்து மீடலுற்ற தலைமகன முன்னிகழ்ந்தது நினைந்து
தன்னுள்ளே சொல்லியது.

(பரி) இ-ள். முயங்கிய கைகளை ஊககதன்னையிறுக முயங்கிய கைகளை இவட்குநோமென்று கருதி ஒருஞான்றியாநெகிழ்த்தேனுக,—பைந் தொடிப் பேதைநுதல பசநதது=அதனையும் பொருது பைநதொடிகளை

யணிகத பேகையது நகல் பசந்தது, அப்பெற்றித்தாய நுதல் இப்பிரிவிற்கி யாது செய்யுமோ' எ-று.

இனிககடிதிற் செல்லவேணடுமென்பது கருத்து. (அ)

விளக்கம் :—“தன்னை இறுக அணைத்த கைகளை இவளுக்கு நோகு மெனறு எண்ணி ஒருநாள் யான் சிறிது நெகிழும் படிச் செய்தேன். நெகிழ்ந்த அசசிறுபொழுதும் பொறுததால் பசிய வளையல்களை யணிந்த பேதையாகிய அவளுடைய நெற்றி யானது நிறவேறுபாட்டினை யடைந்தது. அவவித தகுதியுடையதாகிய அவளுடைய நெற்றியானது இவவிதம் பிரிந்து உாள பிரிவினுக்கு



யாது செய்யுமோ” என்று அரசன்பொருட்டுப் போரினுக்குச் சென்ற தலைவன் தான் சென்ற தொழில் முடிந்து திரும்பும் பருவத்து முன் கூடியிருந்த காலத்துத் தனக்கும் தலைவிக்கும் உண்டாகிய விஷ யங்களை நினைந்து தனக்குள்ளேயே கூறியதாக இத்திருக்குறள் கூறு கின்றது அதாவது, தலைமகன் “யான் ஒரு நாள் காதலியை இறுக அணைத்து முயங்கிய காலத்து இவ்விதம் இறுக அணைப்போமா யின் இவளுக்கு நோகுமே என்று எண்ணி இறுகி இருந்த கைகளைச சிறிது தளரும்படி செய்தேன். அத்தளர்வுக்குப் பொறுமல் என் காதலி யது நெற்றியானது பசப்பாகிய நிறவேறுபாட்டினை யடைந்தது. அவ் விதம் இறுகிய கைகளைச் சிறிது தளர்த்தியதற்குப் பொறாத இவளது நெற்றியானது இவ்விதம் நெடும் பொழுது பிரிந்து இருந்த இப்பிரி விற்கு என் செய்யுமோ அறிகிலேன். யான் இனி விரைவில் செல்லல் வேண்டும்” என்று சொல்லிக்கொண்டா னென்பதாயிற்று.

1239. “முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

இதுவுமது.

(இ-ள்.) இ-ள். முயக்கிடைத் தண் வளி போழ=அங்ஙனம் கைகளை நெகிழ்த்தலான் அம்முயக்கிடையே சிறுகாற்று நுழைந்ததாக,—பேதை பெரு மழைக்கண் பசப்புற்ற—அத்துணையிடையீடும் பொறாது, பேதையுடைய

பெரிய மழைக்கண்கள் பசப்புற்றன; அத்தன்மையவான கண்கள் மலைகளும், காடும் நாடுமாய இப்பிரிவிடையீடுகளையெல்லாம் யாங்ஙனம் பொறுத்தன! எ-று.

தண்ணம—ஈண்டு மென்மைமேனின்றது. போழவென்றது உடம்பிரண்டும் ஒன்றான ஏகோனமை நின்றது. மழை=குளிர்ச்சி. (கு)

விளக்கம்.—"அவ்விதம் கைகளைத் தளர்த்தலால் முயங்கியுள்ள உடம்பின் நடுவே சிறிது காற்று நுழைந்ததாயிற்று. சிறிது காற்று நுழையும்படி முயக்கம் தளர்ச்சி யுற்றதால் அச்சிறு தளர்ச்சியையும் பொறுமல என் காதலியினுடைய குளிர்ச்சி தங்கிய கண்கள் நிறவேறுபாட்டினை அடைந்தன. அவ்விதம் பிரிவு ஆற்றாத கண்கள் மலைகளும், காடுகளும், நாடுகளுமாகிய இடங்களிலெல்லாம் பிரிந்து இருப்பதற்கு எவ்விதம் பொறுத்து உள்ளனவோ!" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேல் திருக்குறளில் தன்னுடைய கைகளைத் தளர்த்தியதால் நெற்றி பசந்தது என்று கூறிய தலைமகன் இத்





திருக்குறளில் தன் கைகளை நெகிழ்த்தியதால் பசந்தது நெற்றி மாத்திரமன்று, கண்களும் பசந்தன. அவ்விதம் சிறு காற்றும் உள் நுழையா வண்ணம் முயங்கி இன்பத்தையடைந்த அவள் குளிர்ந்த கண்கள், விட்டுப் பிரிந்து மலைகளையும் காடுகளையும் நாடுகளையும் தாண்டிச்சென்று உள்ள இப்பிரிவிற்கெல்லாம் எங்ஙனம் பொறுத்துக்கொண்டு உள்ளனவோ என்று காதலியின் கண்களின் மென்மையையும் அவற்றின் பிரிவாற்றாமையையும் கூறினானாயிற்று

**1240. கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே**
**ஒண்ணுதல் செய்தது கண்டு.**

இதுவுமது.

(பரி.) இ-ள். கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்று-தண்வளிபோழ வந்த கண்ணின்பசப்புத் துன்பமுற்றது,—ஒண்ணுதல் செய்தது கண்டு= தனக்கயலாய ஒண்ணுதல் விளைத்த பசப்பைக்கண்டு. எ-று.

அது கைகளையூக்க அவ்வளவிற்பசந்தது, யான் கைகளையுமூக்கி மெய்

களை நீங்கிச் சிறுகாற்று ஊடறுக்குந் துணையும் பசந்திலனெனத் தன்வன்மையும் அதன்மென்மையுங் கருதி வெள்கிற்றென்பதாம்: ஆகவே, அவளுறுப்புக்கள் ஒன்றினொன்று முற்பட்டு நலனழியும், யாங்கடிதிற் சேறுமென்பது கருத்தாயிற்று. (ம)

விளக்கம்:—"குளிர்ந்த காற்றானது பிரிக்க உடம்புகள் இரண்டின் நடுவில் நுழைந்ததால் வந்த நிறவேறுபாட்டினால் கண்கள் பசப்புத் துன்பமடைந்தது, தனக்கு அயலிலுள்ள ஒளிதங்கிய நெற்றியானது உண்டாக்கிய பசப்பு என்னும் நிறவேறுபாட்டினைப் பார்த்து" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, விரைந்து செல்ல எண்ணிய தலைமகன் தான் புணர்ந்து இருந்தகாலத்து உண்டாகிய ஒவ்வொருசெயலினையும் நினைந்து, "அவளாது உறுப்புக்கள் ஒன்றுக்கொன்று முற்பட்டு தம் அழகினை இழக்கும் அன்றோ அது எவ்வாறேனெனில்? மேற்கூறிய வண்ணம் ஓர் நாள் நான் அவளை இறுகத் தழுவியிருந்த கைகளைச் சிறிது நெகிழ்த்தியதால் நெற்றியானது நிறவேறுபாட்டினை அடைந்த தன்மையைக்கண்ட கண் 'எனக்கு அயலாக உள்ள நெற்றியானது இறுகிய கைகள் சிறிது நெகிழ்ந்ததாலேயே பசந்தது. யானோ கைகளையும் நெகிழ்த்தி ஒன்றோடு ஒன்று சேர்ந்திருந்த உடம்புகளும் நீங்கி நடுவே சிறுகாற்று செல்லும் வரையும் பசவாது நிற்கின்றேன்.



அவ்வித மென்மை தங்கிய நெற்றியை நோக்க என் தன்மை வன்மையையாயிற்று' என்று வெட்கத்தை அடைந்ததாலும் பசக்கலாயிற்று. ஆதலால், இவ்வித தன்மையுடையாளுடைய உறுப்புக்களின் தன்மையை நான் நன்கு அறிவேனாதலால், அவை ஒன்றோடு ஒன்று முற்பட்டு அழிவதற்குமுன் யான் கடிதில் செல்லல்வேண்டும்" என்று கூறினனாயிற்று.

---

## 125. அதிகாரம்.

---

## நெஞ்சொடுகிளத்தல்.

(பரி.) அஃதாவது ஆற்றாமை மீதூரத் தனக்கோர் பற்றுக்கோடு காணாத தலைமகள் தன்னெஞ்சொடு செய்திறனறியாது சொல்லுதல். இஃது, உறுப்புக்கள் தங்கலனழிந்தவழி நிகழ்வதாகலின், உறுப்புநலனழிதலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, பிரிவினது ஆற்றாமையானது அதிகரித்தலும் தனக்கு ஒரு பற்றுக்கோடும் காணாத தலைமகள் தன் நெஞ்சுடன் செய்யவேண்டுவதை அறியாது சொல்லிக் கொள்ளுதல். இவ்வித தன்மை உறுப்புக்களானவை தம் நலத்தினை இழந்தகாலத்து உண்டாவது ஒன்றுதலின், உறுப்புநலனழிதல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு இது வைக்கப்பட்டு உள்ளது.

1241. நினைத்தொன் று சொல்லாயோ நெஞ்சே யெனைத்
மெவ்வநோய் தீர்க்கு மருந்து. [தொன்று

தன்னுற்றமை தீநந்திறனுடியது.

(பரி.) இ-ள். நெஞ்சே=நெஞ்சே!—எவ்வநோய் தீர்க்கும் மருந்து ஒன்று=இவ்வெவ்வநோயினைத் தீர்க்குமருந்தாவதொன்றனை,—எனைத்து ஒன்றும் நினைத்துச் சொல்லாய்=யானறியுமாற்றலிலன், எத்தன்மையதியாதொன்றாயினும் நீயறிந்தெனக்குச் சொல். எ-று.

எவ்வம் ஒன்றானுந் தீராமை. உயிரினுஞ் சிறந்த நாணினை விட்டுச் செய்வதியாதொன்றாயினு மென்பாள், 'எனைத்தொன்றும்' என்றாள். (க)

விளக்கம்:—"நெஞ்சே! இக்குற்றந் தங்கிய நோயினைத் தீர்க்கும் மருந்து யாதொன்றினையும் யான் தெரிந்துகொள்ளும் வல்லமை யில்லாதவளாய் இருக்கின்றேன். ஆகையின், அவ்வித தன்மையுடைய மருந்து

ஒன்று எதுவாயினும் நீ அறிந்து எனக்குச் சொல்வாயாக!" என்று தனக்கு உள்ள பிரிவின் ஆற்றாமையானது தீர்கின்ற திறம் ஒன்றினை நாடிய தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவியானவள் தன் நெஞ்சைக் கூவி "ஓ நெஞ்சே! இப்பிரிவு ஆற்றாமையாகிய ஒன்றினும் தீராத நோயினைத் தீர்க்கும் ஒரு மருந்தினை யான் தெரிந்துகொள்ளும் வல்லமை யுடையவளாக இல்லாததால் உயிரினும் சிறந்த நாணினைவிட்டேனும் செய்யும் செயல் உடையதாக ஒன்று இருந்து இந்நோயைத் தீர்க்குமாயின், அதை நீ அறிந்து எனக்குச் சொல்லல் வேண்டும்" என்று கூறியதாயிற்று.

1242. காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

தலைமகனைக் காண்டற்கண் வேட்கைமிகுதியாற் சொல்லியது.

(பரி.) இ-ள். என் நெஞ்சு வாழி=என்னெஞ்சே! வாழ்வாயாக,—அவர் காதல் இலராக நீ நோவது=அவர் நங்கட்காதலிலராகவும் நீயவர்வரவு நோக்கி வருந்துதற்கேது—பேதைமை=நின்பேதைமையே,பிறிதில்லை.எ-று.

நம்மை நினையாமையின் நங்கட்காதலிலரென்பதறியலாம், அஃதறியாமை மேலும் அவர்பாற்செல்லக் கருதாது அவர்வரவு பார்த்து வருந்தாநின்றாய், இது நீ செய்துகொள்கின்றதென்னுங் கருத்தாற் 'பேதைமை என்றாள். வாழி—இகழ்ச்சிக்குறிப்பு. யாமவர்பாற்சேறலே அறிவாவதென்பதாம். (உ)

விளக்கம்:—"என் நெஞ்சே! நீ வாழ்வாயாக! அவர் நம்மிடத்துக் காதல் இல்லாதவராக இருக்கவும் நீ அவரது வரவினை நோக்கி வருந்துதற்குக் காரணம் உன்னுடைய பேதைமையே அல்லாமல் வேறு இல்லை" என்று தலைமகனைப் பார்ப்பதற்கு உள்ள விருப்பமிகுதியால் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது அதாவது, தலைவியானவள் தன் நெஞ்சைப்பார்த்துச் சொல்லுவாள் போன்று "நம்மைப் பிரிந்துசென்ற காதலர் நம்மை நினையாமையினால் நம்மிடத்து அவர்க்கு அன்பு இல்லை என்பதை நீ அறிதல் வேண்டும். அவ்விதம் அறிய வேண்டுவதை அறியாது நின்றதோடு மில்லாமல் அதன்மேலும் அவரிடத்துச் செல்லக்

கருதாது அவர் தாமே வருவரென்று அவர் வரவுபார்த்து வருந்துகின்ருய். இவ்வித செயலானது பேதைமையுடையது ஒன்றே ஆகும். இப்பேதைமையுடைய நீ வாழ்ந்திருப்பாய்" என்று இகழ்ச்சியாகக்



கூறியதால் நாம் அவரிடத்துச் செல்லுதலே அறிவுடைமையாகும் என்றும் கூறியதாயிற்று.

1243. இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார் கணில்.

இதுவுமது.

(பரி.) இ-ன். நெஞ்சே இருந்து உள்ளிப் பரிதல் என்=நெஞ்சே, அவர்பாற்செல்வதுஞ்செய்யாது சண்டிறந்துபடுவதுஞ் செய்யாதிருந்து அவர் வரவு நினைந்து நீ வருந்துகின்றதென்னை!—பைதல் நோய் செய்தார்கண் பரிந்து உள்ளல் இல்=இப்பையுணோய் செய்தார்மாட்டு நமக்கிரங்கிவரக் கருதுதல் உண்டாகாது. எ-று.

நம்மாட்டருளுடையரன்மையிற் ருமாக வாரார், நாஞ்சேறலே இனித் தருவதென்பதாம். (௩)

விளக்கம்:—"நெஞ்சே! நீ அவரிடந்துப் போவதுஞ் செய்யாமல் இவ்விடத்தில் இறந்து போவதையும் செய்யாமல் அவர் வரவு ஒன்றனையே நினைந்து நீ வருந்துகின்றது எதற்கு? இத் துன்பமிகுந்த நோயினைச் செய்தவரிடத்து நமக்காகப் பரிந்து வரும் எண்ணம் உண்டாவது இல்லை" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "நெஞ்சே! நம்மிடத்து அவர் அன்பில்லாதவராக இருக்கவும் அவர் தாமாகவே நம்மை எண்ணி வருவது கூடாததாகும், நீ அவரிடத்துச் செல்லாதும் இவ்விடத்து இறந்துபடாதும் நினைந்து வருந்துவதில் பயனில்லை. அவரைக் காணவேண்டுமாயின் நாம் அவரிடத்துச் செல்லுதலே இனித் தகுதியுடையதாகும்" என்று கூறியதாயிற்று.

1244. கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்
இன்னு மவர்க்காண லுற்று. [னைத்

இதுவுமது.

(பரி.) இ-ன். நெஞ்சே கண்ணும் கொளச் சேறி=நெஞ்சே, நீயவர் பாற் சேறலுற்றாயாயின் இக்கண்களையும் உடன்கொண்டு செல்வாயாக;— இவை அவர்க் காணல் உற்று என்னைத் தின்னும்=அன்றி நீயே சேறியாயின், இவை தாம் காட்சிவிதுப்பினால் அவரைக் காண்டல்வேண்டி நீகாட்டென்று என்னைத் தின்பனபோன்று கலியாநிற்கும். எ-று.

கொண்டென்பது கொளவெனத் திரிந்துநின்றது. தின்னுமென்பது



இலக்கணைக்குறிப்பு. அக்கவிவு தீர்க்கவேண்டுமென்பதாம்: என்றது தான் சேறல் குறித்து. (சு)

விளக்கம்:—“நெஞ்சே! நீ அவரிடத்துச் செல்லுவாயாயின் இக்கண்களையும் உன்னுடன் கொண்டு செல்லுதல் வேண்டும். அவ்விதமல்லாது நீயே செல்லுவாயாயின் இக்கண்கள் அவரைத் தாம் பார்க்கவேண்டிய விருப்பத்தினால் நீ காட்டென்று என்னைத் தின்று விடுவனபோன்று துன்பஞ் செய்யும்” என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவியானவள் தான் தலைவனைப் பார்க்கவேண்டிய விருப்பத்தினை அறிவியாளாய்த் தன் நெஞ்சினை நோக்கி, “நீ பிரிந்துசென்ற தலைவனிடத்துப் போக விரும்புவாயாயின் இக்கண்களையும் உன்னுடன் அழைத்துச் செல்லுதல் வேண்டும். அவ்விதமல்லாது நீயே தனித்துச் செல்வாயாயின் நீ சென்ற பிறகு தாம் பார்க்கவேண்டிய விருப்பினால் என்னை மென்று தின்று விடுவது போல் எனக்குத் துன்பத்தை உண்டாக்கும். அவ்விதத் துன்பத்தினை நீ எனக்குத் தீர்த்தல் வேண்டும்” என்று தான் தலைவனிடத்திற் செல்ல வேண்டும் என்று குறித்ததாயிற்று

1245. செற்று ரெனக்கை விட லுண்டோ நெஞ்சேயா

முற்று றுஅ தவர்.

இதுவுமது.

(பா.) இ-ள். நெஞ்சே=நெஞ்சே,—யாம் உற்றால உறாதவா=யாம் தம்மையுறத் தாமுறாத நங்காதலரை—செற்றாரெனக கைவிடல உணடோ= வெறுத்தாரென்று கருதிப் புலர்ந்து கைவிட்டிருக்கும் வலி நமக்குண்டோ, இல்லை, எ-று.

உறுதல்=அன்புபடுதல். அவ்வலியின்மையின் அவர்பாற்செல்வதே நமக்குத் தகுவதென்பதாம். (ரு)

விளக்கம்:—"நெஞ்சே! யாம் தம்மிடத்தே அன்பு படுதலை அறிந்திருந்தும் நம்மிடத்து அன்புகொள்ளாத நம்முடைய காதலரை நம்மை வெறுத்தாரென்று எண்ணிக் கோபித்து அவரைக் கைவிட்டு இருக்கும் வல்லமை நமக்கு உளதோ; இல்லை" என்று தலைவி கூறியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நெஞ்சினை நோக்கி தலைவியானவள் "நெஞ்சே! நாம் அன்பு கொண்டாலும் நம்மிடத்து அன்புகொள்ளாத காதலரை நம்மை வெறுத்தாரிடத்து நாம் ஏன் செல்லுதல்வேண்



டும் என்று கோபித்து அவரைக் கைவிட்டிருக்கும் வல்லமை நமக்கு இல்லையாதலால், அவரிடத்து நாம் செல்லுவதே நமக்குத் தகுதியாகும்" என்று கூறியதாயிற்று.

1246. கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திஎன் னெஞ்சு.

தலைமகன் கொடுமைநினைந்து செலவுடன்படாத நெஞ்சினைக் கழறியது.

(பா.) இ-ள். என் நெஞ்சு=என்னெஞ்சே,—கலந்துணர்த்தும் காத

லர்க் கண்டாற் புலந்து உணராய்=யான் நம்மொடு புலந்தால் அப்புலவி யைக் கலவிதன்னானே நீக்கவல்ல காதலரைக் கண்டாற் பொய்யேயாயினும் ஒருகாற் புலந்து பின்னதனை நீக்கமாட்டாய்,—பொய்க் காய்வு காய்தி= அதுவமாட்டாதநீ இப்பொழுது அவர் கொடியரெனப் பொய்க்காய்வு காயா நின்றாய், இனியிதனை யொழிந்து அவர்பாற்செல்லத் துணிவாயாக. எ-று.

கலந்தலாரென்னும் பொருட்டாய கலாகமென்பது திரிந்து நின்றது. அதனுணர்கலாவது கலவியின்பத்தைக் காட்டி அதனான் மயக்கிப் புலவிகருதிப்பயினை யொழித்தல். பொய்க்காய்வு=நிலையில் வெறுப்பு. கண்டால் மாட்டாத நீ காணுதவழி வெறுக்கின்றதனாற் பயனில்லையென்பதாம். (௬)

விளக்கம்:—“என் நெஞ்சே! யான் அவரோடு கோபிக்கின் அக்கோபத்தைக் கலவியினால் நீக்கவல்ல காதலரைக் காணாயாயின் பொய்யாகவேனும் ஒரு முறை கோபித்துப் பின்னர் கோபத்தினின்றும் நீங்க மாட்டாய். அவ்வளவு தகுதியுமில்லாத நீ இப்பொழுது அவர்கொடியவ ரென்று பொய்யாகக் கோபிக்கின்றாய். இனி இவ்வித பொய்க் கோபத்தை யொழித்து அவர் உள்ள இடத்துக்குப் போகத் துணி வாயாக!” என்று தலைமகனது கொடுமையை எண்ணி அவனிடத்துச் செல்ல உடன்படாத நெஞ்சினைப் பார்த்துத் தலைவி கூறியதாக இத்திருக் குறள் கூறுகின்றது. அதாவது, “ஓ நெஞ்சே! காதலரைக் கண்ட விடத்து அவரை வெறுத்துச் சிறு பொழுதேனும் நிற்க முடியாத நீ அவரைக் காணாத பிரிவின்கண் வெறுப்பதால் பயனில்லை. ஆதலால், நிலையில்லாத வெறுப்பினைக் கொண்ட நீ அவர் உள்ள இடத்துச் செல்லுதல்லே தகுதி” என்று கூறியதாயிற்று.



1247. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.

(பரி.) இ-ள். நன்னெஞ்சே=நல்லநெஞ்சே !—ஒன்று காமம் விடு= ஒன்றின் நாண்விடமாட்டாயாயிற் காமவேட்கையை விடு;—(ஒன்று) நாண் விடு=ஒன்றின் அது விடமாட்டாயாயின் நாணினை விடு,—இவ்விரண்டு யானோ பொறேன்=அன்றியே இரண்டும் விடாமை நின்கருத்தாயின், ஒன்றற்கொன்று மறுதலையாய இவ்விரண்டனையும் உடன்றாங்குமதுகை யானிலன்.

யானோவென்னும் பிரிநிலை நீ பொறுப்பினு மென்பதுபட நின்றது. நன்னெஞ்சேயென்றது, இரண்டையும் விடாது பெண்மையை நிலைபெறுத்தலின், நல்லையென்னுங் குறிப்பிற்று. அது நன்றேயெனினும் என்னுயிருண்டாதல் சாலாமையின், அதற்காகின்றிலேனென்பதாம். முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. (௭)

விளக்கம்:—"என் நல்ல நெஞ்சே! நாணம், காமம் என்கின்ற இரண்டனுள் நான் ஒன்றை விடுவதற்கு உன்னால் கூடாதாயின் காம விருப்பத்தை விட்டுவிடு. அக்காம இன்பம் ஒன்றினை விடுவதற்கு உன்னால் கூடாதாயின் நாணத்தை விட்டுவிடு. அவ்விதமல்லாது இரண்டையும் கொண்டு நிற்பது உன் கருத்தாயின் ஒன்றினுக்கு ஒன்று மாறுபாடாகிய நாண், காமம் என்னும் இவ்விரண்டனையும் ஒருகாலைத்துத் தாங்கும் வலிமையற்றவளாக யான் இருக்கின்றேன்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவனிடத்துச செல்ல எண்ணியவளாகிய தலைவி அவ்வாறு செல்வதற்கு நாணம் அவளைத் தடுத்தலால் போதற்கு இல்லாதவளாய்த் தன் நெஞ்சினை நோக்கி "நாணம், காமம் என்னும் இரண்டனுள் ஒன்று கொண்டு என் பெண்டன்மையை நீ நிலைநிறுத்துவது மிக்கதோர் நன்மையேயாயினும், என் உயிரோ அவ்விரண்டையும் ஒரே காலத்துப் பொறுத்து வாழும் வலியற்று நிற்பதால் யான் இரண்டையும் பொறுக்கும் உனது நன்மைத்

தன்மையைத் தாங்கமுடியாதவளாக இருக்கின்றேன்'' என்று கூறிய தாயிற்று.



1248. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.

இதுவுமது.

(ப.) இ-ள். என் நெஞ்சு=என்னெஞ்சே!—அவர் பரிந்து நல்காரென்று=அவர் இவ்வாற்றாமையையறியாமையின் ஈரா்துவந்து தலையளி செய்யாராயினரென்று கருதி,—பிரிந்தவர்பின் ஏங்கிச் செல்வாய் பேதை=அஃதறிவித்தற் பொருட்டு நம்மைப் பிரிந்துபோயவர்பின் ஏங்கிச்செலலுற்ற நீ யாதுமறியாய். எ-று.

ஆற்றாமைகண்டுவைத்தும் நல்காது போயினரைக் காணாதவழிச் சென்றறிவித்த துணையானே நல்கவருவரென்பது கருதினமையிற் 'பேதை' என்றாள். (அ)

விளக்கம்:—"என் நெஞ்சே! அவர் நாம் படும் இவ்வாற்றாமையை அறியாமையினால் நமக்காக வருந்தி வந்து அன்பினைச் செய்யவில்லை யென்று எண்ணி அதனை அறிவித்தற் பொருட்டு நம்மைப் பிரிந்து போனவர் பின் ஏங்கிச் செல்ல ஆரம்பித்த நீ யாதும் அறியாய்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பிரிந்துபோகின்ற காலத்து, நாம்படும் ஆற்றாமையால் வரும் துன்பத்தைப் பார்த்து இருந்தும் நம்மிடத்து அன்பு செலுத்தி நம்மோடு இராது பிரிந்து போய் தூரத்தில் வசிக்கின்ற அவர்க்கு நம் பிரிவாற்றாமையைப் பார்ப்பதற்கு நாம் போய் அறிவித்தவளவே நமக்கு இன்பத்தைத் தர நம்மிடத்து வருவரென்று ஏங்கிச் செல்கின்றாய். உன்னினும் பேதைமையுடையவர் யார்?" என்று தன் நாண் தடுத்தலால் தான் போகாதிருக்கும் தகுதியைக் கூறியதாயிற்று.

1249. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ

யாருழைச் சேறியென் னெஞ்சு.

இதுவுமது.

(பரி.) இ-ள். என் நெஞ்சு = என்னெஞ்சே, — காதலவர் உள்ளத்தாராக = காதலர் நின்னகத்தாராக, — நீ உள்ளி யாருழைச் சேறி = முன்பெல்லாங் கண்டுவைத்து இப்பொழுது நீ புறத்துத் தேடிச் செல்கின்றது யாரிடத்து!

உள்ளமென்புழி அம் முப் பகுதிப்பொருள்விகுதி. நின்னகத்திருக்கின்றவரை அஃதறியாது புறத்துத்தேடிச் சேறல் நகையுடைத்து, அதனை யொழியென்பதாம். (க)





விளக்கம்:—"என் நெஞ்சே! காதலர் உனக்கு உள்ளேயே இருக்கவும் அவரை முன்பெல்லாம் உன்னகத்தே பார்த்திருந்தும் இப்பொழுது நீ வெளியே சென்று யாரைத் தேடுவது?" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நாண் தடுத்தலால் தலைவனிடத்துச் செல்வதற்கு முடியாத தலைவியானவள் தன் நெஞ்சை நோக்கி "நம் காதலர் உன் உள்ளேயே எக்காலத்தும் இருப்பதை முன்பெல்லாம் நீ பார்த்து உள்ளனை. அவ்விதமே அவர் பிரிந்து சென்ற இப்பொழுதும் உன்னுள்ளேயே பார்த்திராது நீ வெளியே சென்று அவரைப் பார்க்க எண்ணுகின்றாய். அவர் உள்ளிருக்கவும் நீ யாரைத் தேடி வெளியே செல்லுகின்றாய்" என்று மேல் திருக்குறளில் தன் நெஞ்சைப் பேதையென்று அழைத்தவள் இத்திருக்குறளில் "இவ்வித பேதைமைத் தன்மையை நீ செய்வது நகைத்தற்கிடமாய் விடும். இனி அவ்விதம் செய்யாது ஒழிவாய் நெஞ்சே!" என்று கூறியதாயிற்று.

**1250. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின்.**

அவரை மறந்தாற்றல்வேண்டுமென்பதுபடச் சொல்லியது.

(பரி.) இ-ள். துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா = நம்மைக் கூடாவண்ணந் துறந்துபோயினாரை நாம் நம்மகத்துடையேமாக,—இன்னும்

கவின் இழத்தும்=முன்னிழந்த புறக்கவினையன்றி நின்ற அகக்கவினுமிழப் பேம். எ-று.

"குன்றி—னெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல்"* என்புழிப் போல நெஞ்சென்பது ஈண்டும் அசைப்பொருட்டாய் நின்றது. அவர் நம்மைத் துன்னுமற் றுறந்தாராகவும், நாமவரை மறத்தன்மாட்டேமாகவும், போன மெய்க்கவினையன்றி நின்றநிறையு மிழப்பேமென்பதாம். (ம)

விளக்கம்: —"நம்மைக் கூடாதவிதமாக நம்மை விட்டுப் பிரிந்து போயினவரை நாம் நம்முடைய மனத்தினிடத்தே எண்ணிக்கொண்டே இருப்போமாயின், முன்னமே இழந்த மேனியின் அழகாகிய வெளியழகை யிழந்தது மாத்திரமல்லாமல் எக்காலத்தும் நிலை பெற்றுள்ள உள்ளிடத்தே யிருக்கும் அழகினையும் இழந்து விடுவோம்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "நம்மைப் பிரிந்து போயினவரை மேலும் மேலும் நினைப்போமாயின், இப்போதே

*குறுந்தொகை, கடவுள் வாழ்த்து.



தேகத்திலுள்ள அழகினையெல்லாம் இழந்ததுடன் உள்ளுக்குள் மறைந்து அழகு செய்து வந்திருக்கும் நிறையினையும் இழக்க நேரும். இவ்விதம் நிறையழியாது இருக்கவேண்டுமாயின் பிரிந்த தலைவரை மறந்து இருத்தல் வேண்டும்" என்று கூறியதாயிற்று.

## 126. அதிகாரம்.

## நிறையழிதல்.

(பரி.) அஃதாவது தலைமகள் மனத்தடக்கற்பாலனவற்றை வேட்கை மிகுதியான் அடக்கமாட்டாது வாய்விடுதல்: "நிறையெனப்படுவது மறை

பிறழ்யாமை"† என்றார்பிறரும். அஃதழிதற்காரணம் நெஞ்சொடுகிளத்தலாமை யின், இது நெஞ்சொடுகிளத்தலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது, தலைமகள் மனத்தில் அடக்கவேண்டு வனவற்றைக் காதலன்மீது உள்ள விருப்ப மிகுதியால் அடக்கமுடியா மல் வாய்விட்டுச் சொல்லுதல். இவ்விதம் பிறர் அறியாது அடக்கிவைக்கும் நிறையாகிய மறையினைத் தன் நெஞ்சொடு ஆற்றாமையால் சொல்லிக் கொண்டமையால் நிறையழிந்து நின்றாளாயினாள். ஆகலால், இந்நிறை யழிதல் நெஞ்சொடுகிளத்தல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வைக் கப்பட்டு உள்ளது.

1251. காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

நாணுநிறையுமழியாமை நீயாற்றல்வேண்டுமென்ற
தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(பரி.) இ-ள். நாணுத் தாழ் வீழ்த்த நிறையென்னுங் கதவு=நாணாகிய தாழினைக்கோத்த நிறையென்னுங் கதவினை,—காமக் கணிச்சி உடைக்கும்= காமவேட்கையாகிய கணிச்சி முறியாநின்றது, இனி அவை நிற்றலுமில்லை, யானாற்றலுமில்லை. எ-று.

கணிச்சி=கூந்தாலி. நாணுள்ள துணையும் நிறையழியாதாகலின் அதனைத் தாழாக்கியும், அகத்துக்கிடந்தன பிறர்கொள்ளாமற் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், வலியவாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டனையும் ஒருங்கு நீக்க லிற் றன்காமவேட்கையைக் கணிச்சியாக்கியுங் கூறினார். (க)

† கலி, நெய்தல், 16.



விளக்கம் :—"நாண் என்னும் தாழினைக் கோத்து உள்ள நிறை யென்று சொல்லும் கதவினைக் காம விருப்பமென்னும் கோடரி முறிக்

கின்றது. இனி அந்நாணும் நிறையும் அழியாமல் நிற்பதுமில்லை, யான் பொறுத்து இருப்பதும் இல்லையாகும்'' என்று நாணமும், நிறையும் அழியாது இருத்தல் வேண்டி நீ பொறுத்தல் வேண்டும் என்ற தோழியை நோக்கித் தலைமகள் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைமகளானவள் "தோழியே! நாண் என்கின்ற தாழினையும் நிறையென்கிற கதவினையும் ஆகிய இரண்டினையும் ஒரு காலத்திலேயே காம விருப்பமென்னும் கோடரியானது வெட்டிச் சாய்க்குமாயின், மனத்து மறைந்து கிடைந்தனவற்றைப் பிறர் கொள்ளாத விதமாக நின்ற நிறையாகிய கதவும் அக்கதவினைத் திறவாத விதமாக இட்டதாழும் எவ்விதம் நிற்கும் அவ்விரண்டும் நிற்பதற்குமில்லை, யான் பொறுத்து இருத்தற்குமில்லை'' என்று கூறினளாயிற்று.

**1252. காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்**
**யாமத்து மாளுந் தொழில். [சத்தை**

நெஞ்சின்கட்டோன்றிய காமம் நெஞ்சாலடக்கப்படு
மென்றபடுச் சொல்லியது

(பரி.) இ-ள். யாமத்தும் என் நெஞ்சத்தைத் தொழில் ஆளும்=எல்லாருந் தொழிலொழியு மிடையாமத்தும் என்னெஞ்சத்தையொறுத்துத் தொழில் கொள்ளாநின்றது,—காமமென ஒன்று கண் இன்று=ஆகலாற் காமமென்று சொல்லப்பட்ட வொன்று கண்ணோட்ட மின்றாயிருந்தது. எ-று.

ஓ வென்பது இரக்கக்குறிப்பு. தொழிலின் கண்ணேயாடல்=தலைமகன் பாற் செலவிடுத்தல். தாயைப்பணிகோடல் உலகியலன்மையிற் 'காமமெனவொன்று' என்றும், அது தன்னைக் கொள்கின்றது அவளறியாது கோடலிற் 'கண்ணின்று' என்றுங் கூறினள். அடக்கப்படாமை கூறியவாறு. (உ)

விளக்கம் :—"உலகத்து எல்லாரும் தாம் செய்யும் தொழிலை விட்டு நிற்கும் நடுச்சாமத்தும் என்னுடைய நெஞ்சத்தைத் துன்புறுத்தித் தொழில் கொள்ளுகின்றது. ஆதலால் இவ்வித காமமென்று சொல்

லப்பட்ட ஒன்று கண்ணோட்ட மற்றதாய் இருந்தது" என்று நெஞ்சினிடத்தே தோன்றிய காமத்தை நெஞ்சாலேயே அடக்குதல் கூடும் என்ற தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது அதாவது, தலைவியானவள் "யான் என் செய்வேன்?



என்னிடத்துத் தோன்றும் காமமானது எல்லோரும் உறங்கும் நடுச்சாமத்தும் தலைமகனிடத்தே செல்லும்படி என் நெஞ்சத்தைத் தான் புறத்தி ஏவல் கொள்ளுகின்றது. இவ்விதம் தாயைப் பணி கொள்ளுதல் உலகத்து இயற்கையாக இல்லாதிருந்தும் என்னிடத்துத் தோன்றிய காமமென்னும்ஒன்று என்னை அளவறியாது பணிகொள்ளுகின்ற கண்ணோட்டமற்று உள்ளது. இவ்விதம் கண்ணோட்டமற்று நிற்கின்ற காமத்தை எவ்விதம் அடக்குவது? அடங்க முடியாதாகும்" என்று கூறியதாயிற்று.

1253. மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும்.

மகளிர் காமம் மறைக்கப்படுமென்றடதற் சொல்லியது.

(பரி.) இ-ள். காமத்தை யான் மறைப்பேன் = இக்காமத்தை யானென்னுள்ளே மறைக்கக்கருதுவேன்; = குறிப்பு இன்றித் தும்மல்போல் தோன்றி விடும் = அதனாலென், இஃதென்கருத்தின் வாராது தும்மல்போல வெளிப்பட்டே விடாநின்றது. எ-று.

மன்—ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம்—இரங்கற்கண் வந்தது. தும்மலடங்காதாற்போல அடங்குகின்றதில்லை யென்பதாம். (௩)

**விளக்கம்.**—"இந்தக் காமத்தை எனக்குள்ளேயே யான் மறைக்க எண்ணுவேன், அவ்விதம் எண்ணுவதால் இக்காமமானது மறைக்க எண்ணிய என் எண்ணத்தின் வழியில்லாது, அடக்க முயன்றாலும் அடங்காது வெளிவருகின்ற தும்மலைப்போல வெளிப்பட்டே விடுகின்றது" என்று பெண்களது காமம் மறையாவண்ணம் மறைத்தல் கூடும் என்று

கூறிய தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவியானவள் "தோழியே! நீ சொல்லுகின்றபடி என்னிடத்தே தோன்றும் காமத்தை. என்னுள்ளேயே இருக்கும் வண்ணம் மறைக்கும்படி யான் எண்ணுவேன். அவ்விதம் யான் எண்ணுவதால் இக்காமமானது என் எண்ணத்தின்படி நில்லாது அடக்க முயன்றாலும் அடங்காத தும்மல்போல் பிறரறிய வெளிப்பட்டு விடுகின்றது" என்று கூறியதாயிற்று.

1254. நிறையுடையே னென்பேன்மன் யானோவென்
மறையிறந்து மன்று படும். [காம

இதுவுமது.

(பரி.) இ-ள். யான் நிறையுடையேன் என்பேன் = இன்றினாங்கெல்



லாம் யானென்னை நிறையுடையேனென்று கருதியிருந்தேன்,—என் காமம் மறை இறந்து மன்று படும் = அதனுலென், இன்றென்காமம் மறைத்தலைக் கடந்து மன்றின்கண் வெளிப்படாநின்றது. எ-று.

மன்னும் ஓவும் மேலவற்றின்கண் வந்தன. மன்றுபடுதல் = பலருமறிதல். இனி என்வரைத்தன்றென்பதாம். (௪)

விளக்கம்:—"இன்றைய பொழுதெல்லாம் யான் என்னை மறை பிறரறியாமல் மறைந்து வைக்கும் நிறையுடையாள் என்று எண்ணியிருந்தேன் அவ்விதம் எண்ணி இருந்ததால் இன்று என்னிடத்தே தோன்றிய காமமானது யான் மறைத்தலைக் கடந்து பலரும் அறியும்படி வெளிப்பட்டுவிட்டது. ஆகலால் இனி இக்காமமானது எனக்கு உட்பட்டதன்று" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தோழியே! இன்றெல்லாம் யான் என்னை மறைவாகிய விஷ

யங்களை மறைக்கக்கூடிய தகுதியுடையவள் என்று எண்ணியிருந்தேன். அவ்வித எண்ணத்தை யான் கொண்டு இருக்கவும் என் காமமானது என்வழி நில்லாது யாவரும் அறியும்படி வெளிப்படுத்தி விட்டதால், இனி என்னால் இக்காமம் மறைக்கப்படுவது ஒன்று அன்று" என்று கூறியதாயிற்று.

1255. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று.

நம்மைமறந்தாரை நாமுமறக்கற்பால மென்றாட்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை=தம்மை யகன்று சென்றார் பின்செல்லாது தாமும் அகன்றுநிற்கு நிறையுடைமை— காமநோய் உற்றார் அறிவது ஒன்று அன்று=காமநோயினையுறாதார் அறிவ தொன்றன்றி உற்றார் அறிவதொன்றன்று. எ-று.

இன்பத்தொடு கழியுங்காலத்தைத் துன்பத்தொடு கழியுமாறு செய்த லிற் 'செற்றார்' என்றாள். பின்சேறல்=மனத்தால் இடைவிடாது நினைத் தல். பெருந்தகைமை—பண்டாகுபெயர். காமநோயுறாதார்=மானமுடையார், நன்றெனவுணரார்மாட்டுஞ்சென்றேயிற்கும், யானறிவதொன்றன்றென்பதாம்.

விளக்கம்:—"தம்மை விட்டு நீங்கினார் பின்னே செல்லாமல் தாமும் அவரைவிட்டு நிற்கும் நிறையுடைமை காம நோயினை அடையா தார் அறிவது ஒன்று அல்லாமல் காம நோயினை அடைந்தார் அறிவது ஒன்று ஆகாது" என்று நம்மை மறந்தாரை நாமும் மறத்தல் வேண்டும்



என்ற தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின் றது. அதாவது, தலைவியானவள் "தோழியே! தம்மைவிட்டு நீங்கியவரை மனத்தால் இடைவிடாது நினையாது நிற்கும் நிறையென்னும் மறை யுடைமை காமநோயினைப் பெறாத மான முடையார்க்கு ஆகுமேயன்றி மானத்தை இழக்கும் காமநோயினைப் பெற்றவளாகிய என்னால் உடன்

நின்று இன்பத்தோடு கழிகின்ற காலத்தைப் பிரிந்து துன்பத்தோடு கழியும்விதம் செய்யும் பகைவராயினும் அவ்விதம் பகைவராகிய தலைவரிடத்து என்மனம் இடைவிடாது செல்லாதிருக்கச் செய்வதற்கு இல்லை ஆகலால் அவரை யான் மறப்பது கூடாததாகும்'' என்று கூறியதாயிற்று.

1256. செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர்.

இதுவுமது.

(பரி.) இ-ள். செற்றவர்பின் சேறல் வேண்டி = என்னையகன்று சென்றார் பின்னே யான் சேறலைவேண்டுதலான்,— என்னை உற்றதுயர் எற்று அளித்து = என்னை யுற்றதுயர் எத்தன்மையது! சாலநன்று. எ-று.

செற்றவரென்றது ஈண்டும் அப்பொருட்டு. வேண்டவென்பது வேண்டியெனத் திரிந்துநின்றது. அளித்தென்பது இகழ்ச்சிக்குறிப்பு. இக்காமநோய் யான் சொல்லவுங் கேட்கவுமாவதொன்றன்று, சாலக்கொடிதென்பதாம் (௬)

விளக்கம்: —''என்னை விட்டு நீங்கிச் சென்றவர் பிறகு யான் போக விரும்புதலால் என்னை அடைந்த துக்கமானது எவ்வித தகுதியுடையது. மிகுதியும் நன்மையுடையதாகும்'' என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ''நம்மை மறந்தாரை நாமும் மறப்போம் என்று யான் எண்ணினும் என்னைத் துன்பத்தோடு இருக்க விட்டு நீங்கிய தலைவர் பின்னே என்னைப் போக விரும்புதலால் என்னையுற்ற காமநோயானது எவ்வித அருளுடையதாய் இருத்தல் வேண்டும்? இவ்விதம் என்வழி நில்லாத காமநோய் யான் சொல்லவும் யான் சொல்லுவதொன்றனை அது கேட்கவும் ஆவது ஒன்று அன்று. ஆகலால் இக்காம நோய் மிகக் கொடியதாகும்'' என்று கூறியதாயிற்று.

1257. நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின்.

பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவாற் கூடிய தலைமகள் புலவாமைக்குக் காரணம் யாதென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ-ள். பேணியார் காமத்தாற் பெட்ப செயின் = நம்மால் விரும்பப்பட்டவர்வந்து காமத்தால் நாம் விரும்பியவற்றைச் செய்யுமளவின்,— நாண் என ஒன்றோ அறியலம் = நாணென்றொன்றையும் அறியமாட்டேமாயிருந்தேம். எ-று.

பேணியாரெனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது விரும்பியன = வேட்கைமிகவினாற் கருதியிருந்த கலவிகள். நாண் = பரத்தையர் தோய்ந்த மார்பைத் தோய்தற்கு நாணுதல். ஒன்றெனபது ஈண்டுச் சிறிதென்னும் பொருட்டு. இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. நிறையழிவான் அறியாது கூடியதன் குற்றநோக்கி, அவனையுமுளப்படுத்தாள். (எ)

விளக்கம்:—"நம்மால் விரும்பப்பட்ட தலைவர் நம்மிடத்தே வந்து நாம் விரும்பியவற்றையெல்லாம் செய்யும் அளவிலே நாண் என்பது ஒன்றையும் அறியக் கூடாதவராக இருந்தோம்" என்று பரத்தையோடு கூடியிருந்து பிரிந்து வந்த தலைமகனோடு தன் நிறையழிவினால் புணர்ந்த தலைமகளை நோக்கித் தோழியானவள் உன்னைப் பிரிந்து சென்று பரத்தையோடு இருந்துவந்த தலைமகனிடத்து நீ கோபியாதிருப்பதற்குக் காரணம் யாது என்னவும், தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவியானவள் "தோழியே! நம்மால் விரும்பப்பட்ட தலைவர் நம்மிடத்தே வந்து நாம் ஆசை மிகுதியால் விரும்பியிருந்த கலவிச்செயல்களை எல்லாம் செய்கின்ற காலத்து பரத்தையர் தோய்ந்த மார்பை நாம் தோய்தல் கூடாது என்று கொள்ளும் நாணத்தை அறிவதற்கு இல்லாமல் போயிற்று. ஆதலால், அவரிடத்துக் கோபியாது கூடியது நிறையழிவு என்னும் குற்றமேயாகும்" என்று கூறியதாயிற்று.

1258. பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

இதுவுமது.

(பரி.) இ-ள். நம்பெண்மை உடைக்கும் படை = நம்நிறையாகியவரணை யழிக்குந் தானை—பன்மாயக் கள்வன் பணிமொழியன்றோ = பல பொய்களை



வல்ல கள்வனுடைய தாழ்ந்தசொற்களன்றோ! ஆனபின் அது நிற்குமா றென்னை! எ-று.

பெண்மை ஈண்டுத் தலைமைபற்றி நிறைமேனின்றது. வந்தாற் புலக்கக் கடவேமென்றும், புலந்தால் அவன்சொற்களானுஞ் செயல்களானும் நீங்கே மென்றும் இவை முதலாகவெண்ணிக்கொண்டிருந்தன யாவுங் காணாது கல விக்கட்டன்னினுமுற்படும் வகை வந்துதோன்றினனென்பாள், 'பன்மாயக் கள்வன்' என்றாள். பணிமொழி = நம்மினுந்தானன்புமிகுதியுடையனாகச் சொல்லுஞ்சொற்கள். அவன் அத்தன்மையனாக, சொற்கள் அவையாக, நம நிறையழியாதொழியுமோ வென்பதாம். (அ)

விளக்கம்:—"நம்முடைய நிறையாகிய காவலை யழிக்கும் படை பல பொய்களைப் பேசவல்ல கள்வனாகிய காதலனது பணிவுடைய சொற்களன்றோ! அவ்விதம் ஆனபிறகு நம்நிறை நிற்குமாறு எவ்விதம்?" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, "தோழியே! நீ கூறியபடிக் காதலன் வந்தால் கோபித்துக் கொள்ளலா மென்றும், அவ்விதம் கோபிப்போமாயின் அக்காதலனது சொற்களா லும் செயல்களாலும் அக்கோபத்தினின்றும் நீங்குதலாகாதென்றும் எண்ணியிருந்த எண்ணங்களெல்லாம் ஒன்றும் நில்லாதபடி கலவியினி டத்தே அவன் வருவதற்குமுன் நாம் செல்லும்படிப் பணிவாகிய சொற் கள் பலபேசி நம்மினும் தான் அன்புடையவனாகத் தெரிவித்தானாதலால் நம் நிறை அழியாமல் நிற்குமோ?" என்று கூறியதாயிற்று.

1259. புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு.

இதுவுமது.

(பரி.) இ - ள். புலப்பல் எனச் சென்றேன் = அவர் வந்தபொழுது புலக்கக் கடவேனென்று கருதி முன்னில்லாது பிறிதோரிடத்துப்போயினேன்;— நெஞ்சம் கலத்தலுறுவது கண்டு புல்லினேன் = போயும், என்னெஞ்சம் நிறையினில்லாது அறைபோய் அவரோடு கலத்தற்குடங்குதலையறிந்து, இனி அது வாயாதென்று புல்லினேன். எ - று.

வாயாமை = புலத்தற்கருவியாய நெஞ்சுதானே கலத்தற்கருவியாய் நிற்றலின், அது முடியாமை. (கூ)





விளக்கம் :—“அவர் வந்தபொழுது கோபித்துக் கொள்வோமென்று எண்ணி அவர் முன் நில்லாமல் வேறொரு இடத்தில் சென்றேன். அவ்விதம் வேறோரிடத்துச் சென்றும் என் நெஞ்சம் காவலில் நில்லாமல் என்னோடு யுத்தம் செய்ய வந்ததுபோல் அறைகூவிச் சென்று காதலரோடு கலப்பதற்கு ஆரம்பிப்பதை அறிந்து இனிக் கோபித்து நிற்பது நமக்கு முடியாது என்று எண்ணி அவர் எதிரில் சென்று அவரை அணைந்தேன்” என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது கோபிப்பதற்குக் கருவியாக இருந்த என் நெஞ்சே கலப்பதற்கும் கருவியாகி நிற்குமாயின் யான் எவ்விதம் கோபித்துத் தலைவரைச் சேராதிருப்பது. ஆதலால் அது முடியாத காரியம் என்று கூறியதாயிற்று.

1260. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல்.

இதுவுமது.

(பரி.) இ-ள். நிணம் தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு = நிணத்தைத் தீயின்கண்ணேயிட்டால் அஃதுருகுமாறுபோலத் தங்காதலரைக் கண்டால் நிறையழிந்துருகு நெஞ்சினையுடைய மகளிர்க்கு,—புணர்ந்து ஊடி நிற்பேம் எனல் உண்டோ = அவரைப் புணராமுடிப் பின்பு உணராது அந்நிலையே நிற்கக் கடவேமென்று கருதுதலுண்டாகுமோ, ஆகாது. எ - று.

புணர்தல் ஈண்டு மிக நினுகுதல்; எதிர்ப்படலுமாம். புணர வென்பது புணர்ந்தெனத் திரிந்து நின்றது. யானத்தன்மையேனாகலின் எனக்கஃதில்லை யாயிற்றென்பதாம். (ய)

விளக்கம்:—"நிணமாகியகொழுப்பினைத் தீயினிடத்தே இட்டால் அது எவ்விதம் உருகுமோ அவ்விதம் தம் காதலரைக் கண்டால் நிறை யழிந்து உருகும் நெஞ்சினையுடைய பெண்களுக்கு அக்காதலர் புணரா யாம் கோபித்துப் பின்பு அவர் வணங்கியும் அவர் வழி நில்லாது கோபித்த அந்நிலையிலேயே நிற்கக் கடவோம் என்று எண்ணுதலும் உண் டாகுமோ, ஆகாததாகும்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! காதலரைக் கண்ட காலத்து உருகும் நெஞ்சினையுடைய எனக்கு எவ்விதம் புலந்து அப்புலவி தீராது நிற்பது கூடும், அது முடியா தென்பதாம்.

---



## 127. அதிகாரம்.

---

## அவர்வயின்விதும்பல்.

(பரி.) அஃதாவது சேயிடைப்பிரிவின்கட்டலைமகனும் தலைமகளும் வேட்கை மிகவினன் ஒருவரையொருவர் காண்டற்கு விரைதல். தலைமகன் பிரிவும் தலைமகளாற்றாமையும் அதிகாரப்பட்டுவருகின்றமையின், இருவரை யுஞ்சுட்டிப் பொதுவாகிய பன்மைப்பாலாற் கூறினர். பிறரெல்லாம் இதனைத் தலைமகனை நினைந்து தலைமகள் விதுப்புறலென்றார்: சுட்டுப்பெயர் சொல்லு

வான் குறிப்பொடு கூடிய பொருளுணர்த்துவதல்லது தானென்றற்குப் பெயராகாமையானும், தலைவிகூற்றாய அதிகாரத்துத் தலைமகன் உயர்த்தற்பன்மையாற் கூறப்படாமையானும், அஃதுரையன்மையறிக. இதனுட்டலைமகள் கூற்று நிறையழிவானிகழ்ந்ததாகலின், அவ்வியைபுபற்றி நிறையழிதலின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது பிரிந்து தூரத்திலுள்ள காலத்துத் தலைமகனும் தலைமகளும் விருப்பமிகுதியால் ஒருவரை யொருவர் பார்ப்பதற்கு விரைதல். தலைமகனது பிரிவும் தலைமகளது ஆற்றாமையும் மிகுதிப்பட்டு வருவதால் இருவரையும் சுட்டிய பொதுவாகக் கூறினர். தலைமகளது கூற்று நிறையழிவால் உண்டாயினதாகலால் அச்சம்பந்தம் கருதி நிறையழிதலின் பிறகு இது வைக்கப்பட்டுள்ளது.

1261. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.

தலைமகள் காண்டல் விதுப்பினாற் சொல்லியது.

(பரி:) இ-ள். அவர் சென்ற நாள் ஒற்றி விரல் தேய்ந்த = அவர் நம்மைப் பிரிந்துபோய நாள்களைச் சுவரின்கணிழைத்தவற்றைத்தொட்டு எண்ணுதலான் என்விரல்கடேய்ந்தன, — கண்ணும் வாள் அற்றுப் புற்கென்ற = அதுவேயன்றி அவர்வரும் வழிபார்த்து என்கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின; இவ்வாற்றயும் அவர் வரவுண்டாயிற்றில்லை. எ-று.

நாள் ஆகுபெயர். புல்லியவாதல் = நுண்ணியகாணமாட்டாமை. ஒற்ற வென்பது ஒற்றியெனத் திரிந்துநின்றது. இனி யான்காணுமாறென்னை யென்பதாம். நாளெண்ணலும் வழிபார்த்தலும் ஒருகாற் செய்தொழியாது இடையின்றிச்செய்தலான், விதுப்பாயிற்று. (க)



விளக்கம்:—"காதலர் நம்மைப்பிரிந்து போயின நாள்களெல்லாம்

சுவரின் கண் குறித்து வைத்து அவற்றை ஒவ்வொன்றாகத் தொட்டு எண்ணுதலால் என் விரல்கள் தேய்ந்தனவாயின. அதுவேயுமல்லாமல் அவர் வருகின்ற வழியைப் பார்த்து என்னுடைய கண்களும் ஒளியினை யிழந்து நுட்பமாகிய பொருள்களைக் காணமாட்டாவாயின. இவ்வாறு ஆகியும் காதலர் வரவு இன்னும் உண்டாகவில்லை'' என்று பிரிந்து சென்ற தலைமகனைப் பார்ப்பதற்கு விரும்பிய விரைவின் மிகுதியால் தலைமகள் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைமகளானவள் யான் மண் செய்வேன். ஓர் நாளும் விடாது சென்ற நாள்களை எண்ணுதலும், வருகின்ற வழியைப் பார்த்தலும் ஒரு முறை செய்யாது பல முறை செய்வதால் சுவரைத்தொட்டு எண்ணுகின்ற என் விரல்கள் தேய்ந்தும், வரும் வழியையே பார்த்து நிற்கும் என் கண்கள் நுட்பமாகிய பொருள்களைக் காணுவண்ணம் ஒளியிழந்தும் அவர் வரவு இன்னும் நேரவில்லை. அவ்விதமாயின் இனி காதலரை யான் காணும் விதம் எவ்விதம் ஆகும் என்று கூறியதாயிற்று.

## 1262. இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
## கலங்கழியுங் காரிகை நீத்து.

ஆற்றாமைமிகுதலின் இடையின்றிநினைக்கற்பாலையல்லை சிறிது
மறக்கல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ - ள். இலங்கு இழாய் = விளங்காநின்ற விழையினையுடையாய் — இன்று மறப்பின் = காதலரை இன்று யான் மறப்பேனாயின், — மேல் காரிகை நீத்து என்றோள் கலங் கழியும் = மேலுமகாரிகையென்னை நீப்ப என் றோள்கள் வளை கழல்வனவாம். எ - று.

இலங்கிழாயென்பது இதற்கு நீ யாதும் பரியலையென்னுங் குறிப்பிற்று. இன்று = யானிறந்துபடுகின்றவின்று. மேலும் மறுபிறப்பிலும். எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. நீப்பவென்பது நீத்தெனத் திரிந்துநின்றது. கழியுமென்னும் இடத்துநிகழ் பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. இவ் வெல்லைக்கணினைந்தால் மறுமைக்கண் அவரையெய்தியின்புறலாம், அதனுள்

மறக்கற்பாலேனல்லே னென்பதாம். (௨)

விளக்கம்:—"ஒளிவிட்டு விளங்கும் ஆபரணங்களையுடையவளே! என் காதலை இன்று யான் மறந்து விடுவேனாயின் மேலும் என் அழ



கினையிழந்து என் தோள்களும் வளையல்கள் கழல்வதற்குரிய இளைப்பினையடையும்" என்று ஆற்றாமை மிகுதியால் இடைவிடாது நினைத்தல் வேண்டாம், சிறிது மறத்தல் வேண்டும் என்று கூறிய தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது இவ்விதம் யான் அழகு இழந்து நிற்கவும் நீ அதற்காக யாதும் பரியாது உன் இயற்கை அழகோடு செயற்கை அழகாகிய ஆபரணங்களையும் அணிந்து நிற்கின்றாய். காதலர் என்னைவிட்டுப் பிரிந்தமையால் அழகிழந்து வளை கழன்றயான் இறந்து போகக்கூடிய நிலையிலுள்ள இன்று அவரை நினையாது இருப்பின் மறுபிறப்பிலும் இவ்விதமே பிரிவாற்றுமையால் அழகிழந்து வளையல்கள் கழல ஏதுவாகும். ஆதலால் இவ்விறக்கும் தருவாயில் மறவாது நினைப்பேனாயின் மறுபிறப்பிலேனும் அவரை அடைந்து இன்புறுதல் கூடும். இனி நான் மறப்பதற்கு இல்லை என்று கூறியதாயிற்று.

**1263. உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்**
**வரனசைஇ யின்னு முளேன்.**

இதுவுமது.

(பரி.) இ - ள். உரன் நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார் = இன்ப நுகர்தலை நசசாது வேறலை நசசி நாந்துணையாதலையிகழ்ந்து தம்மூக்கந்துணையாகப் போயினர்,—வரல் நசைஇ இன்னும் உளேன் = அவற்றையிகழ்ந்து மீண்டுவருதலை நச்சுதலான, யானிவ்வெல்லையினு முளேனாயினேன. எ - று.

உரனென்பது ஆகுபெயர். அந்நசையா னுயிர்வாழாநின்றேன். அஃதில்லையாயின் இறந்துபடுவலென்பதாம். (௩)

விளக்கம் :—"இன்பம் அனுபவித்தலை விரும்பாது யுத்தத்தில்

வெல்லும் தொழிலையே விரும்பி நாம் துணையாக இருப்பதையும் இகழ்ந்து தம்முடைய ஊக்கமே தமக்குத் துணையாகப் போயினர், அவ் வெல்லும் தொழிலை இகழ்ந்து ஈண்டு வருவதை விரும்பி உள்ளதாலேயே யான் இவ்வித பிரிவாற்றாமையிலும் பிழைத்து உள்ளேன்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது காதலர் இன்பம் அனுபவித்தலை விரும்பாதும் நாம் துணையாய் இருத்தலை இழந்தும் போர்க்களத்தில் வெல்லும் தொழிலையே விரும்பித் தம் ஊக்கம் துணையாகப் போயினரேனும், அவ்விதம் சென்றவர் திரும்பி என்னிடம் வருதலையே யான் விரும்புதலால் அவ் விருப்ப



மிகுதிகொண்டே இன்னும் உயிர் வாழ்ந்து நிற்கின்றேன். அவ்விதம் அவரை விரும்பேனாயின் இத்துணை நாள் இறந்து இருத்தல் கூடும் என்று கூறியதாயிற்று.

1264. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு.

இதுவுமது.

(பரி.) இ-ள். பிரிந்தார் கூடிய காமம் வரவு உள்ளி = நீங்கியகாமத்தராய் நம்மைப் பிரிந்துபோயவர் மேற்கூடிய காமத்துடனே நங்கண் வருதலை நினைந்து,—என்னெஞ்சு கோடுகொடு ஏறும் = என்னெஞ்சு வருத்தமொழிந்து மேன்மேற் பணைத்தெழாநின்றது. எ-று.

வினைவயிற்பிரிவுழிக் காமமின்பநோக்காமையும் அது முடிந்துழி அதுவே நோக்கலுந் தலைமகற்கியல்பாகலின், கூடியகாமமொடென்றாள். ஒடுவுருபு விகாரத்தாற்றொக்கது. கோடுகொண்டேறலாகிய மரத்தது தொழில் நெஞ்சின்மேலேற்றப்பட்டது. கொண்டென்பது குறைந்துநின்றது. அஃதுள்விற்றிலேனாயின் இறந்துபடுவலென்பதாம். (௪)

விளக்கம்:—"காமத்தினின்றும் நீங்கியவராய் நம்மைப் பிரிந்து

சென்ற காதலர் மேல் காம ஆசைகொண்டு நம்மிடத்து வருதலை நினைந்து என் நெஞ்சானது வருத்தம் நீங்கி மேன்மேலும் குதூகலிக்கின்றது" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! காதலரானவர் தாம் ஏற்றுக்கொண்ட யுத்த வினையை முடிக்குங் கருதிப் பிரிகின்ற காலத்துக் காம இன்பம் நோக்காது சென்றாராயினும் அவர் சென்ற தொழில் முடிகின்ற காலத்து அக்காமம் ஒன்றினையே நோக்குவது அவருக்கு இயல்பாக உள்ளதால் அவ்வியல்பினை எண்ணி வருவர் என்ற எண்ணத்தால் என் நெஞ்சமானது மேலும் மேலும் சந்தோஷிக்கின்றது. அவ்விதம் நினைந்து மகிழ்ச்சியடையேனாயின் இவ்வளவு காலம் இறந்தே இருப்பேன் என்று கூறிற்றாயிற்று.

1265. காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு.

தலைமகன்வரவு கூறி ஆற்றுவாய் பசக்கற்பாலை
யல்லையென்ற தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ - ள். கண் ஆரக் கொண்கனைக் காண்க = என் கண்களாரும் வகை என்கொண்கனை யான் காணப்பெறுக,—கண்டபின் என் மென்றோட்



பசப்பு நீங்கும் = அவனைக் கண்டபின் என் மெல்லியதோளின்கட் பசப்புத் தானே நீங்கும். எ - று.

காணகவென்பது ஈண்டு வேண்டிக்கோடற்பொருட்டு. 'மற்று' வேண்டுமென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. கேட்ட துணையா னீங்காதென்பதாம். (ரு)

விளக்கம்:—"என் கண்கள் நிறையும் வண்ணம் என் காதலரை

யான் பார்ப்பேனாக! அவ்விதம் பார்த்த பிறகு என் மென்மைதங்கிய தோளினிடத்தே தோன்றிய நிறவேறுபாடான பசலை நீங்கி விடும்" என்று தலைமகன் வருகையைச் சொல்லி நீ ஆற்றாமையால் நிறவேறு பாட்டினை அடைதல் வேண்டாம் என்ற தோழியை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! நீ தலைவர் வருகின்றார் என்று சொல்லும் சொற்களைக் காதால் கேட்பதால் என் தோளில் உண்டாகும் பசப்பு நீங்காது. அவர் வருகையை என் கண்ணாரக் கண்ட பின்பே நிறவேறுபாடாகிய பசப்புத் தனக்குத் தானே நீங்கும் என்று கூறியதாயிற்று.

## 1266. வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
## பைதனோ யெல்லாங் கெட.

இதுவுமது.

(பரி.) இ - ள். கொண்கன் ஒருநாள் வருக = இத்துணைநாளும் வாராக் கொண்கன் ஒருநாள் என்கண் வருவானாக!—பைதல் நோயெல்லாம் கெடப் பருகுவன் = வந்தால் பையுளைச்செய்கின்ற இந்நோயெல்லாங்கெட அவ்வமிழ் தத்தை வாயில்களைந்தானும் பருகக்கடவேன்; எ - று.

வருகவென்பதற்கும் மன்னென்பதற்கும் மேலுரைத்தவாறே கொள்க. அக்குறிப்பு அவ்வொருநாளைக்குள்ளே இனி வாராதவநோய்களும் கெடுப்ப வென்பதாம். (சு)

விளக்கம்:—"இத்துணை நாளும் வாராத என் காதலர் ஒரு நாள் என்னிடத்தே வருவாராக! அவ்விதம் அவர் வந்தால் துன்பத் தைச் செய்கின்ற நோயெல்லாம் கெடும்படி அவரமிழ்தத்தை மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐந்தின் வழியாலும் குடிக்கக்கடவேன்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! இத்துணை நாளும் என் காதலர் என்னிடத்து வாரா திருக்கினும் ஒருநாள் என்னிடத்து வந்தே தீர்வார். அவ்விதம் வரு

கின்ற காலத்தும் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம் புலன்களாகிய ஐந்து வாயில்களாலும் அமிழ்தம்போன்ற அவர் வருகையைக் குறித்து இப்போது உள்ள நோய்களையும் இனி வரவேண்டுவனவாகிய நோய்களையும் அவ்வொரு நாளிலேயே தீர்த்துக்கொள்வேன் என்று கூறியதாயிற்று.

1267. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்
கண்ணன்ன கேளிர் வரின். [பேன்கொல்

இதுவுமது.

(பரி.) இ - ள். கண் அன்ன கேளிர் வரின்=கண்போற்சிறந்த கேளிர் வருவாராயின்,—புலப்பேன்கொல்=அவர் வரவு நீட்டித்தமைநோக்கி யான் புலக்கக் கடவேனோ,—புல்லுவேன்கொல்=அன்றி என்னுற்றாமை நோக்கிப் புல்லக் கடவேனோ,—கலப்பேன்கொல்=அவ்விரண்டும் வேண்டுதலான் அவ் விரு செயல்களையும் விரவக்கடவேனோ, யாது செய்யக்கடவேன்! எ - று.

புலவியும் புல்லலும் ஓர்பொழுதின்கண் விரவாமையின் 'கலப்பேன் கொல்' என்றாள். மூன்றனையுஞ்செய்தல் கருத்தாகலின், விதுப்பாயிற்று. இனிக் கலப்பேன்கொலென்பதற்கு ஒருபுதுமைசெய்யாது பிரியாதகாட் போலக் கலந்தொழுகுவேனோ வென்றுரைப்பாரு முளர். (எ)

விளக்கம்:—"என் கண்போல் சிறந்த காதலர் வருவாராயின், அவர் குறித்த பருவத்து வாராது காலம் நீட்டித்தமையை எண்ணி யான் அவரிடத்துக் கோபிப்பேனோ, அல்லது என் ஆற்றாமை மிகுதியால் அவரை அணைவேனோ, அவ்விரண்டு செயல்களும் கலவிக்கு வேண்டிய படியால் கோபித்தலும் அணைதலுமாகிய இரண்டனையும் ஒன்றன்பின் ஒன்றாகக் கலந்து செய்வேனோ, யாது செய்வேனோ அறியேன்' என்று தலைமகள் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவன் வருகையைக் கூறுகின்ற தோழியைப் பார்த்து, தோழியே! நீ கூறுகின் றபடிக் காதலர் வருவாராயின் அவர் நெடும்பொழுது கழிந்துவந்த தன்

மையை நோக்கிக் கோபித்தலைச் செய்து அவ்வூடல் நீங்கியவுடன் புணர் வேனோ, அல்லது அவரைப் பிரிந்து உள்ள ஆற்றாமை மிகுதியால் யாதொரு கோபித்தலையும் செய்யாது அவர் பிரிந்திராது கூடியிருந்த காலத்தில் அவரோடு கலந்து ஒழுகியதுபோல் கலந்து இன்பத்தை



அனுபவிப்பேனோ, யாது செய்வேனோ அறிகிலேன் என்று காதலனைக் காணவேண்டி விரைகின்ற குறிப்பினைக் கூறியதாயிற்று.

1268. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து.

வேந்தற்குற்றுழிப்பிரிந்த தலைமகன் வினைமுடிவுநீட்டித்துழித்
தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.

(பரி.) இ-ள். வேந்தன் வினைகலந்து வென்றீக=வேந்தன் வினைசெய் தலைப்புரிந்து வெல்வானாக,—மனைகலந்து மாலைவிருந்து அயர்கம்=யாமும் மனைவியைச் சென்றுகூடி ஆண்டை மாலைப்பொழுதிற்கு விருந்தயர்வே மாக. எ-று.

மனையென்பது ஆண்டாகுபெயர், "மங்கல மென்ப மனைமாட்சி" என் புழிப்போல. வினைசெய்தற்கண்வந்த மாலைப்பொழுதிற்கு எதிர்கோடல் அலங்கரித்தன் முதலியவன்மையின், மனைகலந்து மாலைக்கு விருந்தயர்கம் என்றான். நான்கனுருபு விகாரத்தாற்றொக்கது. இது வினைமுடியா முன்கூற லான் விதுப்பாயிற்று. பிறரெல்லாம் இதனைத் தலைமகள் கூற்றாக்கி யுரைத் தார்; தலைமகனைக் கூறாது வேந்தன்வெல்க என்றும், 'மனைகலந்து' என்றும், மாலைப்பொழுதின்கண் விருந்தயர்கம் என்றும், வந்த அவ்வுரைதானே அது கூடாமைக்குக் கரியாயிற்று. (அ)

விளக்கம்:—"நம்முடைய வேந்தன் போரினைச் செய்துத் தன் பகைவரை வெல்லட்டும். யாமும் மனைவியிடத்தே போய் அவளைக்கூடி அன்றை மாலைப்பொழுதிற்கு விருந்தினைச் செய்வோம்" என்று தன்

அரசனுக்குப் பகைவரால் யுத்தம் நேர்ந்த காலத்து அதன்பொருட்டுத் தலைவியை விட்டுப் பிரிந்து யுத்தத்திற்குச் சென்று அவ்விடத்து அவ் யுத்தமானது நீட்டித்த காலத்துத் தலைமகளை நினைந்து தனக்குள்ளேயே தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவனானவன் என்னுடைய அரசன் பகை அரசரிடத்து யுத்தம் செய்து அவர்களை விரைவில் வெல்வானாயின் யானும் பிரிந்து வந்த மனைவியிடத்தே போய்க் கூடி மாலைப்பொழுதெல்லாம் என்னை எதிர்கொள்ளுதலும் அலங்கரித்தலும் முதலிய செயல்களைச் செய்யும் படிச் செய்து இன்பந்துய்ப்பேன் என்று தலைவியினிடத்துச் செல்ல விரும்பிய விரைவினைக் கூறியதாயிற்று.

22



1269. ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ் சேட்சென்
வருநாள் வைத்தேங்கு பவர்க்கு. [றார்

இதுவுமது.

(பரி.) இ-ள். சேண் சென்றார் வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு=சே ணிடைச்சென்ற தங்காதலர் மீண்டுவரக்குறித்த நாளை யுட்கொண்டு அது வருந்துணையும் உயிர்தாங்கி வருந்து மகளிர்க்கு,—ஒருநாள் எழுநாள்போல் செல்லும்=ஒருநாள் பலநாள்போல நெடிதாகக்காட்டும்; எ-று.

எழென்பது அதற்குமேலாய மிக்க பன்மைகுறித்துநின்றது, "ஒருவர் கூறை யெழுவ ருடுத்து" என்றார்போல. தலைமகன் வருத்தம் பிறர்மேலிட் டுக் கூறியவாறு. இதனான் இதுவுந் தலைமகள் கூற்றாகாமை யறிக. இருநா ளென்று பாடமோதுவாரு முளர். (க)

விளக்கம்:—"தம்மைப் பிரிந்து நெடுந்தூரத்தில் சென்ற தம்

முடைய காதலர் மறுபடியும் திரும்பிவர எண்ணிய நாளினை மனத்துட் கொண்டு அந்நாள் வருமளவும் உயிர் தாங்கி வருந்துகின்ற பெண்களுக்குக் கழிகின்ற நாள்களில் ஒவ்வொருநாளும் பல நாள்கள்போல நீண்ட பொழுதாகக் காட்டும்" என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது பிரிந்து சென்ற தலைமகன் தான் குறித்த பருவத்துப் போவதை எண்ணினானதலால், அப்பருவம் வரையும் தன் வருகையை நோக்கி வருந்தியுள்ள தன் தலைவியின் வருத்தத்தைப் பிறர்மேல் வைத்துப் பொதுவாகக் கூறினான். காதலரைப் பிரிந்த பெண்களுக்குக் காதலன் வரும் வரையும் கழியும் நாள்களுள் ஒருநாள் பல நாள்கள்போல் கழியாது நெடியதாகத் தோன்றும் என்று தான் தலைமகளிடத்து விரைந்து செல்லவேண்டும் என்று கூறியதாயிற்று.

1270. பெறினென்னும் பெற்றக்கா லென்னு முறினென்
முள்ள முடைந்துக்கக் கால். [னென்னு

இதுவுமது.

(பரி.) இ-ள். உள்ளம் உடைந்து உக்கக்கால்=காதலி நம் பிரிவினையாற்றாது உள்ளமுடைந்திறந்துபட்டவழி,—பெறின் என்=நம்மைப் பெறக்கடவளானாலென்,—பெற்றக்கால் என்=அதுவன்றியே பெற்றாலென்,—உறின் என்=அதுவன்றியே மெய்யுறக்கலந்தாற்றானென்? இவையொன்றாலும் பயனில்லை; எ-று.

## குறிப்பறிவுறுத்தல் 171

இம்மூன்றும் உடம்பொடுபுணர்த்துக் கூறப்பட்டன, அதன்மேலும் முன்னை வழக்குண்மையின். அதற்கு முன்னே யான்செல்லவேண்டுமென்பது கருத்தாகலின், விதுப்பாயிற்று. இது தலைமகன் கூற்றாயவழி இரங்கலாவதல்லது விதுப்பாகாமையறிக. (ம)

விளக்கம் :—"நம் காதலி நம் பிரிவினைப் பொறாதவளாகி மனமுடைந்து இறந்து போவாளாயின் நம்மைப் பெறக் கூடியவளாய் இருந்தாலும் அல்லது நம்மைப் பெற்றுவிட்டாலும் அல்லது இரண்டு தேகமும் பொருந்தும்படி புணர்ந்தாலும் இவை யாதொன்றாலும் பயன் இல்லாமல்போம்'' என்று தலைமகன் கூறியதாக இந்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைமகனானவன் தான் சென்ற தொழில் காலம் நீட்டித்தவிடத்துத் தனக்குள்ளேயே வருந்துவானாய் என் தலைவி என் பிரிவாற்றாமையால் இறந்து படுவள் அவ்விதகாதலியை யான் அடைய விரும்பினால் விரைந்து செல்லுதல் வேண்டும் என்று தனக்குள்ள விரைவினைத் தனக்குள்ளே சொல்லிக் கொண்டதாயிற்று.

---

## 128. அதிகாரம்.

---

## குறிப்பறிவுறுத்தல்.

(பரி.) அஃதாவது தலைமகன், தலைமகள், தோழியென்றிவர் ஒருவர் குறிப்பினை யொருவர்க்கறிவுறுத்தல். இது பிரிந்துபோய தலைமகன் வந்து கூடியவழி நிகழ்வதாகலின், அவர்வயின்விதும்பலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது தலைமகன், தலைமகள், தோழி என்னும் மூவரும் ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கு அறியும்படிச் செய்தல். இக்குறிப்பறிவுறுத்தல் பிரிந்து சென்ற தலைமகன் தலைவியினிடத்தே வந்து கூடியகாலத்து உண்டாவது ஒன்று ஆதலால் அவர்வயின்விதும்பல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வைக்கப்பட்டு உள்ளது.

1271. கரப்பினுங் கையிகந் தொல்லா நின் னுண்கண்
ணுரைக்க லுறுவதொன் றுண்டு.

**பிரிந்துகூடிய தலைமகன் வேட்கைமிகவிருப்புதுவது பன்னுளும் ப்ாராட்டத் தலைமகள் இதுவொன் றுடைத்தென அஞ்சியவழி அதனையவன் குறிப்பானறிந்து அவனைவட்டுச் சொல்லியது.**

(பரி.) இ-ள். காப்பினும் = நீ சொல்லாது மறைத்தாயாயினும், —ஒல்லாகையிகந்து = அதற்குடம்படாதே நின்னைக் கைகடந்து, —நின் உண்கண் உரைக்கலுறுவது ஒன்று உண்டு = நின்னுண்கண்களே எமக்குச் சொல்ல லுறுவதொரு காரியமுண்டாயிராநின்றது, இனியதனை நீயே தெளியச் சொல்வாயாக. எ-று.

காத்தல் = நாணுனடக்குதல். தன்கட் பிரிதற்குறிப்புளதாகக் கருதி வேறுபட்டாளது வேறுபாடு குறிப்பானறிந்து அவட்குத் தன் பிரியாமைக் குறிப்பறிவுறுத்தவாறு. (க)

விளக்கம்:—"நீ சொல்லாமல் மறைத்து வைத்தாயாயின் அம் மறைத்தற்கு உடன்படாமல் உன்னைக் கை கடந்து உன்னுடைய மையுண்ட கண்களே எனக்குச் சொல்ல எண்ணிய காரியம் ஒன்று உண்டாயிருந்தது. ஆதலால் அக்கண்கள் எனக்குத் தெரிவிப்பதுடன் நீயே அதனை இனி எனக்குத் தெளியச் செய்வாயாக" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது பிரிந்துசென்று வினைமுடித்து வந்து தலைமகளைக் கூடிய தலைமகன் பிரிவாற்றுமையால் உண்டாகிய விருப்பத்தின் மிகுதியால் தான் செய்த கலவிபோல் தினந்தோறும் புதிது புதிதாகக் கலவிகளைச் செய்தலும் அதைக் கண்ட தலைமகள் இவன் இவ்விதம் ஏதோ புதியவன் போல் ஆற்றுமை கொண்டு புதிது புதிதாகக் கலவிகளைச் செய்து இன்பம் துய்க்கின்றுறதலால் நம்மை மறுபடியும் பிரிந்து செல்வதற்கு எண்ணி இவ்விதமெல்லாம் செய்கின்றான் போலும் என்று மனத்திடத்தே அஞ்சிய இடத்து அக்குறிப்பினை அவள் கண்குறிகளாலும் மனவேறுபாட்டினுலும் அறிந்த தலைமகன் தன் காதலிக்குத் தன் பிரியாமைக் குறிப்பினை உணர்த்துவான். "ஓ! காதலியே! நீ மனத்தில் எண்ணி உள்ளதை நீ வாக்கால் கூறுவிடினும் உன் கண்கள் உன் மறைத்தலுக்கு அடங்காது உன் ரகசியத்தை எனக்குச் சொல்லுவதாய் உள்ளது. அவ்விதம் அக் கண்கள் சொல்லுவதுடன் நீயே தெளியச் சொல்லுதல் கூடும்" என்று

தன் குறிப்பினை அறிவித்ததாயிற்று.

1272. கண்ணிறைந்தகாரிகைக்காம்பேர்தோட்பேதைக்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. [குப்

நாணால் அவள் அதுசொல்லாளாயவழி அவள் தோழிக்குச் சொல்லியது.

(பரி.) இ - ள். கண் நிறைந்த காரிகைக் காம்பு ஏர் தோட்பேதைக்கு= என்கண்ணிறைந்த வழகினையும் வேயையொத்த தோளினையுமுடைய நின்



பேதைக்கு-பெண் நிறைந்த நீர்மை பெரிது=பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அவ்வளவன்றி மிகுந்தது. எ-று.

இலதாய பிரிவினைத் தன்கணேற்றி அதற்கஞ்சுதலான் இவ்வாறு கூறினன். (உ)

விளக்கம் :—"என் கண்ணிற்கு நிறைந்த அழகினையும் மூங்கிலையொத்த தோளினையும் உடைய உனது பேதைக்குப் பெண்பாலாரிடத்து இருக்கவேண்டிய அறியாமை எவ்வளவோ அவ் அளவிற்கு அதிகமாகவே உள்ளது" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைவனைவன் தன் தலைவியிடத்துத் தான் பிரியாமையைக் குறிப்பித்தும் அவள் வேறுபட்டாளாதலால் நீ எதற்காக இவ்வித வேறுபாட்டினை அடைந்தனை எனப் பலமுறை கேட்டும் அவள் நாணமிகுதியால் ஒன்றும் சொல்லாதிருக்கவும் அவள் தோழியை நோக்கித் தோழியே! உன் துணைவியோ உலகத்து உள்ள பெண்கள் எல்லாரிலும் அறியாமை மேற்கொண்டவர் போலும்! எனெனில் இல்லாத பிரிவினை இருப்பதாக எண்ணிப் பயந்து வேறுபடுகின்றுளாதலால் என்று கூறியதாயிற்று.

1273. மணியுட் டிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியுட் டிகழ்வதொன் றுண்டு.

இதுவுமது.

(பரி.) இ-ள். மணியுள் திகழ்தரும் நூல்போல்=கோககப்பட்ட பளிக்கு மணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாய நூல்போல,—மடந்தை அணியுள் திகழ்வது ஒன்று உண்டு=இம்மடந்தைய தணியகதநுக் கிடந்து புறத்துப் புலனாகின்றதொரு குறிப்புண்டு. எ-று.

அணி=புணர்ச்சியானாய அழகு. அதனகத்துக் கிடத்தலாவது அத னோடு உடனிகழ்தற்பாலதன்றிவைத்து உடனிகழ்தல். அதனையானறிகின்றி லேன், நீயறிந்துகூறல்வேண்டுமென்பது கருத்து. (௩)

விளக்கம் :—“கோக்கப்பட்ட பளிக்கு மணியின் உள்ளே கிடந்து வெளியிலேயும் காணப்படும் நூலைப்போல் இப்பெண்ணினது புணர்ச்சியினுள் கிடந்து வெளியே காணப்படுகின்ற ஒரு குறிப்பு உண்டு” என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! கோக்கப்பட்ட நூல் மணிக்கு உள் இருந்தும் மணியின்தன்மையால் வெளியே காணுமாறுபோல மனத்துக்குள் ஏதோ



ஒரு குறிப்பு அடங்கியிருந்தும் அவளுடைய புணர்ச்சியில் தோன்றும் வேறுபாட்டினால் அது புலப்படுகின்றதாதலால் அக்குறிப்பு இது என்று யான் அறிந்துகொள்வதற்கு இல்லை, நீ உயிர்த்தோழியாதலால் அதனை அறிந்து, சொல்லல் வேண்டும் என்பதாயிற்று.

1274. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

இதுவுமது.

(பரி.) இ-ள். முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல்=முகையது முகிழ்ப்பினுளதாய்ப் புறத்துப் புலனாகாத நாற்றம்போல,—பேதை நகை மொக்குள் உள்ளது ஒன்று உண்டு=இன்பேதை என்னொடு நகக்கருது நகை யது முகிழ்ப்பினுளதாகிப் புறத்துப்புலனாகாததோர் குறிப்புண்டு; எ-று.

முகிழ்ப்பு=முதிர்ச்சியாற் புடைபடுதல். நகை=புணர்ச்சியின்பத்தா னிகழ்வது. (௪)

விளக்கம் :—"பூவின் அரும்பினது விரிதலில் உண்டாகும் வெளியே காணப்படாத வாசனையைப்போல் உன்னுடைய தலைவியான வள் என்னுடைய மகிழக் கருதும் மகிழ்ச்சியின் புடை பெயர்தலால் வெளியே காணப்படாததாகிய ஒரு குறிப்பு உண்டு" என்று தலைவன் கூறியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது "தோழியே! பூவின் அரும்பானது முதிர்ந்து அம்முதிர்ச்சியின் தன்மையால் இதழ்கள் விரிகின்ற சமயத்துத் தோன்றுகின்ற மணத்தை எவ்வாறு காணுதல் கூடாதோ அதுபோல் புணர்ச்சி முடிந்து பிரிகின்ற காலத்து இவளிடத்து உண்டாகும் மகிழ்ச்சியின் தன்மையை நோக்க அறிந்துகொள்வதற்குக் கூடாத குறிப்பு ஒன்று உள்ளதாகக் காணப்படுகின்றது" என்று கூறினானாயிற்று.

**1275.** செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

இதுவுமது.

(பரி.) இ-ள். செறி தொடி செய்து இறந்த கள்ளம்=நெருங்கிய வளைகளையுடையாள் என்கணில்லாததொன்றனையுட்கொண்டு அது காரணமாக என்னை மறைத்துப்போன குறிப்பு—உறு துயர் தீர்க்குமருந்து ஒன்று உடைத்து=என்மிக்க துயரத்தைத் தீர்க்குமருந்தாவதொன்றனையுடைத்து; எ-று.



உட்கொண்டது - பிரிவு. கள்ளம் ஆகுபெயர். மறைத்தற்குறிப்பு=தானுமுடன்போக்குட் கொண்டது. உறுதுயர்=நன்றுசெய்யத் தீங்கு விளைதலானும் அதுதான் தீர்திறம்பெருமையானும் உளதாயது. மருந்து=அப்பிரிவின்மை தோழியாற்றெளிவித்தல். நீ யதுசெய்தல்வேண்டுமென்பதாம். (ரு)

விளக்கம் :—"நெருங்கிய வளையல்களை உடையாள் என்னிடத்து இல்லாத பிரிவு ஒன்றினை உள்ளதாக மனத்துட்கொண்டு அதன் கார

ணமாக என்னை மறைத்துச் சென்ற குறிப்பு எனக்குள்ள மிகுந்த துக்கத்தினைத் தீர்க்கும் ஓர் மருந்தினை உடையதாய் இருக்கின்றது" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! உன் தலைவியினது குறிப்பானது என்னுடன் வருதலை எண்ணுவதாய் உள்ளது. நான் நன்மை செய்யவும் தீங்குவிளைவது போல் விருப்ப மிகுதியால் பலதிறப்பட்ட கலவிகளைச் செய்ததால் அது பிரிதற்குறிப்பு என்று உணர்ந்து எனக்கு நீங்காத மிகுந்த துயரத்தை உண்டு பண்ணினாள். அக்குறிப்பு யான் உணர்ந்தேனாதலால் நான் பிரிதலில்லை என்பதையும், அவள் உடன்போதல் வேண்டுவதில்லை என்பதையும் நீ அவளுக்குத் தெரிவித்தல் வேண்டும் என்று கூறினானாயிற்று.

## 1276. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
## அன்பின்மை சூழ்வ துடைத்து.

தலைமகன்குறிப்பறிந்த தலைமகள் அதனை அருநெளிவிக்கச் சென்ற தோழிக்கறிவுறுத்தது.

(பரி.) இ-ள். பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல்—காதலர் வந்து தம் பிரிவினாய துன்பத்தினை மிகவுமாற்றி நாமகிழும்வண்ணங் கலக்கின்ற கலவி,—அரிது ஆற்றி அன்பின்மை சூழ்வது உடைத்து—இருந்தவாற்றான் மேலுமத்துன்பத்தினை அரிதாகவாற்றியிருந்து அவரன்பின்மையை நினையுந் தன்மையுடைத்து. எ-று.

பிரிதற்குறிப்பினாற்செய்கின்றதாகலான், முடிவில் இன்னாதாகாநின்றதென்பதாம். (சு)

விளக்கம்:—"பிரிந்து சென்ற காதலர் நம்மிடத்து வந்து தம் பிரிவினாலாகிய துன்பத்தினை மிகுதியும் ஆற்றும்படி செய்து நாம் மகிழ்ச்சியடையும் விதம் நம்மோடு கலக்கின்ற கலவியானது இருந்த விதத்தை



எண்ணுமிடத்து மேலும் அப்பிரிதல் துன்பத்தினை அரியதாகப் பொறுத்து இருந்து நம்மிடத்து அவர் அன்பு இல்லாமையை நினைக்

குந் தன்மையுடையதாக உள்ளது" என்று தலைவி கூறியதாக இத்திருக் குறள் கூறுகின்றது. அதாவது தலைமகனது குறிப்பினை இதுவென்று அறிந்த தலைவி அக்குறிப்பினைத் தலைமகளைத் தெளிவிக்கச் சென்ற தோழிக்குச் சொல்லுவாளாய்த் 'தோழியே ! நம் காதலன் நம்மிடத்துச் செய்யும் அன்புடைமையையும் கலவி இன்பங்களையும் நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் இனிமையுடையதாக இப்போது காணப்படினும் அவன் செய்கின்ற கலவிக் குறிப்புகளெல்லாம் பிரிதற் குறிப்பாக உள்ளனவாதலால் முடிவில் இன்னாமையாகிய துன்பத்தையே விளைக்கும் என்று கூறியதாயிற்று.

## 1277. தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு முன்ன முணர்ந்த வளை.

இதுவுமது.

(பரி.) இ-ள். தண்ணந்துறைவன் தணந்தமை=குளிர்ந்த துறையை யுடையவன் நம்மைமெய்யாற்கூடியிருந்தே மனத்தாற்பிரிந்தமையை,—நம்மினும் வளை முன்னம் உணர்ந்த=அவன்குறிப்பானறிதற்குரிய நம்மினும் இவ் வளைகள் முன்னேயறிந்தன. எ-று.

கருத்துமிகழ்ந்ததாகலின் 'தணந்தமை' என்றும், யான் றெளியவுணர்தற்குமுன்னே தோள்கண் மெலிந்தனவென்பாள் அதனை வளைமேலேற்றி அதுதன்னை யுணர்வுடைத்தாக்கியுங் கூறினள். (எ)

விளக்கம் :—"குளிர்ந்த நீர்த்துறையையுடைய நம் தலைவன் நம்மைத் தேகத்தால் கூடியிருந்தே மனத்தால் பிரிந்ததை அவன் குறிப்பால் அறிதற்கு உரிய நம்மைக்காட்டிலும் இவ்வளையல்கள் முன்னரே அறிந்து கொண்டன" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே ! நம் தலைவன் நம்மைத் தேகத்தோடு தேகம் பொருந்தும்படி இறுகத் தழுவிப் புணர்ந்துகொண்டு மனத்தில் பிரிதற் குறிப்புகொண்டு செய்யும் கலவிகளை நாம் அறிவதற்கு முன்னே நம் தோள்கள் அறிந்து மெலிந்துபோயின. அம்மெலிதலால் வளையல்

களும் கழல்வன ஆயின. நம்மினும் நம்வளையல்கள் தலைவன் குறிப்பினை அறிதலை மிக்க உணர்வுடையனவாக உள்ளன என்று கூறியதாயிற்று.



1278. நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து.

இதுவுமது.

(பரி.) இ-ள். எங்காதலர் சென்றார் நெருநற்று=எங்காதலர் பிரிந்து போயினார் நெருநற்றே,—யாமும் மேனி பசந்து எழுநாளேம்=அப்பிரிவிற்கு யாமும் மேனிபசந்து எழுநாளுடையமாயினேம். எ-று.

நெருநற்றுச்செய்த தலையளியாற் பிரிவு துணியப்பட்டதென்பாள் 'நெருநற்றுச்சென்றார்' என்றும், அதனை யையுற்றுச்செல்கின்றது எழுநாளுண்டாகலின் அன்றே மேனிபசந்ததென்பாள் 'மேனிபசந்தெழுநாளேம்' என்றுங் கூறினாள். இவ்வாற்றாற் றலைமகனது பிரிதற்குறிப்பினையுணர்த்தி நின்றது. (அ)

விளக்கம் :—"எம்முடைய காதலர் எம்மை விட்டுப் பிரிந்து போயது நேற்றேயாயினும், அவ்வித பிரிவிற்கு யாமும் தேக நிறம் மாறுபட்டுப் பசப்பினைக்கொண்டது ஏழுநாள்களுக்கு முன்னரேயாம்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! நம் காதலர் நம்மைப் பிரிந்து சென்றது நேற்றுத் தினமேயாயினும் அப்பிரிவினை முன்னமே குறிப்பால் உணர்ந்த யாம் ஏழு நாள்களுக்கு முன்னே தேகத்தில் நிறவேறுபாட்டினைக் கொள்வதாக இருந்தோம் என்று அவர் பிரிதற் குறிப்பு உணர்ந்தோமோ அன்றே நிறவேறுபாட்டினை அடைந்தோமாதலால் அதனை நீ இனி எமக்கு உணர்த்தவேண்டுவதில்லை என்று கூறியதாயிற்று.

1279. தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.

தலைமகள் குறிப்பறிந்த தோழி அதனைத் தலைமகற் கறிவித்தது.

(பரி.) இ-ள். யானதுதெளிவித்தவழித் தெளியாது,—தொடி நோக்கி

=அவர் பிரிய யானீண்டிருப்பின் இவையில்லாவெனத் தன்றொடியை நோக்கி—மென்றோளும் நோக்கி அதற்கேதுவாக இவைமெலியுமெனத் தன்மென்றோள்களையுநோக்கி—அடி நோக்கி=பின்னிவ்விரண்டும் நிகழாமல் நீர் நடந்து காத்தல்வேண்டுமெனத் தன்னடியையுநோக்கி—ஆண்டு அவள் செய்தது அஃது=அங்ஙனம் அவள்செய்த குறிப்பு உடன்போக்கா யிருந்தது.





செய்தகுறிப்பு=செய்தற்கேதுவாய குறிப்பு. அஃதென்றான் "செறிதொடி செய்திறந்தகள்ள" மென்றாகலின். பிரிதற்குறிப்புண்டாயின் அஃதழுங்குதல் பயன். (க)

விளக்கம்:—"யான் உமது குறிப்பினைத் தெளிவித்த காலத்துத் தெளியாதவளாய் அவர் பிரிய யான் இங்கு இருப்பேனாயின் இவை நில்லா என்று தம் வளையல்களை நோக்கி, அவற்றிற்கே எதுவாகிய இவை மெலியுமென்று தன் மெல்லிய தோள்களையும் நோக்கி, பின்னர் இவ்விரண்டும் உண்டாகாமல் நீர் நடந்து காத்தல் வேண்டுமென்று தன் பாதங்களையும் நோக்கி அவள் செய்த குறிப்பானது உடன் போக்காகவே இருந்தது" என்று தோழி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தலைமகள் குறிப்பு இதுவென்று அறிந்த தோழியானவள் அக்குறிப்பினைத் தலைமகனுக்கு உணர்த்துவாளாய் தலைவனே! யான் அவளைக் கண்டகாலத்து அவள் தெளியும்படிச் சொல்லிய சொற்களைக் கொண்டு சிறிதும் தெளியாதவளாய் அவர் பிரிந்து யான் இங்கு இருப்பின் இவ்வளையல்கள் என் கைகளில் நில்லா. அவ்விதம் நில்லாமல் போதற்குக் காரணமாக இத்தோள்களும் மெலியும் என்று அவைகளைப் பார்த்து வருந்தியதுடன் இவ்விதம் வளைகழலாமலும் தோள்கள் மெலியாமலும் இப்பாதங்கள் தான் நடந்து உடன் சென்று காத்தல் வேண்டும் என்றுதன் பாதங்களையும் நோக்கினளாதலால் அவ்விதம்

அவர் செய்த குறிப்பெல்லாம் உம்முடன் போதற்காகவே இருந்தது. ஆதலால் விட்டுப்பிரிந்துபோவது உம்முடைய குறிப்பாயின் போகா திருப்பதே பயனாகும் என்று கூறியதாயிற்று.

1280. பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்பகண்ணி
காமநோய் சொல்லி யிரவு. [னாற்

தலைமகன் பிரியாமைக்குறிப்பினைத் தோழிக்கறிவுறுத்தது.

(பரி.) இ-ள். காமநோய் கண்ணினாற் சொல்லி இரவு=மகளிர் தம் காம நோயினைத் தோழியர்க்கும் வாயாற்சொல்லாது கண்ணினாற்சொல்லி அது தீர்க்க வேண்டுமென்று அவரையிரவாது உடன்போதல் குறித்துத் தம்மடி யினையிரத்தல்—பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப=தமக்கியல் பாகிய பெண்மைமேலும் ஓர் பெண்மையுடைத்தென்று சொல்லுவர் அறிந் தோர்; எ-று.



தலைமகளதுடன்போதற்றுணிபு தோழியாற்றெளிந்தானாகலின், தன் பிரிவின்மைக்குறிப்பினையறிவுறுப்பான், அவள் பெண்மையினைப் பிறர்மேலிட்டு வியந்துகூறியவாறு. (ம)

விளக்கம் :—“பெண்கள் தமக்கு உண்டாகும் காமநோயினைத் தோழியர்களுக்கும் வாயினாற் சொல்லாமல் கண்களால் சொல்லி அந் நோயினைத் தீர்க்கவேண்டுமென்று அத்தோழியரை வேண்டாது தலை வனுடன் உடன் போதலை எண்ணித் தம் பாதங்களை வேண்டுதல் தமக்கு இயற்கையாக அமைந்த பெண்தன்மை மேலும் ஓர் பெண்தன்மை உடையதாக உள்ளது என்று அறிந்தோர் சொல்லுவர்” என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! பெண் கள் தமக்கு உள்ள துன்பத்தினைத் தோழியர்க்குச் சொல்லி தீர்த்துக் கொள்ள வேண்டுவது அவர்கள் தன்மையாக இருக்கவும் அவ்விதம் செய்யாது தன் துன்பத்தினைத் தோழியர்க்குக் கண்ணால் காட்டியும்

காட்டியகாலத்தும் அத்தோழியரால் தம் குறைமுடிக்க எண்ணாது உடன் போதற்கே துணிதல் பெண்களுக்கு உரிய அறியாமையினும் அறியாமையாகவே உள்ளது என்று தன் பிரிவின்மையைத் தோழிக்குக் கூறினளாயிற்று.

---

## 129. அதிகாரம்.

---

## புணர்ச்சிவிதும்பல்.

(பரி.) அஃதாவது தலைமகனுந் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். மேற் புணர்ச்சிமிகுதிபற்றித் தலைமகன் பிரிதற்குறிப்பறிவுறுத்த தலைமகள் அவன்மாட்டேநிகழாது வேட்கை மிகவினாற்பின்னு தன்கண்ணே நிகழ்தலான், இது குறிப்பறிவுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்.—அதாவது தலைமகனும் தலைமகளும் புணர்ச்சியினிடத்தே விரைதல். மேல் அதிகாரத்துள் தலைமகனால் நேர்ந்த புணர்ச்சியின் மிகுதியினால் தலைமகன் தன்னைவிட்டுப்பிரிதற்கே இவ்விதம் புதிது புதிதாகப் பலவித கலவிகளைச் செய்கின்றான் என்று அவனது பிரிதல் குறிப்பினைத் தோழி அறியும்படிச்செய்த தலைமகளிடத்து விருப்பமிகுதியால் இப்புணர்ச்சி விரைதல் பின்னும் உண்டாவதாலும் தலைவனிடத்து உண்டாகாமையாலும் இவ்வதிகாரம் குறிப்பறிவுறுத்தல் என்னும் அதிகாரத்திற்குப பிறகு வைக்கப்பட்டுள்ளது.



**1281. உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்**
**கள்ளுக்கில் காமத்திற் குண்டு.**

பிரிதற்குறிப்பினறிகியானோடு நீ புலவாமைக்குக் காரணம் யாதேன நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(பரி.) இ-ள். உள்ளக் களித்தலும்=நினைந்த துணையானே களிப்பெய் தலும்—காண மகிழ்தலும்=கண்ட துணையானே மகிழ்வெய்தலும்—கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு=கள்ளுண்டார்க்கில்லை, காமமுடையார்க்குண்டு; எ-று

களித்தல்=உணர்வழியாதது. மகிழ்தல்=அஃதழிந்தது. இவ்விரண்டும் உண்டுழியல்லதின்மையிற் 'கள்ளுக்கில்' என்றான். உண்டென்பது இறுதி விளக்கு. அப்பெற்றித்தாய காமமுடைய யான் புலத்தல் யாண்டையது என்பதாம். (க)

விளக்கம் :—“நினைந்த அளவே களிப்பை அடைதலும் கண்ட அளவே மகிழ்வை யடைதலும் கள்ளினை உண்டார்க்கு இல்லை. ஆனல் காமம் உடையார்க்கு உண்டு” என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியானவள் தலைவியை நோக்கிப் பிரிதல் குறிப்பினால் நின்றானோடு நீ கோபித்துக் கொள்ளாததற்குக் காரணம் ஏது என்று நகைத்துச் சொல்லிய தோழிக்குத் தலைமகளானவள் ஓ தோழியே! நினைத்தால் களித்தல் என்னும் உணர்வழியாத சந்தோஷத்தையும் உண்டால் உணர்வு அழியும் சந்தோஷத்தினையும் கள்ளினிடத்தே ஒருவன் அடைதல் ஆகாது. ஆனல் காமம்கொண்ட ஒருவர் நினைத்த அளவிலும் பார்த்த அளவிலும் களிப்பையும் மகிழ்ச்சியையும் அடைதலால் அவ்வித தகுதியுடையதாகிய காமத்தை உடைய யான் எவ்விதம்தலைவனிடத்துக் கோபித்துக் கொள்ளுதல் கூடும் என்று கூறியதாயிற்று.

1282. தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணை
காம நிறைய வரின். [யுங்

இதுவுமது.

(பரி.) இ-ள். காமம் பனைத்துணையும் நிறைய வரின்=மகளிர்க்குக் காமம் பனையளவிலும் மிகவுண்டாமாயின்—தினைத்துணையும் ஊடாமை வேண்டும் =அவரால், தங்காதலரோடு தினையளவும் ஊடுதல்செய்யாமை வேண்டப் படும். எ-று.

பனைத்துணையுமென்புழி ஐந்தனுருபு விகாரத்தாற்றொக்கது. ஊடின் வருத்தமிகுமெனப் பிறர்க்குறுதி கூறுவாள்போன்று, தன் விதுப்புக் கூறிய வாறு. (உ)

விளக்கம் :—"பெண்களுக்குக்காமமானது பனை மரத்தினது அளவைக்காட்டிலும் மிகுதியாக உண்டாகுமாயின் அப்பெண்களால் தம் காதலரோடு தினை என்னும் தானியத்தின் அளவும் சிறு பிணக்கினைக் கொள்ளாதிருத்தல் வேண்டும்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! காமம் மிகுந்து அதனால் துன்பப்படுகிற பெண்கள் தம் தலைவரிடத்து ஊடல் என்னும் சிறு பிணக்கையும் மிகச் சிறிதும் கொள்ளாதிருத்தல் வேண்டும். கொள்வார்களாயின் மிக்கதோர் வருத்தத்தை அடைதல் வேண்டும் என்று பிறர்க்குக் கூறுவதுபோல் தனக்கு உள்ள காம முதிர்ச்சியைக் கூறியதாயிற்று.

## 1283. பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக் காணா தமையல கண்.

இதுவுமது.

(பரி.) இ-ள். பேணாது பெட்பவே செய்யினும்=நம்மை யவமதித்துத் தான் வேண்டியனவே செய்யுமாயினும்—கொணகனைக் கண் காணாது அமையல=கொண்கனை என்கண்கள் காணாதமைகின்றனவில்லை; எ-று.

தன்விதுப்புக் கண்கண்மேலேற்றப்பட்டது. அத்தன்மையேன் அவனொடு புலக்குமாறென்னையென்பதாம். (௩)

விள்க்கம் :—"தம்மை அவமதித்து தான் விரும்பிய வண்ணமே செய்யுமாயினும் தலைவனைக்காணாது என்னுடைய கண்கள் பொருந்துவனவாயில்லை" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது.

அதாவது நம் தலைவன் நம்மை விரும்பாது அவமதித்துந் தான் விரும்பிய வண்ணமே செய்கின்றவனாயினும் என் கண்கள் அவனைப் பாரா விடின் பொருந்தேனென்கின்றன. இவ்வித காதலனை யான் எவ்வாறு கோபித்துக் கொள்வது என்று தனக்கு உள்ள காம மிகுதியினைக் கண்களின்மீது ஏற்றிக் கூறினளாயிற்று.



1284. ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

இதுவுமது.

(பரி.) இ-ள். தோழி=தோழீ!—ஊடற்கண் சென்றேன்=காதலரைக் காணுமுன் அவர்செய்த தவற்றைத் தன்னொடுநினைந்து யானவரோடு ஊடற்கணே சென்றேன்—என்னெஞ்சு அது மறந்து கூடற்கண் சென்றது-கண்டபின் என்னெஞ்சு அதனை மறந்து கூடுதற்கண்ணே சென்றது; எ-று.

சேரல்நிகழ்தல் நினைத்தநெஞ்சிற்குமொத்தலின், 'அதுமறந்து' என்றான் அச்செலவாற் பயனென்னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அவ்வெல்லையிலே நெஞ்சு அறைபோகலான், அது முடிந்ததில்லை யென்பதாம். (௪)

விளக்கம் :—"தோழியே ! நம் காதலரைக் காண்பதற்கு முன்னெல்லாம் அவர் நமக்குச் செய்த தவறுகளைத் தன்னொடு எண்ணி யான் அக்காதலரோடு கோபித்துக் கொள்ளலாம் என்று எண்ணினேன். அவ்விதம் தன்னொடு யோசித்துக் கோபிக்கச் சென்றும் கோபிக்கும் யோசனையை மறந்து அவரைக் கண்டவுடன் என் நெஞ்சானது காதலரைக் கூடுதற் கண்ணே சென்றது" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே ! எந்த நெஞ்சுடன் தலைவருடைய தவறினை எண்ணிக் கோபித்துக்கொள்ளத் தீர்மானித்தேனோ அந்த நெஞ்சே கோபித்தல் வேண்டுமென்னும் தீர்மானத்தினை

மறந்து புணர்தல் விருப்பத்தினைக் கொள்ளுமாயின் இவ்வித நெஞ்சுடைய யான் எவ்வாறு காதலரிடத்து ஊடல் கொள்ளுதல் கூடும். அது முடியாததாகும் என்று கூறியதாயிற்று.

**1285.** எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொ
பழிகாணேன் கண்ட விடத்து. [ண்கன்

இதுவுமது.

(பரி.) இ-ள். எழுதுங்கால் கோல் காணாக் கண்ணேபோல் = முன்னெல்லாம் கண்டிருந்தும் எழுதுங்காலத்து அஞ்சனக்கோலினியல்பு காணமாட்டாத கண்ணேபோல—கொண்கன்பழி கண்டவிடத்துக்காணேன் = கொண்கனது தவறு காணாதவிடத்தெல்லாம் கண்டிருந்து அவனைக் கண்டவிடத்துக் காணமாட்டேன்; எ-று.

கோல் ஆகுபெயர்; இயல்பு = கருமை. என்னியல்பிதுவாகலின் மேலும் அது முடியாதென்பதாம். (ரு)



விளக்கம்:—"முன்னெல்லாம் பார்த்திருந்தும், அஞ்சனக்கோலின் இயல்பினை எழுதுங்காலத்துப் பார்க்கமாட்டாத கண்களைப்போல, காதலனுடைய தவறுகளையெல்லாம் அவனைக் காணாத முன்னெல்லாம் கண்டிருந்தாலும் அவனைக் கண்ட இடத்து காணப்படாதவளாக இருக்கின்றேன்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது கண்ணிற்கு மை தீட்டுகின்ற அஞ்சனக்கோலினை எவ்விதம் அது மை தீட்டுங்காலத்துக் காண்பதற்கு இல்லாது அது தீட்டும் தன்மையினையே நோக்கி நிற்பதுபோல் காம இன்பத்தைக் கொண்ட மகளிர் தம் காதலர் செய்த தவறுகளையெல்லாம் எண்ணிப் பிரிய எண்ணுவதே அன்றி, கண்டகாலத்து அவரிடத்து உள்ள விருப்பமிகுதியால் கோபியாது புணர்ச்சி யின்பத்தையே விரும்புவதாகும். அவ்வித தகுதியுடையாளாகிய நான் புலக்கக் கருதுவது முடியாததாகும் என்று கூறியதாயிற்று.

1286. காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை.

இதுவுமது.

(பரி.) இ-ள். காணுங்கால் தவறாய காணேன்=கொண்கனை யான் காணும்பொழுது அவன்றவறாயவற்றைக் காண்கின்றிலேன்—காணாக்கால் தவறல்லவை காணேன்=காணாதபொழுது அவையேயல்லது பிறவற்றைக் காண்கின்றிலேன்; எ-று.

செயப்படுபொருள் அதிகாரத்தான் வந்தது. முன்பு நானின்னொடுசொல்லிய தவறுகள் இதுபொழுது காணாமையிற் புலக்கிலேனென்பதாம். (சு)

விளக்கம் :—"காதலனை யான் பார்க்கும்பொழுது அவன் செய்யும் தவறுகளை யான் பார்ப்பதற்கு இல்லை அவனைக் காணாதபோது அவன் செய்த தவறுகளன்றி வேறு எவற்றையும் பார்ப்பதற்கு இல்லை" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தோழியே! காதலனைக் காணாக்காலத்து அவன் செய்த தவறுகளுக்காகக் கோபித்தல் வேண்டுமென்று எண்ணியிருந்தும் அவனைக் காணுங் காலத்து அவனிடத்து உள்ள விருப்பமிகுதியால் அவன் செய்த தவறுகளெல்லாம் முன்பெல்லாம் உன்னொடு சொல்லிக்கொண்ட வண்ணம் ஒன்றுந் தோன்றவில்லையாதலால் அவனிடத்துக் கோபிப்பதற்கு இல்லாமல் போயிற்று என்று கூறியதாயிற்று.



1287. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து

இதுவுமது.

(பரி.) இ-ள். உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரேபோல்=தம்மையீர்த்துக் கொண்டுபோதலறிந்துவைத்து ஒழுகுகின்ற புனலுட் பாய்வார்செயல்போல—பொய்த்தல் அறிந்த புலந்து என்=புலவி முடிவுபோகாமையறிந்துவைத்துக் கொண்கனோடு புலந்து பெறுவதென்! எ-று.

பாய்பவரென்பது ஆகுபெயர். பொய்த்தல்=புரைபடுதல். புலந்தாலும்

பயனில்லையென்பதாம். பொய்த்தலறிந்தேனென்பது பாடமாயின், உய்த்தலறிய ஓடுநீருட்பாய்வார்போல முடிவறியப் பண்டொருகாற் புலந்து முடியாமையறிந்தேன், இனி அதுசெயற்பாற்றன்றென வுரைக்க. (எ)

விளக்கம் :—"தம்மை ஈர்த்துக்கொண்டு போதல் அறிந்து இருந்தும் ஓடுகின்ற நீரினுள் பாய்பவருடைய செய்கைபோல் கோபித்து நிற்கும் நிலையில்லாமையைத் தெரிந்து இருந்தும் காதலனோடு கோபித்து அதனால் அடையும் பயன் யாதாகும்" என்று தலைவி கூறியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஓடுகின்ற நீரினுள் பாய்ந்தால் நம்மை இழுத்துச் செல்லும் என்று அறிந்து இருந்தும் அந்நீரினுள் பாய்ந்து இறந்துபோக முயல்பவர்போல் காதலனிடத்து முன்னொருகால் கோபித்தும் அக்கோபமானது நில்லாது அவனிடத்தையே காதல் கொண்டு புணரவேண்டியே இருந்ததால் இவ்வித கோபத்தைக் கொண்டு என்செய்வது. ஆதலால் அப்புலத்தலைச் செய்யாதிருத்தலே தகுதியென்று கூறியதாயிற்று.

1288. இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வ நின் மார்பு

தலைமகள் புணர்ச்சிவிதுப்பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.

(பரி.) கள்வ=வஞ்சகா !—களித்தார்க்கு இளித்தக்க இன்னாசெயினும் கள்ளற்றே = தன்னையுண்டுகளித்தார்க்கு இளிவாகத்தக்க இன்னாதவற்றைச் செய்யினும், அவரால் மேன்மேல் விரும்பப்படுவதாய கள்ளைப்போலும்—நின் மார்பு=எங்கட்கு நின்மார்பு; எ-று.

அவ்வின்னாதன=நாணின்மை, நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மையென் றிவை முதலாயின. எங்கட்கு நாணின்மை முதலியவற்றைச் செய்யுமாயினும் எங்களால் மேன்மேல் விரும்பப்படாநின்றதென்பதாம்,கள்வவென்றதும் அதுநோக்கி. (அ)



விளக்கம் :—"ஓ! வஞ்சகா! தன்னை யுண்டு களிப்பினையடைந்தவர்க்கு இழிவைக் கொண்டுவரும் துன்பங்களைச் செய்யுமாயினும், அக் குடித்தவர்களால் மேலும் மேலும் விரும்பப் படுகின்ற கள்ளைப்

போலும் எங்களுக்கு உன்னுடைய மார்பு இருக்கின்றது" என்று தலைமகளது புணர்ச்சி விழைவினை அறிந்த தோழியானவள் தலைமகனுக்குக் கூறியதாக இத்திருக்குறள் கூறாநின்றது. அதாவது, "ஓ! வஞ்சகா! கள்ளையுண்ட ஒருவனுக்கு அவன் உண்ட கள்ளானது நாணமில்லாமை, மறைதலில்லாமை, ஒழுக்கமில்லாமை, உணர்வு இல்லாமை என்று இவை முதலாய பல கெடுதிகளைச் செய்யுமாயினும், அதனைக் குடியாத காலத்து அவையெல்லாம் அறிந்து இருந்தும் மேலும் மேலும் கள்ளைப்ப குடிக்கக் கள்குடியன் விரும்புவதுபோல் உன்னுடைய மார்பானது எங்களுக்கு நாணின்மை முதலாகிய தீங்குகளைச் செய்தும் அதையே விரும்பச் செய்கின்றது. ஆதலால், இஃதோர் வஞ்சகமாக உள்ளது" என்று சொல்லியதாயிற்று.

1289. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

உணர்ப்புவயின்வாரா வூடற்கட் டலைமகன்சொல்லியது.

(பரி.) இ-ள், காமம் மலரினும் மெல்லிது = காமவின்பம் மலரினுமெல்லிதாயிருக்கும்,— அதன்செவ்வி தலைப்படுவார் சிலர் = அங்ஙனம் மெல்லிதாதலையறிந்து அதன் செவ்வியைப் பெறுவார் உலகத்துச் சிலர். எ-று.

தொட்டதுணையானே மணச்செவ்வியழிவதாய மலர் எல்லாவற்றினும் மெல்லிதென்பது விளக்கலின், உம்மை சிறப்பின்கண்வந்தது. குறிப்பும், வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும், ஒருகாலத்தின்கண்ணே யொத்து நுகர்தற்குரியாரிருவர் அதற்கேற்ற இடனுங் காலமும் உபகரணங்களும் பெற்றுக் கூடிநுகரவேண்டுதலின் 'அதன் செவ்வி தலைப்படுவார் சிலர்' என்றும், அவற்றுள் யாதானுமொன்றனுற் சிறிது வேறுபடினும் வாடுதலின் 'மலரினுமெல்லிது' என்றுங் கூறினன். குறிப்பொவ்வாமையின் யானது பெறுகின்றிலேனென்பதாம். தலைமகளூடறீர்வது பயன். (க)

விளக்கம்:— தலைமகன் தனது குற்றமில்லாமையைத் தலைவிக்கு உணர்த்தவும் தன் வழிவாராது கோபங்கொண்டிருந்த காலத்து அவள் கோபம் தீர்வதின் பயனாக "காம இன்பமானது மலரைக் காட்டிலும் மெல்லியதாயுள்ளது. அவ்விதம் மெல்லியதாய் இருப்பதை

அறிந்து அதனைக் காதைத்தில் பொவார் உலகத்துச் சிலராகவே இருக்கின்றனர்" என்று கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தொட்ட அளவிலேயே மணத்தின் தன்மை அழியக்கூடியதாயும், எல்லாவற்றினும் மெல்லியதாயுமுள்ள மலரைக் காட்டிலும் காம இன்பமானது மிகுதியும் மெல்லியதாக உள்ளது. அவ்வித சிறப்பினையுடையதாயுள்ள இன்பத்தினைக் குறிப்பாலும் விருப்பத்தாலும் அனுபவிக்கும் தன்மையாலும் ஒரு காலத்தே ஒத்து அனுபவிக்க வேண்டிய இருவர் அதற்கு ஏற்ற இடத்தினையும் காலத்தினையும் மலரணை முதலிய உபகரணங்களையும் பெற்றுக் கூடி அனுபவிக்கவேண்டியுள்ளதாதலின் அவ்வித இன்பத்தை அறிந்து அனுபவிப்பார் சிலரென்றும், அவ்வித அனுபவத்தை யான் பெறுவதற்குத் தலைவியின் குறிப்பு ஒவ்வாதிருத்தலால் யான் அதனைப் பெறுவதற்கு இல்லாதவனாய் உள்ளேன் என்றும் தலைவன் கூறியதாயிற்று.

**1290. கண்ணிற் றுனித்தே கலங்கினள் புல்லுத**
**லென்னினுந் தான்விதுப் புற்று.**

இதுவுமது.

(ப.ரி.) இ-ள். கண்ணின் துனித்தே=காதலி முன்னொரு ஞான்று புல்லல் விதுப்பினாற்சென்ற என்னொடு தன் கண் மாத்திரத்தானூடி-புல்லுதல் என்னினும் தான்விதுப்புற்றுக் கலங்கினள்=புல்லுதலை என்னினும் தான் விதும்பலால் அது தன்னையும் அப்பொழுதே மறந்து கூடிவிட்டாள்; அதனால் யானித்தன்மையேனாகவும் விதுப்பின்றி யூடிநிற்கின்ற இவள் அவளல்லள்.

கண்மாத்திரத்தானூடல்=சொன்னிகழ்ச்சியின்றி அது சிவந்ததுணையே யாதல். அவளாயின் இங்ஙனமூடற்க ணீட்டாளென்பது பயன். (ம)

விளக்கம் :— "என் காதலி முன்னொரு நாள் புணர்ச்சி விழைவினால் அவளிடத்தே சென்ற என்னொடு தன்னுடைய கண் மாத்திரத்

தால் ஊடுதல் கொண்டு புணர்தலை என்னைக் காட்டிலும் தான் விரும்பி விரைதலால் அக்கண் மாத்திரத்தால் கோபித்த கோபத்தையும் அப்பொழுதே மறந்து என்னைக் கூடிவிட்டாள். அவ்வித விருப்ப முடையாள் யான் என் தவறு இன்மையைக் கூறி இவ்விதம் வணங்கி நிற்கவும் புணர்ச்சியில் விழைவின்றி கோபித்து நிற்கின்ற இவள் அவள் அல்லள்" என்று தலைவியினது சிறு பிணக்குத் தீர்வதின் பயனைத்



தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தான் எவ்வளவு தன் தவறின்மையைக் கூறியும் கோபம் தணியாதவளாக இருந்த தலைவியை நோக்கி இவள் என் காதலியாகக் காணப்படவில்லை. யாரோ வேறொருத்தியாகக் காணப்படுகின்றாள். ஏனெனில்? என் காதலி என்னிடத்து ஊடல் கொள்வாளாயின் அவ்வூடலை யாதொருசொல்லாலும் கூறாது கண்மாத்திரம் சிவந்து காட்டிப் பின்னர் அக்கோபத்தையும் மறந்து என்னினும் விரைந்து கூடுவது இயல்பாதலால் இவ்விதம் தணியாது நிற்கின்ற கோபத்தையுடைய இவள் அவளாக இருப்பதற்கு இல்லை என்று கூறியதாயிற்று

---

## 130. அதிகாரம்.

---

## நெஞ்சொடுபுலத்தல்.

(பரி) அஃதாவது காரணமுண்டாயவழியும் புலக்கக்கருதாது புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும், தலைமகன் புலத்தலுமாம். அதிகாரமுறைமையும் இதனுனே விளங்கும்.

விளக்கம் :—அதாவது கோபிக்கக் காரணமுண்டான இடத்தும் கோபிக்க எண்ணாமல் புணர்ச்சியினிடத்தே விரைகின்ற நெஞ்சுடனே

தலைமகள் கோபித்தலும், தலைமகன் கோபித்தலும் ஆம். மேல் புணர்ச்சி விதும்பலால் தம் தன்மையை எடுத்துக்கூறிய தலைமகனும் தலைமகளும் இப்போது அப்புணர்ச்சியை விதும்புகின்ற நெஞ்சொடு புலக்கின்றாராதலால் புணர்ச்சி விதும்பல் என்னும் அதிகாரத்திற்குப் பிறகு நெஞ்சொடுபுலத்தல் என்னும் இவ்வதிகாரம் வைக்கப்பட்டுள்ளது.

1291. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது.

தலைமகன்கட் டவறுண்டாயவழியும் புலவிகருதாத
நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது.

(பரி.) இ-ள். நெஞ்சே = நெஞ்சே! — அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல்கண்டும் = அவருடைய நெஞ்சு நம்மை நினையாது அவர்க்காய்நிற்றல் கண்டுவைத்தும், — நீ எமக்கு ஆகாதது எவன் = நீ யெமக்காய் நில்லாது அவரை நினைத்தற் காரணம் யாது ? எ-று.



அவர்க்காதல் = அவர் கருதியதற்குடம்படுதல், எமக்காகாததென்றது புலவிக்குடம்படாமையை. ஒரு கருமத்தைத் தாமாகவறிந்து செய்யமாட்டாதார் செய்வாரைக் கண்டாயினுஞ் செய்வர், நீ அதுவுஞ்செய்கின்றிலையென்பதாம். (க)

விளக்கம்: - "நெஞ்சே அவருடைய நெஞ்சானது நம்மை நினையாமல் அவர் தன்மையாய் நிற்பதைப் பார்த்துவைத்தும் நீ எம்முடைய விருப்பத்தின் வண்ணம் எமக்காக நிற்காது அவரை நினைத்தல் காரணம் யாது? " என்று தலைமகனிடத்தே தவறுகண்ட காலத்தும் கோபித்தலை எண்ணாத நெஞ்சினை நோக்கித் தலைமகள் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைமகளானவள் ஓ! நெஞ்சே! தலைவருடையநெஞ்சானதுநம்மைச் சிறிதும் நினையாது அவர் எண்ணிய வழியே

செய்வதற்கு அவரோடு கூடியிருக்க, நீ அவ்விதம் என்னோடுகூடி என் வழியில் நில்லாது அவரைவிடாது நினைக்கின்றாய். அதற்குக் காரணம் யாதென அறிகிலேன். இவ்விதம் ஒரு கருமத்தைத் தாமாக அறிந்து செய்யமாட்டாதவர் செய்வாரைப்பார்த்தாயினும் அக்கருமத்தைச் செய்வர். நீயோ அவர் செய்வதைப் பார்த்தும் அவ்விதம் செய்யத் தெரிந்து கொள்ளவில்லை என்று தன் நெஞ்சைப் புலவிக்கு உடன்படுத்த வேண்டித் தலைமகள் கூறியதாயிற்று.

1292. உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு.

இதுவுமது.

(பரி.) இ-ள். என்னெஞ்சு=என்னெஞ்சே!—உறாதவர்க் கண்ட கண்ணும்=மேலும்நம்மாட்டன்புடையராகாதவரைஉள்ளவாறறிந்தவிடத்தும்,—செறாரென அவரைச் சேறி=நாஞ்சென்றால் வெகுளாரென்பதுபற்றி நீ யவர் மாட்டுச் செல்லா நின்றாய், இப்பெற்றியதுமேலுமோ ரறியாமையுண்டோ!

அவரையென்பது வேற்றுமைமயக்கம். பழங்கண்ணோட்டம்பற்றி வெகுளாரென்பது கருதாகச் சென்றாய், நீ கருதியது முடியுமோவென்பதாம். (உ)

விளக்கம்:—"என் நெஞ்சே! மேலும் நம்மிடத்து அன்புடையர் ஆகாத தலைவரை உள்ளவாறு அறிந்தவிடத்தும் நாம் சென்றால் அவர் கோபியார் என்பதைக் கருதி நீ அவரிடத்துச் செல்லுகின்றாய்.



இவ்வித தகுதியைக்காட்டிலும் ஓர் அறியாமை என்பது உண்டோ?" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நெஞ்சே! நம்மிடத்து அன்பில்லாத தலைவரிடத்து நீ பழைய கண்ணோட்டத்தையே உறுதியாகக் கொண்டு நாம் வலியச் சென்றால் நம்மைக் கோபியார் என்று சென்றாய். அவ்விதம் வலிந்துசென்றாலும் நீ எண்ணியது முடியுமோ என்று தன் நெஞ்சுடன் கோபித்துக் கூறியதாயிற்று.

1293. கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

இதுவுமது.

(பரி.) இ-ள். நெஞ்சே=நெஞ்சே!—நீ பெட்டாங்கு அவர்பின் செலல்=என்மாட்டுநில்லாது நீ விரும்பியவாறே அவர்மாட்டுச் செல்லுதற்குக் காரணம்—கெட்டார்க்கு நட்டார் இல்லென்பதோ=கெட்டார்க்கு நட்டார் உலகத்தில்லையென்னுநினைவோ, நின்னியல்போ, கூறுவாயாக. எ-று.

என்னைவிட்டு அவர்மாட்டுச்சேறல் நீ பண்டேபயின்றதென்பாள் 'பெட்டாங்கு' என்றும், தானிதுபொழுது மானமிலளாகலிற் 'கெட்டார்க்கு' என்றுங் கூறினாள். பின்னென்பது ஈண்டிடப்பொருட்டு. செலலென்பது ஆகுபெயர். *"ஒல்கிடத் துலப்பிலா வுணர்விலார் தொடர்"பாயிற்று நின்றொடர் பென்பதாம். (கூ)

விளக்கம்:—"நெஞ்சே! என்னிடத்து நில்லாது நீ விரும்பியவிதமே அவரிடத்துச் செல்லுதற்குக் காரணம் கெட்டவர்களுக்கு நட்பினர் உலகத்தில் இல்லை யென்கின்ற நினைவோ, அல்லது உன்னுடைய இயற்கையோ, சொல்லுவாயாக" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது: அதாவது, நெஞ்சே! நீ என்னைவிட்டு அவரிடத்துச் செல்லல் நீ பழைமையாகவே பழகிய பழக்கமாதலால் யான் இப்பொழுது நாண் இழந்து நிற்கின்ற என் தகுதியைக்கண்டு காமத்துன்பத்தால் துன்பப்படுகின்ற இவளிடத்து நாம் கூடியிருத்தலால் என்ன பலன் என்று எண்ணி அவரிடத்துச் சென்றுப்போலும்! இவ்வித தகுதியுடைய உன்னுடைய நட்பு துன்பப்படுகின்ற காலத்து அறிவிலாதவரது நட்பினைக் கொண்டதுபோலுள்ளது என்று கூறியதாயிற்று.

---

* கலி, பாலை, 25.

1294. இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

இதுவுமது.

(பரி.) இ-ள். நெஞ்சே=நெஞ்சே!—துனி செய்து மற்றுத் துவ்வாய்= நீயவரைக் கண்டபொழுதே இன்பநுகரக் கருதுவதல்லது அவர்தவறுநோக்கி முன் புலவியையுண்டாக்கி அதனையளவறிந்து பின்னுகரக்கருதாய்,—இனி அன்னநின்னொடு சூழ்வார் யார்=ஆகலான், இனி யப்பெற்றிப்பட்டவற்றை நின்னோடெண்ணுவார் யார்? யானதுசெய்யேன். எ-று.

அப்பெற்றிப்பட்டன=புலக்குந் திறங்கள். காணென்பது உரையசை. மற்று வினைமாற்றின்கண் வந்தது. முன்னெல்லாம் புலப்பதாகவெண்ணி யிருந்து பின் புணர்ச்சிவிதும்பலின், இவ்வாறு கூறினள். (ச)

விளக்கம்:—"நெஞ்சே! நீ அவரைப பார்த்தகாலத்து இன்பம் அனுபவிக்க எண்ணுவதேயல்லாமல அவர் தவறுகளை நோக்கி முன் சிறுபிணக்கினை உண்டாக்கி அச்சிறுபிணக்கினை அளவு அறிந்து நீக்கிப் பின்னர் இன்பம் அனுபவிக்க எண்ணமாட்டாய் ஆதலால், இனி அவ் வித தகுதியையுடைய புலவியை உண்டாக்குதலை உன்னோடு எண்ணு வார் யார்? யான் அது செய்யேன்" என்று தலைவி கூறியதாக இத்திருக் குறள் கூறுகின்றது அதாவது, நெஞ்சே! தலைவரைக் காண்பதற்கு முன்னெல்லாம் அவர் தவறுகளுக்காக அவரிடத்துக் கோபிக்க எண்ணி யிருந்த நீயே அவரைக் கண்டவுடன் சிறிதும் கோபிக்கக் கருதாது புணர்ந்து இன்பத்தை அனுபவிக்க எண்ணுவையாயின், அவ்வித தகுதி யுடைய உன்னோடு தலைவரிடத்துக் கோபிக்கும் திறங்களை ஆலோசிப்ப தால் பயன் என்ன? என்று கூறியதாயிற்று.

1295. பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு.

வாயிலாகச் சென்ற தோழிகேட்பத் தலைமகள் சொல்லியது.

(பரி.) இ-ள். பெறாமை அஞ்சும்=காதலரைப் பெறாத ஞான்று அப் பெறாமைக்கஞ்சாநின்றது—பெறின் பிரிவு அஞ்சும்=பெற்றக்கால்வரக்கடவ

பிரிவினையுட்கொண்டு அதற்கஞ்சாநின்றது-என்னெஞ்சு அறு இடும்பைத்து = ஆகலான், என்னெஞ்சம் எஞ்ஞான்றும் நீங்காதவிடும்பையையுடைத்தாயிற்று. எ - று.



காதலரைப் பெற்றுவைத்துக் கலவி யிழத்தல் உறுதியன்றென்னுங்கருத்தான் வாயினேர்கின்றாளாகலிற் 'பெறாமையஞ்சும்' என்றும், கலவியாராமையின் இன்னும்வர்பிரிவாராயின் யாது செய்துமென்பது நிகழ்தலிற் 'பெறிற் பிரிவஞ்சும்' என்றும், இவ்விரண்டுமல்லாத பிறிதின்மையின் எஞ்ஞான்றும் அறுவிடும்பைத்து' என்றுங் கூறினாள். (௫)

விளக்கம்:—"காதலரைப் பெறாதகாலத்து அப்பெறாத தன்மைக்காக அஞ்சுகின்றது; பெற்ற இடத்து வரக்கடவதாகிய பிரிவினைத் தன்னுள் கொண்டு அப்பிரிவிற்கு அஞ்சுகின்றது; ஆதலால் என் நெஞ்சமானது எக்காலத்தும் நீங்காத துன்பத்தை அடைந்ததாயிற்று" என்று தன்னிடத்துத் தூதாக வந்த தோழியானவள் கேட்கும்படித் தலைமகள் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவியானவள் என் நெஞ்சானது காதலர் வாராத காலத்து அவர் வாராமையைக் கருதியும், வந்தவிடத்து பிரிந்து போவாரோ என்பதைக் கருதியும் அஞ்சுகின்றது என்று காதலர் வந்த விடத்தும் கலவியால் இன்பம் அநுபவியாது கலவியினை யிழத்தல் உயிர்க்கு உறுதி அன்று என்னும் தோழியின் கருத்துக்கு இணங்கினாள் போன்று வாராதகாலத்துத் தனக்குள்ள பிரிவாற்றாமையை வந்த காலத்துக் கலவியால் உண்டாகும் இன்பமானது நிறையாமையின் பிரிந்து போவரோ என்னும் துன்பத்தையும் உணர்த்தி, இவ்விரண்டும் அல்லாது வேறொன்றும் தனக்கில்லையென்று தன் குறிப்பினைத் தன் நெஞ்சின் மேல் ஏற்றிக் கூறினாளாயிற்று.

1296. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு.

இதுவுமது.

(பரி.) இ - ள். என்னெஞ்சு இருந்தது = என்னெஞ்சு ஈண்டிருந்தது—

தனியே இருந்து நினைத்தக்கால்=காதலரைப் பிரிந்திருந்து அவர் கொடுமைகளை யான்றன்னொடு நினைத்தக்கால்—என்னைத்தினிய=அவ்வளவறிந்து என்னைத் தினபதுபோன்று துன்பஞ் செய்தற்கே. எ - று.

என்மாட்டிருந்தது அன்று அவர்கொடுமைகளை யுட்கொண்டு எனக் காற்றுமைசெய்தற்கே ; இன்று அவைநோக்கி அவரோடு புலத்தற்கன்றென்பதாம். (சு)

விளக்கம்:—"என் நெஞ்சமானது இங்கே இருந்தது காதலரைப் பிரிந்து இருந்து அவருடைய கொடுமைகளை யான் தன்னொடு நினைத்த



இடத்து நினைத்த அவ்வளவினையறிந்து என்னைத் தின்பனபோன்று துன்பஞ் செய்வதற்கேயாகும்" என்று தூதாக வந்த தோழி கேட்கும் வண்ணம் தலைமகள் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது அதாவது, தலைமகளானவள், "தோழியே! என் நெஞ்சம் என்னுடன் இருந்து என் தலைவர் எனக்குச் செய்த கொடுமைகளை நினைந்து நினைந்து நிற்குந்தோறும் எனக்கு ஆற்றுமை செய்தவர்க்கேயன்றி இன்று அவர் கொடுமைகளை நோக்கி அவரோடு புலத்தற்கு அன்று" என்று காதலரிடத்துப் புணர்ச்சி விரும்புதலைக் கூறியதாயிற்று.

1297. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணு மடநெஞ்சிற் பட்டு.

இதுவுமது.

(பரி.) இ - ன். அவர் மறக்கல்லா என் மாணு மடனெஞ்சிற் பட்டு= தன்னை மறந்த காதலரைத் தான்மறக்கமாட்டாத என்மாட்சிமையில்லாத மடநெஞ்சுடனே கூடி,—நாணும் மறந்தேன்=என்னுயிரினுஞ்சிறந்த நாணினையும் மறந்துவிட்டேன். எ - று.

மாணுமை=ஒரு நிலையினில்லாமை மடமை=கண்டவழி நினைந்து காணுத வழி மறக்கும் தவற்றைக் காணுவழிநினைந்து கண்டவழி மறத்தல். நாண்=எஞ்ஞான்றுங் கூடியொழுகினும் அஞ்ஞான்று கண்டார்போன்றொடுங்குதல். கண்டபொழுதே புணர்ச்சி விதும்பலின், அதனையுமறந்தேனென்

முன். (எ)

விளக்கம்:—"தன்னை மறந்துவிட்ட காதலரைத் தான் மறத்தற்கு முடியாத என் மாட்சிமையில்லாத மடமை தங்கிய நெஞ்சுடனே யான் கூடியதால் என் உயிரினும் சிறந்ததாகிய நாணத்தினையும் மறந்துவிட்டேன்" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒரு நிலையில் நில்லாது தலைவனைக் கண்டவிடத்து அவன் செய்த தவறுகளை நினைத்தும் காணாத இடத்து மறந்தும் இருக்கவேண்டியிருக்கத் தலைவனைக் காணாத இடத்து நினைத்தும் கண்ட இடத்து மறந்தும் அறியாமை மேற்கொண்ட நெஞ்சுடனே கூடியதால் இக்காலத்தும் கூடிப் பொருந்தினும் ஒவ்வோர் நாளும் அன்றே புதிதாகக் கண்டது போன்று ஒடுங்குகின்ற நாணத்தையும் இழந்து கண்ட பொழுதே புணர்ச்சியினை விரைதலாயிற்று என்று காதலனிடத்துத் தனக்கு உள்ள மனநிலையைக் கூறியதாயிற்று.

நெஞ்சொடுபுலத்தல் 193

1298. எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு.

இதுவுமது.

(பரி.) இ - ள். உயிர்க் காதல் நெஞ்சு=உயிர்மேற் காதலையுடைய என் நெஞ்சு,—எள்ளின இளிவு ஆம் என்று எண்ணி=நம்மையெள்ளிச்சென்றாரென்று நாமுமெள்ளுவேமாயிற் பின்னமக்கிளிவாமென்று கருதி,—அவர் திறம் உள்ளும்=அவர் திறத்தினையே நினையாநின்றது. எ - று.

எள்ளுதல்=வாயின்மறுத்தல். இளிவு=வழிபடாமையானும், பிரிவாற்றாமையானும், காணும் நிறையுமுதலியவிழதலானும் உளதாவது. திறம்=வாயினேர்தலும் வருதலும் கூடலு முதலாயின. இளிவிற்கஞ்சுதலானும் இறந்துபடமாட்டாமையானுங் கூடக் கருதாநின்றதென்பதாம். (அ)

விளக்கம்:—"உயிர்மீது ஆசைகொண்டு நிற்கின்ற என் நெஞ்சானது காதலர் நம்மை இகழ்ந்து சென்றாரென்று நாமும் அவரை இகழ்ந்து நிற்போமாயின் பின்னர் நமக்கே அது இழிவைத் தரும் என்று எண்ணி அவர் திறத்தினையே நினையா நிற்கின்றது" என்று தலைவி

கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! அவர் தம்மை நினையாது பிரிந்து சென்றாரேனும் அதனை நாம் எண்ணி அவர் அனுப்பிய தூதினை மறப்போமாயின், வழிபடாது நின்றமையாலும் பிரிவாற்றாமையாலும் நாணத்தையும் நிறையினையும் இழந்து நிற்க வேண்டி வருமாதலால் இனி அவர் அனுப்பும் தூதிற்குச் சம்மதித்தலும் வருதற்கு உடன்படுதலும் கூடுதற்கு எண்ணுதலும் செய்தல் வேண்டும். ஏனெனின்? இழிவிற்கு அஞ்சுதலாலும் இறந்துபட மாட்டாமையாலும் என்னெஞ்சானது காதலரைக் கூடல் கருதுகின்றது என்று கூறியதாயிற்று.

**1299. துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய**
**நெஞ்சந் துணையல் வழி.**

உணர்ப்புவயின்வாரா வூடற்கண் தலைமகன் சொல்லியது.

(பரி.) இ-ள். துன்பத்திற்கு = ஒருவர்க்குத் துன்பம் வந்துழி, அது நீக்குதற்கு,—தாம் உடைய நெஞ்சம் துணையல்வழி = தாமுரித்தாகப் பெற்ற தம்முடைய நெஞ்சம் துணையாகாவழி,—துணையாவார் யாரே = வேறு துணையாவார் ஒருவருமில்லை. எ - று.





ஈண்டுத் துன்பமாவது ஊடலுணர்ப்புவயின் வாராமை. அதற்கு நெஞ்சந் துணையாகாமையாவது அவளையன்பிலளென்றொழியாது கூடற்கண்ணே விதும்பல். ஒரு துணையுமின்மையின், இஃதாற்றவிடுதலே யுள்ளதென்பதாம்.

விளக்கம்:—"ஒருவர்க்குத் துன்பம் வந்த காலத்து அதனை நீக்குதற்குத் தமக்கு உரித்தாகிய தம்முடைய நெஞ்சமே துணையாகாத இடத்து வேறே துணையாக இருக்கவோ ஒருவரும் இல்லை" என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவனானவன் தன் தவறின்மையைக் கூறி வணங்கிய இடத்தும் தன் வழி வாராத தலைவியினை நெஞ்சானது அவள் அன்பில்லாதவள் என்று

பிணியாது நிற்பதைவிட்டு அவளைக் கூடுதற்கே விரும்புதலால் உடனிருந்து வாழும் நெஞ்சே துணையாக இல்லாது துன்புறுத்துவ தால் இந்நெஞ்சமானது அவளிடத்துப் பொருந்துவதாகவோ முடியும் என்று நெஞ்சொடு புலந்ததாயிற்று.

**1300.** தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.

இதுவுமது.

(பரி.) இ-ள். தாம் உடைய நெஞ்சம் தமர் அல்வழி=தாமுரித்தாக வுடைய நெஞ்சம் ஒருவர்க்குத் தமரல்லாவழி,—ஏதிலார் தமர் அல்லர் தஞ்சம்=அயலார் தமரல்லாதல் சொல்லவேண்டுமோ! எ-று.

பிறனொருத்தியைக் காதலியென்று கருதி என்னெஞ்சே என்னை வருத்தாநின்றபின் அப்பிறள் புலக்கின்றதெளிதென்பதாம். (ம)

விளக்கம்:—"தமக்கு உரிமையாக உடைய நெஞ்சமானது ஒருவருக்குச் சுற்றமாக இல்லாவிடின் அயலவர் சுற்றமல்லாதவராய் ஆகின்றமையைச் சொல்லுதலும் வேண்டுமோ" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தான் எவ்வளவோ தன் தவறின்மையைக் கூறியும் தன் வழிவாராத பிறள் ஒருத்தியைக் காதலியென்று எண்ணி என் நெஞ்சமே என்னை வருத்துமாயின் பிறளாக உள்ள அவள் என்னிடத்துப் புலந்து என்னைத் துன்புறுத்துவது மிக எளிமையன்றோ என்று தன் நெஞ்சம் தனக்காகாததனால் அதனோடு புலப்பதுபோல் கூறியதாயிற்று.

---

## புலவி 

### 131 அதிகாரம்

---

(பரி) அஃதாவது இருவர் நெஞ்சும் புணர்ச்சிவிதுப்பாது புலக்கக் கருதிய வழி ஒருவரோடொருவர் புலத்தல், அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம் — தலைமகள் தலைமகனுகிய இருவருடைய நெஞ்சும் புணர்ச்சியினிடத்தே விரையாது கோபிக்க எண்ணிய விடத்து ஒருவரோடொருவர் கோபித்தல். முன் அதிகாரத்தில் தம் வழி வாராத நெஞ்சுடனே கோபித்தாராதலால் ஒருவரோடொருவர் கோபித்தல் என்னும் பொருள் கொள்ளும் புலவி என்னும் அதிகாரம் இங்கு வைக்கப்பட்டுள்ளது.

1301. புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது

வாயில் வேண்டிச் சென்ற தோழி தலைமகன் வாயினேர்தற்பொருட்டு அவளோடு நகையாடிச் சொல்லியது.

(பரி.) இ - ள் அவர் உறும் அல்லல் நோய் சிறிது காண்கம் = அவ்வண்ணம் புலந்தாற் காதலர் எய்தும் அல்லனோயினை யாஞ்சிறிது காணக்கடவேம்;— புல்லாது இராப் புலத்தை = நீ அவரைவிரைந்து சென்று புல்லாதே இத்தொழிலை மேலிட்டுக்கொண்டிருந்து புலப்பாயாக எ - று.

அல்லனோய் = துன்பத்தைச் செய்யும் காமநோய் சிறிதென்றாள், புலவியை நீள விடலாகாதென்பது பற்றி. புலத்தையென்புழி ஐகாரம் "கடம் பூண்டொருகால்நீ வந்தை" * என்புழிப்போல முன்னிலைவினைவிகுதி. புலத்தி யென்பதூஉம் பாடம். புலவிக்குறிப்புக்கண்டு அவன்வழியளாய் நின்று காமுற்ற வருத்தம் அவருஞ் சிறிதுற்றறிதல் வேண்டுமென நகையாடி நேர்வித்தவாறு. (க)

விளக்கம் :—"தலைவியே! நீ காதலரிடத்தே விரைந்து போய் அணையாமல் புலத்தல் தொழிலை மேற்கொண்டு இருந்து புலப்பாயாக! அவரிடம் நீ கோபித்துக் கொள்வதால் காதலரடையும் துன்பத்

* கலி, குறிஞ்சி, 27.

தைச் செய்யும் காமநோயினை யாம் சிறிது பார்த்தல் கூடும்" என்று ஊடல் திருப்படிச் சென்ற தோழியானவள் தலைமகளும் தானும் வந்த தூதிற்குச் சம்மதிக்கும்படி அவளுடன் சிரித்துக் கொண்டு கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைமகளது புலவிக் குறிப்பைப் பார்த்து அவள் வழியளாய் நிற்பாள்போல் நகைத்து, ஓ! என் தலைவியே! தலைவர் பிரிந்து இருந்த காலத்து நாம் அடைந்த துன்பத்தைச் செய்யும் காமநோயினை அவரும் இப்போது சிறிது அடைந்து துன்புறுவதை நாம் பார்க்க விரும்புவதால் நீ அவரை விரைந்து சென்று அணையாமல் இப்போது கோபித்து இருப்பது போலவே இன்னும் சிறிது கோபித்துக்கொண்டு இருப்பாயாக! என்று தன் வழிப்படுத்த எண்ணிய தோழியானவள் கூறியதாயிற்று.

## 1302. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
## மிக்கற்றா னீள விடல்.

புலவியொழிந்து வாயினேரும்வகை அவள் சொல்லியது.

(பரி.) இ-ள். புலவி உப்பு அமைந்தற்று=புலவி கலவி இன்பஞ் செயற்கு வேண்டுமளவிற்றாதல் உப்புத் துய்ப்பனவற்றை இன்சுவையவாக்கற்கு வேண்டுமளவிற்றாதல் போலும்;—சிறிது நீளவிடல் அது மிக்கற்று= இனி அதனை யவ்வளவிற் சிறிதுமிகவிடுதல் அவ்வுப்பு அளவின்மிக்காற் போலும். எ-று.

நீளவிடல்= அளவறிந்துணராது கலவிமேலெழுந்த குறிப்பழுங்குமளவுஞ் செய்தல். சிறிது மீளவிடலாகாதென்றாள், கேள்விக்கின்றானாகலின். உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையின்றானாற்போலப் புலவிமிக்கவழிக் கலவி இன்பமின்றாமென்றமையின், இது பண்புவமை. (௨)

விளக்கம்:—" புலவி என்பது கலவியாகிய இன்பத்தைச் செய்தற்கு வேண்டும் அளவினைச்செய்தல், உப்பானது உண்ணும்

உணவுகளில் இனிய சுவைப்படுத்துதற்கு வேண்டும் அளவினைக் கொள்ளுதல் போலும். ஆதலால் இனி அப்புலவியினை வேண்டும் அளவாகக் கொள்ளாது சிறிது மிகவிடின் சுவையினை உண்டு பண்ணும் அவ்வுப்பினை அளவிற்கு மிகுதியாக உபயோகித்தல் போலும்" என்று தலைவிக்கு உள்ள கோபம் நீங்கித் தான் வந்த தூதிற்கு சம்மதிக்கும்படித் தோழி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்



றது. அதாவது, தோழியானவள், தலைவிஃப! கோபித்தல் என்பது கலவியினால் உண்டாகும் இன்பத்தை அனுபவித்தற்கு வேண்டியது ஒன்றாயினும் அக்கோபத்தைத் தலைவரிடத்து உபயோகிக்கும் காலத்து கலவியின் பொருட்டு அவனுக்கு எழுந்த குறிப்பு அடங்குவதற்குமுன் செய்தல் வேண்டுமேயன்றிச் சிறிது நீளவிடல் ஆகாது. ஏனெனின்? உப்பு மிகுந்த இடத்து உண்கின்ற உணவுகள் எவ்விதம் சுவைகெட்டுப் போமோ அதுபோல நீண்ட கோபங்கொள்ளுமிடத்து கலவியினாலுண்டாகும் இன்பமானது இன்பமாக இராது போய்விடும் என்று கூறித் தன் வழிப்படுத்தினாளாயிற்று

1303. அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.

பரத்தையர்டத்துநின்றும் வந்த தலைமகனோடு
தலைமகள் புலந்து சொல்லியது.

(பரி.) இ-ள். தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல் = தம்மைப்பெறாது புலந்தமகளிரைப் புலவி நீக்கிக் கலவாது ஆடவர் சேறல்,— அலந்தாரை அல்லல்நோய் செய்தற்று = பண்டே துன்பமுற்றழிந்தாரை அதன்மேலும் மிக்க துன்பத்தினைச் செய்தாற்போலும். எ-று.

பிறர்பாற்சேறலின் தம்மைப்பெறாது புலந்தடியிருக்கின்ற பரத்தையரைப்போய்ப் புலவிநீக்கிப் புல்லீராயின், அவராற்றாரென்பதாம். (௩)

விளக்கம்:—"தம்மை அடையாது கோபித்த பெண்களை அவர்க

என து கோபத்தை நீக்கி அவர்களோடு கலவாமல் ஆண்மக்கள் செல்லல் முன்னமே துன்பமுற்றவர்க்கு அதன்மேலும் மிகுந்த துன்பத்தைச் செய்ததுபோலாயிற்று" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறு கின்றது. அதாவது, தலைவியினது புலவி தீரும்படி அவளிடத்துவந்த தலைமகனைத் தலைமகள் கண்டு இவன் பரத்தையினிடத்தே இருந்து வந்தானாதலால் இவனோடு சிறிது கோபித்தல் வேண்டுமென்று எண்ணினவளாய் நீர் இப்போது அயலவரிடத்தே வந்தமையால் உம்மை அடையாது கோபித்து ஊடல் கொண்டு இருக்கும் பரத்தையரிடத்துச் சென்று புலவியை நீக்கி அவரை அணையீராயின் அவர் உமது பிரிவு ஆற்றாமையால் வருந்துவர். ஆதலால் அவரிடத்துச் சென்று அவரை ஆற்றுதல வேண்டும் என்று பிரிவாற்றாமையால் தனக்குண்டாகிய துன்



பத்தை பலர்க்கும் பொதுவாகிய மகளிரும் பிரிவு என்பது ஒன்று அறியாதவரும் ஆகிய பரத்தையர் மீது ஏற்றி இழித்துக் கூறிய தாயிற்று.

1304. ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

இதுவுமது.

(பரி.) இ - ள். ஊடியவரை உணராமை — தம்மோடூடிய பரத்தையரை யூடலுணர்த்திக் கூடாதொழிதல் — வாடிய வள்ளி முதல் அரிந்தற்று = பண்டே நீர்பெறாது வாடிய கொடியை அடியிலேயறுத்தாற்போலும். எ - று.

நீர் பரத்தையரிடத்திராயவழி எம்புதல்வரைக் கண்டாற்றியிருக்கற் பாலமாய யாம நம்மோடூடுதற்குரியமல்லம், அன்மையின் எம்மையுணர்த்தல் வேண்டா; உரியராயூடிய பரத்தையரையே உணர்த்தல்வேண்டுவது, அதனால் ஆண்டுச்சென்மினென்பதாம். (௪)

விளக்கம்:—"உம்மோடு ஊடல்கொண்ட பரத்தையர்களை ஊடல் கொள்ளாத விதமாக உம்முடைய தவறின்மையைக்கூறி அவர்கள் சம் மதிக்கும்படிச் செய்து அவர்களைக் கூடாது இருப்பீராயின், முன்னரே தண்ணீர் பெறாமல் வாடியிருக்கும் கொடி ஒன்றினை வேரோடு அறுத்து விட்டதுபோலாகும்" என்று பரத்தையரிடத்து இருந்துவந்த தலைமகனை நோக்கித் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நீர் பரத்தையரிடத்து இருக்க விரும்பி அவரோடு உள்ளகாலத்து எம் முடைய பிள்ளைகளைப்பார்த்து உமது பிரிவு ஆற்றாமையைப பொறுத்து இருக்கக்கூடிய தகுதியுடைய யாம் உம்மோடு ஊடல்கொண்டு ஊடுவத ற்குப் பாத்தியதை உடையோமல்லோம். அவ்விதம் அல்லாமையால் எம்மை உம்முடைய தவறின்மையைக்கூறிச் சம்மதிக்கச் செய்யவேண்டு வதில்லை. உம்மிடத்தே மிகுதியும் பாத்தியதையைக் கொண்டு உமது பிரி வாகிய தவறினைக்கண்டு ஊடல்கொண்ட பரத்தையரையேவணங்கிச் சம் மதிக்கச் செய்யவேண்டுவது. அவ்விதம் செய்யாவிடில் முன்னரே நீரில் லாமையால் வாடிய பசுங்கொடி ஒன்றினை வேரோடு அறுத்துவிட்டாற் போலாகும் ஆதலால் அப்பரத்தையரிடத்துச் செல்லல்வேண்டும் என்று தன் பிரிவாற்றாமையையும் தலைவன் பரத்தையரிடத்து இருந்த தகுதியின்மையையும் தலைமகள் கூறினளாயிற்று.



1305. நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.

தலைமகளைப் புலவிநீக்கிக் கூடிய தலைமகன் பண்ணுள்ளே சொல்லியது.

(பரி.) இ-ள். நலத்தகை நல்லவர்க்கு ஏர்=நற்குணங்களாற் றகுதி யுடையராய தலைவர்க்கும் அழகாவது,—பூ அன்ன கண்ணார் அகத்துப் புலத் தகை=தம்பூவன்னகண்ணார் நெஞ்சின் கண் நிகழும் புலவிமிகுதியன்றே.

சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. தவறில்லார்க்கும் புலவி இனிதென்

பான், 'நலத்தகை நல்லவர்க்கும்' என்றான். அழகு=இன்பப்பயனைத் தலைப்படுதல். தானுகர்ந்தவின்பத்திற்கேதுவாகிய புலவியை வியந்து கூறியவாறு.

விளக்கம்:—"நல்ல குணங்களால் தகுதியை யடைந்த தலைவர்களுக்கும் அழகாக இருப்பது தம் பூவினையே ஒத்த கண்களையுடைய பெண்களுடைய நெஞ்சினிடத்தே உண்டாகும் புலவியின் மிகுதியன்றோ?" என்று தலைமகளை அவள்கொண்ட கோபத்தினின்றும் நீக்கி அவளோடு கூடிய தலைமகன் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவியினது கோபத்தினால் தனக்கு நேர்ந்த இன்பத்தை மிகுதியும் வியந்து தவறுடையவர்களுக்கு மாத்திரம் தலைவியின் புலவி இனிதென்று கூறுவதற்கு இல்லை. தவறில்லாத தலைவர்களுக்கும் தலைவியின் புலவிவேண்டுவதாக உள்ளது. ஏனெனின்? புலவியில்லாத கலவி அத்துணை இன்பம் தருவதற்கு இல்லை என்று தலைவியின் புலவியையும் அதனால் தான் அடைந்த இன்பத்தையுங் கூறியதாயிற்று.

## 1306. துனியும் புலவியு மில்லாயிற் காமங்
## கனியுங் கருக்காயு மற்று.

இதுவுமது.

(பரி.) இ-ள். துனியும் புலவியும் இல்லாயின்=முதிர்ந்த கலாமாகிய துனியும் இளையகலாமாகிய புலவியும் இல்லையாயின்,—காமம் கனியும் கருக்காயும் அற்று=காமம் செவ்விமுதிர்ந்தபழமும் இளங்காயும்போலும். எ-று.

மிகமுதிர்ந்திறுமெல்லைத்தாய கனி நுகர்வார்க்கு மிகவுமினிமைசெய்யாதாதலிற் றுனியில்லையாயிற் கனியற்றென்றும், கட்டிளமைத்தாய காய் நுக



ருஞ்செவ்வித்தன்றாகலிற புலவியில்லையாயிற் கருக்காயற்றென்றுங் கூறினான் இவ்விரண்டும் வேண்டுமென்று வியந்து கூறியவாறு. (௬)

விளக்கம்:—"தலைவனுக்கும் தலைவிக்கும் ஊடலால் நீராத முதிர்ந்த கலகமாகிய துன்பமும், இளைய கலகமாகிய புலவியும் இல்லை யானால் காமமானது காலத்தால் முதிர்ந்த பழமும் இளமையாகிய காயும்போல் ஆகும்" என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறு கின்றது. அதாவது, தலைமகளது கோபத்தைத் தீர்த்துக் கூடிய தலை மகனானவன் மிகுதியும் முதிர்ந்து தானே அற்று விழக்கூடிய தகுதி யுடையதாகிய பழமானது உண்ணக்கூடியவர்க்கு எவ்வளவு மிகுதியாகிய இனிமையைச் செய்யுமோ அதுபோல் முதிர்ந்த கலகம் இல்லாத இடத்து இன்பம் அனுபவித்தல் உள்ளதென்றும், இளங்காயை உண்டால்உண்பார்க்கு எவ்விதம் இனிமைதாராதோ அதுபோல் சிறு கலகமாகிய புலவியென்பது இல்லாதவிடத்து அனுபவிக்கும் இன்பம் இனிமைதாராததாக உள்ளதென்றும் கூறியதால் காம இன்பம் அனுபவிப்பார்க்குத் தீராத கோபம் இல்லாமையும் தீர்கின்ற கோபம் இருத்தலும் ஆகிய இரண்டும் வேண்டுமென்று கூறியதாயிற்று.

## 1307. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
## நீடுவ தன்றுகொ லென்று.

இருவுமது.

(பரி.) இ-ள். புணர்வது நீடுவது (கொல்) அன்றுகொல் என்று=இனிப் புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோவென்று கருதலான்,—ஊடலின் ஓர் துன்பம் உண்டு=இன்பத்திற்கின்றியமையாத ஊடலின்கண்ணேயும் ஒரு துன்பநிகழும். எ-று.

என்றென்னுமெச்சத்திற்குக் கருதலானென்பது வருவிக்கப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது கொல்லென்பதனை நீடுவதென்பதனோடு ங் கூட்டுக. ஆங்கென்பது அசைநிலை. ஊடல் கூடற்கண் விரைவித்தல் கூறியவாறு.

விளக்கம்:—"இனி புணர்ச்சியானது நீட்டித்து நிற்குமோ அல்லது நீடியாது ஒழியுமோ என்று எண்ணுதலால் இன்பம் அனுபவிப்ப

தற்கு இருக்தே ஆகவேண்டிய புலவியின்கண்ணும் ஓர் துன்பம் நிகழ்தல் கூடும்'' என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது.



அதாவது, தலைமகனவன் தலைமகளைக் கூடியிடத்து இதற்குமுன் தலைவியிடத்து உண்டாகிய ஊடலால் அவள் கூடுதலை விரைவில் விரும்புவதை அறிந்து ஊடலானது புணர்ச்சியினிடத்து விரையும்படிச் செய்வதற்குக் கருவியாக உள்ளது என்று கூறியவாறாயிற்று.

1308. நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

உணர்ப்புவயின்வாரா வூடற்கட்டலைமகன் தலைமகளோடு
புலந்து சொல்லியது.

(பரி.) இ-ள். நொந்தாரென்று அஃது அறியும் காதலர் இல்லாவழி= இவர் நம்பொருட்டாக நொந்தாரென்று அந்நோவினையறியு மன்புடையாரைப் பெறுவழி,—நோதல் மற்று எவன்=ஒருவர் நோகின்றதனாற் பயனென்! எ-று.

அறிதல்=கண்டுடலை யினிதுணர்தல், மற்று வினைமாற்றின்கண்வந்தது. இவன் நங்காதலியல்லள், அன்மையின் இந்நோவறியாள், அறியாமையின் நாம் புலக்கின்றதனாற் பயனில்லையெனத் தன்னாற்றாமையுணர்த்தியவாறு.

விளக்கம்:—"இவர் நம்பொருட்டாக வருந்தினரென்று அவ்வருத்தத்தை அறியும் அன்பு உடையவரைப் பெறாத இடத்து ஒருவர் தமக்குத் தாமே வருந்துவதில் பயன் யாது'' என்று தலைவியை ஊடல் தீர்க்கும் பொருட்டுத் தன் தவறின்மையை எவ்வளவு வணங்கிச் சொல்லியும் தன் வழிவாராது ஊடிக்கொண்ட தலைமகளோடு தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைமகன் கோபித்து இவள் நம் காதலியாக இருப்பாளாயின் நம் பிரிவாற்றாமை

யால் இவர் வருந்துகின்றனர் என்று கருதுவள், இவள் நம் காதலியல் லள் ஆதலால் நம் வருத்தத்தை அறியாதவளாக இருக்கின்றாள். இவ் விதம் நம் வருத்தம் அறியாத இவளிடத்துக் கோபிப்பதால் யாதொரு பயனும் இல்லையெனத் தன் ஆற்றாமையை உணர்த்தியவாறாயிற்று.

## 1309. நீரு நிழல தினிதே புலவியும்
## வீழுநர் கண்ணே யினிது.

இதுவுமது.

(பரி.) இ-ள். நீரும் நிழலதே இனிது = உயிர்க்கின்றியமையாத நீரும் நிழலின் கண்ணதே இனிதாவது, ஏனை வெயிலின்கண்ணது ஆகாது;—புலவி





யும் வீழுநர் கண்ணே இனிது = அதுபோலக் கலவிக்கின்றியமையாத புலவியும் அன்புடையார் கண்ணே இனிதாவது, ஏனையன்பிலார்கண் ஆகாது. எ - று.

நிழற்கணிருந்த நீர் குளிர்ச்சிமிக்குத் தாகந்தணித்தலின் இனிதாயிற்று. வீழுநர் ஆற்றாமைக்கு நோதலுங் கூடுதற்கண் வேட்கையுமுடையராவார். இவள் கம்மாட்டு அவ்விரண்டுமின்மையின் இப்புலவிதானு மின்னாதாகாநின்ற தென்பதாம். (க)

விளக்கம்:—"உயிர்களுக்கு இருந்தே ஆகவேண்டிய தண்ணீரும் நிழலின் கீழ் இருப்பதாயின் இனிமையாகவே இருக்கும். அவ்விதமல் லாது வெயில் காயுமிடத்து இருப்பதானால் அது இனிமையுடைய தாகாது. அதுபோலவே கலவிக்கு இருந்தே ஆகவேண்டிய புலவி என் னும் சிறு கோபமும் அன்பு உடையாரிடத்துத் தோன்றுமாயின் இனி மையாகவே முடியும்,மற்றை அன்பில்லாதவரிடத்து அப்புலவி தோன்று மாயின் இனியது ஆகாமல் போகும்" என்று தலைவன் கூறியதாக இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நிழலிடத்தே உள்ள நீரானது எவ்வாறு குளிர்ச்சிமிகுந்து உண்பார்க்குத் தாகத்தை நீக்கி இனி மையாக உள்ளதோ, அதுபோல் தம்மை விரும்பும் காதலரிடத்தே

தோன்றும் பிரிவாற்றாமைக்கு வருந்துதலும் அவ்வருத்தம் நோக்கி காதலரைக் கூடுங்காலத்து விருப்பம் மிகுந்து இனிமைபடச் செய்வதும் அன்புடையாரிடத்துண்டாகும். அவ்வாறன்றி வெயிலிடத்தே இருந்த நீரினை உண்பார்க்கு எவ்விதம் தாகத்தைத் தணிக்கினும் அது இனிமை செய்யாதது போல் இவளிடத்து நம்முடைய வருத்தங்கண்டு வருந்துகின்ற தன்மையும் அவ்வருத்தங் கண்டு கூடுகின்ற காலத்து அக் கலவியை இனிமை படும்படிச் செய்யும் விருப்பமும் ஆகிய இரண்டும் இல்லாமையால் இவளிடத்தே தோன்றிய புலவிதானும் தீரும் கோபமாக இல்லாது துன்பத்தைத் தருவதாக உள்ளது என்று தன்வழிவாராத தலைவியை நோக்கித் தலைவன் கோபித்துக் கூறியதாயிற்று.

## 1310. ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

இதுவும் அது.

(பரி.) இ-ள். ஊடல் உணங்க = தானூடற்கண்ணே மெலியாநிற்கவும், —விடுவாரோடு கூடுவேம் என்பது என்னெஞ்சம் அவா = விட்டிருக்கவல்லா



ரோடுகூடக் கடவேமென்று என்னெஞ்சம் முயறற்கேது தன்னவாவே, பிறிதில்லை. எ-று.

அன்புமருளுமில்லாதாரை உடையரென்றும் அவரோடியாங் கூடுவமென்றுங் கருதி அதற்கு முயறல் அவாவுற்றார் செயலாகலின், 'கூடுவேமென்பதவா' என்றான். காரியம் காரணமாக வுபசரிக்கப்பட்டது. இக்கூட்டம் முடியாதென்பதாம். (௰)

விளக்கம்:—"தான் ஊடப்பட்டுத்தே வருந்தி நிற்கவும் தன்னைவிட்டுப் பிரிந்து இருக்க வல்லாரோடு புணர்வோமென்று என் நெஞ்சமானது முயற்சி செய்வதற்குக் காரணம் தனக்குள்ள ஆசையேயன்றி வேறொன்றும் இல்லையாகும்" என்று தலைவன் கூறியதாக இததிருக்குறள் கூறுகின்றது. அதாவது, அன்பும் அருளும் உடையார் ஊடல் கொள்வாராயின் அவ்வூடலால் உண்டாகும் பிரிவாற்றாமைக்கு வருந்துகின்ற காதலரைக் கண்டு இவர் நம்பொருட்டு இவ்விதம் வருந்துகின்றார் ஆதலின் இவரோடு கூடி இன்பம் உண்டாகும் கலவியை முடிப்போம் என்று கருதுவர். அவ்விதம் அல்லாது காதலர் பிரிவாற்றாமையால் வருந்தி நிற்கவும் ஊடி நின்று அன்பும் அருளும் இல்லாதவரை அன்பும் அருளும் உடையவரென்று எண்ணி அவரோடு யாம் கூடுதற்கு முயற்சி செய்தல ஆசைகொண்டார் செயல் ஒன்றே ஆகுமேயன்றிக் கூடிக் கலவி யின்பத்தை அனுபவிப்பதற்கு முடியாததாகும் என்பதாயிற்று.

---

## 132. அதிகாரம்

---

## புலவி நுணுக்கம்.

(பரி.) அது புலவியது நுணுக்கமென விரியும். அஃதாவது தலைமகனுந் தலைமகளும் ஓரமளிக்கட் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற்காரணமில்லை யாகவும காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணமுனதாக வுட்கொண்டு அதனை யவன்மேலேற்றி அவன் புலத்தல். காரணத்தினுணுக்கம் காரியத்தின்மேனின்றது. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது புலவியினுடைய நுணுக்கம் என்பதாம். அது என்னையோவெனின்? தலைமகனும் தலைமகளும் ஓர் படுக்கையில்

கூடியிருந்த காலத்து அத்தலைமகனிடத்தே கோபித்துக் கொள்வதற்கு யாதொரு காரணமும்இல்லாதிருக்கவும்,விருப்பமிகுதியால் வெகு நுட்பமாகிய ஒரு காரணம் இருப்பதாக மனத்துள்கொண்டு அக்காரணத்தையே அத்தலைவன்மீது சுமத்தித் தலைவி கோபித்தல் மேல் புலவி என்னும் அதிகாரத்தைக் கூறினராதலால் அதன் நுணுக்கத்தைப் புலவி நுணுக்கம் என்று இங்குக் கூறலாயினர்.

1311. பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொது[வுண்பர்
தண்ணேன் பரத்தநின் மார்பு.

உலாப்போய்வந்த தலைமகன் பள்ளியிடத்தானைத் தலைமகள் சொல்லியது.

(பரி.) இ-ள். பரத்த=பரத்தமை யுடையாய்,—பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்=நின்னைப் பெண்ணியல்பினையுடையார் யாவருந் தங்கண்ணாற் பொதுவாகவுண்பர்,—நின் மார்பு தண்ணேன்=அதனால் அவர்மிச்சிலாய நின்மார்பினைப் பொருந்தேன். எ-று.

கற்பு நாண் முதலிய நற்குணங்களின்மையிற் பரத்தையர்க்குள்ளது பெண்ணியற்கைமாத்திரமேயென்னுங் கருத்தாற் 'பெண்ணியலார்' என்றாள். பொதுவாகவுண்டல்=தஞ்சேரிச்செலவின் முறையானன்றிஒருகாலத்தொருங்கு நோக்குதல்: அதுவுமோர் குற்றம். தாநோக்கியின்புற்றவாறே அவரு நோக்கியின்புறுவரென ஆசங்கித்து அவர்பாற் பொறாமையெய்துதலின், நுணுக்கமாயிற்று. (க)

விளக்கம்:—"ஓ! பரத்தையர் நட்பு உடையாய்! உன்னைப்பெண் தன்மையுடையார் எல்லோரும் தம் கண்ணால் பொதுவாக ஒருகாலத்திலேயே யாவரும் ஒன்றாகப் பார்ப்பர். அவ்விதம் யாவரும் பார்த்துக் கழித்ததாகிய உன்னுடைய மார்பினை யான் பொருந்தேன்" என்று உலாவுதற்குப்போய் வந்த தலைமகனுனவன் படுக்கையிடத்துவந்து அமரவும் அவனைக் கண்ட தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது,தலைமகள் கற்பு,நாணம்முதலிய நற்குணங்கள் ஒன்றுமில்லாது

பெண் தன்மை ஒன்றே உடைய பரத்தையரது சேரியில் நீர் செல்லுங் காலத்து அப்பரத்தையர் யாவரும் ஒரு காலத்திலேயே உமது மார்பினை ஒருங்கே பார்த்தார்களாதலால் அவ்விதம் யாவரும் ஒருங்குகண்டு இன்பத்தையடைந்த அம்மார்பை யான் இப்போது பொருந்துவேனாயின் உண்டு கழிந்த மிகுதியை உண்டதுபோலாகுமாதலால் யான் அதைச்



செய்யேன் என்றாள். இதனால்தான் எவ்விதம் தலைவனது மார்பை நோக்கி இன்பத்தை அடைந்தாளோ அவ்விதம் அப்பரத்தையரும் அவன் மார்பைப் பார்த்து இன்பத்தை அடைந்திருப்பர் என்று சந்தேகித்து அப்பரத்தையரிடத்துப் பொறாமைகொண்டு புலக்கின்றாளாதலால் இவள் புலவி நுண்ணிய காரணங்கொண்ட நுணுக்கமாயிற்று.

1312. ஊடி யிருந்தேமாத் தும்மினா் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

தலைமகனிக்கந்துச் சென்ற தோழிக்குத் தலைமகள்
பள்ளியிடத்து நிகழ்ந்தது கூறியது.

(பரி.) இ-ள். ஊடி இருந்தேமாத் தும்மினார் = யாம் தம்மோடூடியுரையாடா திருந்தேமாகக் காதலர் தும்மினார், — யாம் தம்மை நீடுவாழ்கென்பாக்கு அறிந்து = அது நீங்கித் தம்மை நீடுவாழ்கென்றுரையாடுவேமாகக் கருதி.

தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலான், உரையாடல் வேண்டிற்றென்பதாம். இயல்பானிகழ்ந்த தும்மலைக் குறிப்பானிகழ்ந்ததாகக் கோடலின், நுணுக்கமாயிற்று. (உ.)

விளக்கம்:—"யாம் காதலரோடு ஊடல் கொண்டு பேசாதிருக்கவும் நம் காதலர் தும்மினார். ஏனெனின்? அவ்வூடல் நீங்கித் தம்மை நெடும்பொழுது வாழ்வீர் என்று வாழ்த்துவேம் என்று

எண்ணியே யாகும்" என்று தலைமகளைத் தலைமகன் நீங்கியிருந்த காலத்து அவளிடத்தே சென்ற தோழிக்குத் தலைமகள் படுக்கையிடத்து நிகழ்ந்ததைக் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைவியானவள் தன்னிடத்து வந்த தோழியை நோக்கி யான் தலைவரிடத்து நேற்று இரவு பேசாது கோபித்து இருக்கவும் அக் கோபத்தை நீக்கக் கருதிக் குறிப்பாகத் தும்மினர். ஏனெனின்? ஒருவர் தும்மும் காலத்து அவரிடத்து அன்பு கொண்டவர்கள் அவரை நெடும்பொழுது வாழ்தல் வேண்டுமென்று வாழ்த்துவது உலக வழக்காதலால் அவ்விதம் யானும் வாழ்த்துவேன் என்றும், அதனால் என் புலவியும் தீரும் என்றும் எண்ணியேயாகும் என்று கூறினளாயிற்று. இங்கு தலைவன் இயல்பாகவே தும்பியும் குறிப்பாகத் தும்மினனென்று தலைவிகொண்டதால் இது புலவியினுடைய நுணுக்கமாயிற்று.



1313. கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

தலைமகள் புலவிக்குறிப்பினைக் கண்டு நீவிர்கூடியொழுகா நிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

(பரி.) இ-ள். கோட்டுப்பூச் சூடினும் = யான் கோடுதலைச்செய்யு மாலையைச் சூடினேனாயினும், — ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று காயும் = நும்மாற் காதலிக்கப்பட்டா ளொருத்திக்கு இப்பூவணிகாட்டல்வேண்டிச் சூடினீரென்று வெகுளாநிற்கும்; இத்தன்மையாட்கு ஒரு காரணம் வேண்டுமோ? எ-று.

கோடென்பது முதனிலைத் தொழிற்பெயர். பூ — ஆகுபெயர். வினையமாகச் சூடினுமென்பதாம்; "கோட்டங் கணணியுங் கொடுந்திரை யாடையும்"* என்றார் பிறரும். இனி அம்மருதநிலத்துப்பூவன்றி வேற்றுநிலத்துக் கோட்டுப் பூவைச் சூடினேனாயினும் ஈண்டையாள் பிறளொருத்திக்கு அவ்வேற்றுப் பூவணி காட்டல்வேண்டிச் சூடினீரென்று வெகுளுமெனினு மமையும் (கூ)

விளக்கம்:—"யான் கோடுதலையுடைய மாலை யொன்றினைச் சூடி னாலும் உம்மால் விரும்பப்பட்ட காதலி யொருத்திக்குப் பூவின் அழகினைக் காண்பித்தல் வேண்டியே சூடிக்கொண்டீர் என்று கோபிக் கின்றனள். இவ்வித தகுதியுடையாளுக்குக் கோபித்தற்கு ஒரு காரண மும் வேண்டுமோ" என்று தலைமகளது கோபக்குங் குறிப்பினைத் தோழி பார்த்து தலைமகனை நோக்கி நீவிர் இருவரும் கூடி இருக்கவும் இவ்விதப் புலவி உண்டாவதற்குக் காரணம் எது என்று கேட்டதும் தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைமகனானவன் தோழியை நோக்கி ஓ! தோழியே! யான் வளையமாகச் சூடிக்கொள் ளும் பூவினாலாகிய மாலை ஒன்றினையேனும் அல்லது இம்மருத நிலத் துக்கு உரியதல்லாத வேற்று நிலத்திற்கு உரிய கொம்பிற் பூக்கும் பூவையேனும் சூடிக்கொள்வேனாயின், அதுகண்ட உன் தலைவியான வள் நீர் இவ்விதமாகிய மாலைகளை அணிதல் யாரோ பிறள் ஒருத்திக்கு இவ்வேற்று நிலத்துப் பூவினழகினைக் காண்பித்தல் வேண்டியே சூடிக் கொண்டீர் என்று கோபிப்பாளாயின் இவ்வித தகுதியுடையாளுக்குப்

புறநானூறு, 275.



புலத்தற்கு ஒரு காரணமும் வேண்டுமோ என்று புலவி நுணுக்கம் கூறியதாயிற்று.

1314. யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.

இதுவுமது.

(பரி.) இ-ள். யாரினும் காதலம் என்றேனா=காமநுகர்தற்குரிய இருவ ராயினார் யாவரினும் யாம் மிக்க காதலையுடையேமென்பது கருதி யாரினும் காதலமென்றேனாக,—யாரினும் யாரினும் என்று ஊடினாள்=இன்றோழி அது கருதாது, என்றற்காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளும் நுங்கட்காத

லுடையே னென்றேனாகக்கருதி, அம்மகளிர் யாரினும் என்கட் காதலுடைய ராயினீரென்று சொல்லிப் புலந்தாள். எ-று.

தலைமகன் கருத்திற்குத் தன்மைப்பன்மை உயர்ச்சிக்கண் வந்தது. யானன்புமிகுதியாற் சொல்லியதனைக் கருத்து வேறுபடக்கொண்டதல்லது பிறிதுகாரணமில்லையென்பதாம். (௪)

விளக்கம்:—"காம இன்பத்தை அனுபவித்தற்கு உரிய இருவரையினுள் எவரினும் யாம் மிகுந்த காதலை யுடையோம் என்பதை எண்ணி அவ்வெண்ணத்தை அவர் அறியவேண்டி நாம் யாவரினும் மிக்க காதலுடையோம் என்று கூறினேன். கூறுதலும், உனது தலைவி யான் சொல்லிய பொருள் இதுவென்று எண்ணாது என்னால் விரும்பப்பட்ட பெண்கள் பலருள்ளும் தன்னிடத்து அதிகமாகிய காதலுடையேன் யான் என்று கூறினேன் என்று பொருள் கொண்டு 'அப்பெண்கள் யாவரினும் என்னிடத்து அதிக விருப்பங் கொண்டீர் அன்றோ?' என்று சொல்லிக்கொண்டே கோபித்தாள்" என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைமகன் தன்னையும் தலைவியையும் உட்படுத்தி யாம் என்னும் பன்மைச் சொல்லால் கூறுதலும், அது கருதாது யாம் என்னும் சொல்லைத் தன்மைப்பன்மை யுயர்ச்சிக்கண் வந்ததாகப் பொருள்கொண்டு யான் அன்பு மிகுதியால் சொல்லிய சொல்லைக் கருத்து வேறுபடக்கொண்டு அதனால் வெகுள்வாளாயின் அவ்வித தகுதியுடையாள் ஒருத்திக்குப் புலப்பதற்குக் காரணமும் வேண்டுமோ என்று தலைவியினது புலவியின் நுணுக்கத்தைக் கூறியதாயிற்று.



1315. இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

இதுவுமது.

(பரி.) இ-ள். இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனா=காதன்மிகுதி யான் இம்மையாகிய பிறப்பின்கண் யாம் பிரியேமென்று சொன்னேனாக,—

கண் நிறை நீர் கொண்டனள் = அதனுன் எனமறுமையாகிய பிறப்பின்கட் பிரிவலென்னும் குறிப்பினேனுகக் கருதி, அவள் தன் கண்ணிறைந்த நீரினைக் கொண்டாள். எ-று.

வெளிப்படுசொல்லைக் குறிப்புச்சொல்லாகக் கொள்கின்றதல்லது என்பாற் றவறில்லை யென்பதாம். (௫)

விளக்கம் :—" விருப்பமிகுதியால் இம்மையாகிய இப்பிறப்பின் கண் யாம் ஒருவரை யொருவர் விட்டுப் பிரியமாட்டோம் என்று சொன்னேன். சொல்லுதலும் அச்சொற்களைக் கேட்ட தலைவி அவ்விதமாயின் மற்றை மறுமையாகிய பிறப்பினிடத்தே தன்னைப் பிரிந்து விடுவேன் என்று சொல்லியதாகக் கருதி அவள் தன் கண்களில் நிறைந்த நீரினைக் கொண்டாள் " என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! இப்பிறப்பில் யாம் ஒருவரை யொருவர் விட்டுப்பிரியோம் என்று அன்பின் மிகுதியால் வெளிப்படு சொற்களால் கூறியதை இப்பிறப்பில் பிரியமாட்டோம் மறுபிறப்பில் பிரிவோம் என்று குறிப்புச் சொல்லாகக் கூறியதாக எண்ணி கண் நிறைந்த நீரினைக் கொண்டு துன்பப் படுவாளாயினள். அவளது புலவிக்கு ஓர் காரணமும் வேண்டுமோ என்று தலைவியின் புலவி நுணுக்கத்தைக் கூறியதாயிற்று.

## 1316. உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்
புல்லாள் புலத்தக் கனள். [றென்னைப்

இதுவுமது.

(பரி.) இ-ள். உள்ளினேன் என்றேன் = பிரிந்தகாலத்து நின்னை யிடையின்றி நினைந்தேனென்னும் கருத்தால் யானுள்ளினேனென்றேன்;— மற்று என்மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக்கனள் = என, அதனை ஒருகான் மறந்து பின்னினைந்தேனென்றதாகக்கருதி, என்னையிடையே மறந்தீ

ரென்று சொல்லி முன் புல்லுகற் கமைந்தவள் அஃதொழிந்து புலத்தற் கமைந்தாள். எ-று.

மற்று வினைமாற்றின்கண் வந்தது. அருத்தாபத்திவகையான் மறத்தலை யுட்கொண்டு புலந்தாளென்பதாம். (௬)

விளக்கம் :—"பிரிந்து இருந்தகாலத்து உன்னை இடைவிடாது நினைத்து இருந்தேன் என்னும் கருத்தினால் யான் உன்னை நினைத்தேன் என்றேன். கூறலும் நினைத்தேன் என்னும் சொல்லை ஒருகாலத்து மறந்து பின்னர் நினைத்தேன் என்று கூறியதாக எண்ணி என்னை நடுவில் மறந்தீர் என்று சொல்லிக்கொண்டே முன் தழுவுதற்கு அமைந்தவள் அதனை ஒழிந்து கோபித்தற்கு ஆரம்பித்தனள்" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! இவ் விதம் சொல்லும் சொற்களை வெளிப்படையாகக் கருதாது குறிப்பாகக் கருதிப் புலக்கின்ற இவளுக்குப் புலத்தற்கு ஒரு காரணமும் வேண்டுமோ என்று தலைவியின் புலவி நுணுக்கத்தைக் கூறியதாயிற்று.

1317. வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

இதுவுமது.

(பரி.) இ-ள். தும்மினேனாக வழுத்தினாள்=கூடியிருக்கின்றவள் யான் தும்மினேனாக தன்னியற்கைபற்றி வாழ்த்தினாள்,—அழித்து யார் உள்ளித் தும்மினீர் என்று அழுதாள்=அங்ஙனம் வாழ்த்தியதானே மறித்து, நும்மை நினைத்து வருந்துகின்ற மகளிருள் யாவர் நினைத்தலாற் றும்மினீரென்று சொல்லிப் புலந்தழுதாள். எ-று.

வாழ்த்தலொடு புலத்தல் இயையாமையின், 'அழித்து' என்றான். அன்புடையார் நினைத்தவழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மலுண்டாமென்பது மகளிர் வழக்கு. இல் வழக்கை உள்வழக்காகக் கருதிப் புலந்தாளென்பதாம்.

விளக்கம் :—"என்னோடு கூடியிருக்கின்ற தலைவியானவள் யான்

தும்முதலும் தான் இயற்கையாகச செய்வது போல் என்னை வாழ்த்தினுள். அவ்விதம் வாழ்த்திய அத்தலைவியே மறுபடியும் அவ்வாழ்த்து தலையொழித்து உம்மை நினைத்து வருந்துகின்ற பெண்களுள் எவர் நினைத்தலால் தும்மினீர் என்று சொல்லிக்கொண்டே கோபித்து அழுவாளாயினுள்" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அன்புடையவர்கள் எவரேனும் ஒருவரை நினைத்தால் அந்





நினைக்கப்பட்டவர்க்குத் தும்மல்தோன்றுமென்பது பெண்கள் வழக்காதலால் இங்கும் யான் தும்மினதற்கு முதலில் வாழ்த்தினுளேனும் பின்னர் எவரோ என்னிடத்து அன்புடையவர் நினைத்தலால் எனக்குத் தும்மல் வந்தது என்று எண்ணி வாழ்த்துதலைவிட்டுக் கோபித்து அழுவாளாயினுள். இவ்வித கருதியுடையாளுக்குப் புலத்தற்குக் காரணமும்வேண்டுமோ என்று தலைவியின் புலவி நுணுக்கத்தைக் கூறியதாயிற்று.

1318. தும்முச் செறுப்ப வழுதா ளுமருள்ள
லெம்மை மறைத்திரோ வென்று.

இதுவுமது.

(பரி.) இ-ள். தும்முச் செறுப்ப=எனக்குத் தும்மறோன்றியவழி யாருள்ளித் தும்மினீரென்று புலத்தலையஞ்சி, அதனை யானடக்கினேன்; அங்ஙனமடக்கவும்,—நுமர் உள்ளல் எம்மை மறைத்திரோ என்று அழுதாள்=நுமர் நும்மை நினைத்தலை எம்மை மறைக்க லுற்றீரோவென்று சொல்லிப் புலந்தழுதாள். எ-று.

தும்முவென்பது முதனிலைத் தொழிற்பெயர். செறுப்பவென்புழி இறந்தது தழீஇயவெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. எம்மையென்பது நும்மோடியாதுமியைபில்லாத வெம்மையென்பதுபட நின்ற இசையெச்சம். இதனை வடநூலார் காகு வென்ப. தும்மினுங் குற்றம் ஒழியினுங் குற்றமாயக்காற் செயற்பாலதியாதென்பதாம். (அ)

விளக்கம் :—"எனக்குத் தும்மல் தோன்றிய விடத்தே யாரை

நினைத்து நீர் தும்மினீர் என்று அவள் கோபிப்பதற்குப் பயந்து எனக்குத் தோன்றிய தும்மலை வெளிவராத விதமாக யான் அடக்கிக்கொண்டேன். அவ்விதம் அடக்கவும், உம்முடையவர் உம்மை நினைத்தலை யான் அறியாதிருக்கும்படி மறைக்க ஆரம்பித்துத் தும்மலை அடக்கினீரோ என்று சொல்லிக் கோபித்து அழுதாள்'' என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! இயல்பாகவே உண்டாகிய தும்மலை யாரோ நினைத்தலால் உண்டாவது என்று கோபித்தற்குப் பயந்து அத்தும்மலை அடக்கினும் அதுவும் குற்றம் என்று அழுகின்றாள் தும்மினும் குற்றம் தும்மாவிடினும் குற்றம் என்று குற்றங்காண்கின்ற தகுதியுடையாளாகிய இவளிடத்துச் செய்யக் கூடுவது எதுவும் இல்லை என்று தலைவியின் புலவி நுணுக்கத்தைக் கூறியதாயிற்று.

## புலவி நுணுக்கம் 211

1319. தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று.

இதுவுமது.

(பரி.) இ - ள். தன்னை உணர்த்தினுங் காயும் = இவ்வாறு ஊடிய தன்னை யான் பணிந்துணர்த்துங்காலும் வெகுளாநிற்கும்,—பிறர்க்கும் நீர் இந்நீரர் ஆகுதிர் என்று = பிறமகளிர்க்கும் அவருடியவழி இவ்வாறே பணிந்துணர்த்து நீர்மையையுடையீராகுதிரென்று சொல்லி. எ - று.

இவள் தெளிவித்தவழியுந் தெளியாளென்பதுபற்றி என்மேலேற்றிய தவற்றை உடம்பட்டுப் பணிந்தேன், பணிய அதுதானும் புலத்தற்கேதுவாய் முடிந்தது, இனி யிவண் மாட்டுச் செய்யத்தகுவதியாதென்பதாம். (க)

விளக்கம் :—''இவ்விதமாக ஊடல் கொண்ட தலைவியை யான் வணங்கி என் தவறு இல்லாமையை அவளுக்குச் சொன்னேன். அக்காலத்தும் 'ஏனைய பெண்களுக்கும் அவர் கோபித்த காலத்து இவ்விதமே வணங்கி அவர்கள் கோபத்தைத் தீர்க்கும் தகுதியுடையாராய் இருப்பீரன்றோ'' என்று சொல்லிக்கொண்டு கோபிக்கின்றனள்'' என்று

தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, 'தோழி! இவள் நம்முடைய தவறு இன்மையை எவ்வளவு அறிவிக்கினும் அதுகொண்டு தெளியாளென்பது கருதி அவள் என்மீது ஏற்றிய தவறுகளுக்கு உடன்பட்டு வணங்கினேன். அவ்விதம் வணங்கிய வணக்கமும் அவள் புலந்தற்குக் காரணமாய் முடியுமாயின், இனி இவளிடத்து யாம் செய்யக்கூடியது எது உள்ளது என்று தலைவியின் புலவி நுணுக்கத்தைக் கூறியதாயிற்று.

1320. நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.

இதுவுமது.

(பரி.) இ - ள். நினைத்து இருந்து நோக்கினும் காயும் = என்சொற்களுஞ் செயல்களும் பற்றித் தான் வெகுடலான், அவற்றையொழிந்திருந்து தன்ன வயவங்களதொப்பின்மையை நினைந்து அவற்றையே நோக்கினும், என்னை வெகுளாநிற்கும், — அனைத்தும் நீர் நோக்கினீர் யார் உள்ளி என்று = என்ன வயவமனைத்தும் நோக்கினீர் அவற்றொப்புமையான் எம்மகளிரை நினைந்தென்று சொல்லி. எ - று.



யான் எல்லாவவயவங்களானும் ஒருத்தியோடொத்தல் கூடாமையின் ஒன்றொலொருவராகப் பலரையுநினைக்கவேண்டும்; அவரெல்லாரையும் யானறியச் சொல்லுமினென்னுங் கருத்தால் 'அனைத்துநோக்கினீர் யாருள்ளி' என்றான். வாளாவிருத்தலுங் குற்றமாயிற்றென்பதாம். (ம)

விளக்கம் :— "என் சொற்களினும் செயல்களினும் குற்றங்கண்டு தலைவி கோபித்தலால் அச்சொல்லையும் செயலையும் ஒழித்து இருந்து அவளது அவயவங்களது உவமை யில்லாத அழகினை நினைந்து அவ்வவயவங்களைப் பார்த்திருந்தேன். அது நோக்கி 'என் அவயவங்கள் எல்லாவற்றையும் நோக்கினீர். அவ்விதம் நோக்கியக்கால் அவ்வவயவங்களினது அழகின் ஒப்புமைகொண்ட எப்பெண்களை நினைந்தோ ?'

என்று சொல்லி என்னைக்கோபிக்கின்றாள்" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! அவளாது அவயவங்கள் முற்றும் யான் நோக்கிய காலத்து எனக்கு உள்ள அவயவங்கள் எல்லாவற்றையும் நீர் நோக்கியதால் என் அவயவங்களுடைய ஒப்புமையானது ஒருத்திக்கே இருத்தல் கூடாமையின் ஒவ்வொரு அங்கங்களாக எவரெவருக்கு எவ்வெவ்வங்கங்கள் பொருந்தி இருக்குமோ அவர்கள் எல்லாரையும் நீர் நினைத்திருத்தல் வேண்டும். அவ்வாறு நினைத்த பெண்கள் எல்லாரையும் யான் அறியச் சொல்லுமின் என்று கோபித்தாள். இவ்விதம் தும்மினும் குற்றம், தும்மாவிடினும் குற்றம், பேசினும் குற்றம், பேசாவிடினும் குற்றம், பணியினும் குற்றம், பணியாவிடினும் குற்றம், நோக்கினும் குற்றம், நோக்காவிடினும் குற்றம், சும்மா இருக்கினும் குற்றம் என்று யாவும் குற்றமாயின் இவள் புலவிக்கு ஓர் காரணமும் உண்டோ என்று தலைவியின் புலவி நுணுக்கத்தைத் தலைவன் கூறி முடித்ததாயிற்று.

---

## 133. அதிகாரம்.

---

### ஊடலுவகை.

(பரி.) அஃதாவது அப்பெற்றித்தாய ஊடலாற்றமக்குக்கூடவின்பஞ் சிறத்தலின் அச்சிறப்பிற்கேதுவாய அவ்வூடலைத் தலைமகளுவத்தலும் தலைமகனுவத்தலுமாம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது மேல் புலவி நுணுக்கத்தால் உண்டாகிய சிறு பிணக்கால் இருவர்க்கும் கூடுதலாலாகிய இன்பம் சிறக்குமாதலின் அச்சிறப்பிற்குக் காரணமாகிய அவ்வூடலைத் தலைமகள் விரும்பி மகிழ்த



லும் தலைமகன் விரும்பி மகிழ்தலுமாம். மேல் அதிகாரத்தில் ஊடலால் வந்த உவகையை இங்குக் கூறுவதால் ஊடலுவகை யென்னும் இவ்வதி

காரம் இங்கு வைக்கப்பட்டுள்ளது.

1321. இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.

தலைமகள் காரணமின்றிப் புலக்கப்புலவை கேட்ட தோழி
அங்ஙனநீ புலக்கின்றதென்னையென்றாட்கு அவள் சொல்லியது.

(பரி.) இ - ள். அவர்க்குத் தவறு இல்லையாயினும் = அவர்மாட்டுத்தவறில்லையாயினும், — அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது — நமக்கவர் தலையளி செய்கின்றவாறு அவரோடுடுதலை விளைக்க வற்றாகின்றது எ - று.

அவர்க்கென்பது வேற்றுமைமயக்கம். அளவிறந்தவின்பத்ததாகலின் யானெய்தற்பாலதாய இத்தலையளி ஒழிந்தாருமெய்துவரெனக்கருதி அது பொறுமையான் ஊடலாகின்றதென்பதாம். (க)

விளக்கம்: — "அவரிடத்துத் தவற்றயில்லையாயினும் நமக்கு அவர் மிக்க அன்பினைச் செய்வதற்காக அவரோடு கோபித்தலைச் செய்ய வேண்டியுள்ளது" என்று தலைமகளானவள் காரணமில்லாமலே தலைமகளிடத்துக் கோபிக்கின்ற தன்மையைக் கேட்ட தோழியானவள் அவ்விதம் காரணமிலலாது நீ புலப்பது எதற்கு என்று கேட்டதற்குத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைமகளானவள், தோழியே! தலைவரிடத்து யாதொரு தவறும் யான் காணவிடினும் அளவிறந்த இன்பத்தையுடையவராதலால யான் அடையக்கூடிய இவ்வித அன்பினை அவரிடத்து மற்றவர்களும் அடைவரோ என்று எண்ணி அவ்விதம் மற்றவரும் அடைவதால் எனக்கு உண்டாகும் பொறுமையினால் ஊடல் என்னும் சிறு பிணக்கு உண்டாவதாயிற்று என்று கூறியதாகும்.

1322. ஊடலிற் றோன்றுஞ் சிறிதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.

புலவாக்காலும் அத்தலையளி பெறலாயிருக்க அஃதிழந்து
புலவியான் வருந்துவதென்னையென்றாட்கு அவள் சொல்லியது.

(பரி.) இ - ள். ஊடலின் தோன்றும் சிறுதுனி = ஊடலேதுவாக நம

சட்டோன்றுகின்ற சிறியதுனிதன்னால், —நல்லளி வாடினும் பாடுபெறும்= காதலர் செய்யு நல்லதலையளி வாடுமாயினும் பெருமையெய்தும். எ - று.



தவறின்றி நிகழ்கின்றவூடல் கடிதினீங்கலின் அத்துன்பமுநில்லாதென்பாள் 'சிறுதுனி' என்றும், ஆராமைபற்றி நிகழ்தலின் அதனான் நல்லளி வாடாதென்பாள் 'வாடினும்' என்றும், பின்னே பேரின்பம்பயக்குமென்பான் 'பாடுபெறும்' என்றுங் கூறினாள். அது வருத்தமெனப்படாதென்பதாம். (௩)

விளக்கம்:—ஊடல் காரணமாக நம்மிடத்தூத தோன்றுகின்ற சிறிய துன்பத்தினால் காதலர் நமக்குச் செய்கின்ற நல்ல தலையளியானது சிறிது வாடுமாயினும் பின்னர் பெருமையை அடையச் செய்யும்" என்று தோழியானவள் தலைவியை நோக்கி அபபுலத்தல் என்னும் சிறு கோபத்தை அடையா விட்டாலும் அவர் அன்பின் மிகுதியால் பெரிய தோர் இன்பத்தைப் பெறக் கூடியதாய் இருக்கவும், அவ்வின்பத்தினை யிழந்து புலவியால் வருந்துவது மடிதுகருதி என்றாட்குத், தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! யாதொரு தவறுமில்லாமல உண்டாகின்ற ஊடலானது விரைவாக நீங்குதலால் அதனால் உண்டாகும் சிறிய துன்பமும் நெடும்பொழுது நில்லாதென்றும், எனக்குள்ள ஆராமை மிகுதியால் இவ்வூடல் உண்டாவதால் அவர் என்னிடத்துச செய்யும் நல்ல இன்பமானது வாடாது என்றும், அவ்விதம் சிறுபொழுது நாம் ஊடலால் அப்போது இன்பத்தை அடையாவிடினும் பின்னர் உண்டாகும் புணர்ச்சியானது பேரின்பத்தைத் தருவதால் அவ்வூடலால் வரும் வருத்தத்தை வருத்தமென்று கொள்ளுதலாகாது என்றும் கூறியதாயிற்று.

1323. புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து.

இதுவுமது.

(பரி.) இ - ள். நிலத்தொடு நீர் இயைந்தன்னாரகத்துப் புலத்தலின்=

நிலத்தொடு நீர் கலந்தாற்போல ஒற்றுமையுடைய காதலர்மாட்டுப் புலத்தல் போல,—புத்தேள் நாடு உண்டோ=நமக்கின்பந்தருவதொரு புத்தேளுலக முண்டோ, இல்லை எ - று.

நீர் தானின்ற நிலத் தியல்பிற்றாமாறுபோலக் காதலருந் தாங்கூடிய மக ளிரியல்பினராகலான் அதுபற்றி அவரோடு புலவிநிகழுமென்பாள் 'நிலத் தொடு நீரியைந்தன்னாகத்து' என்றும், அவர் நமக்கும் அன்னராகலின் அப்புலவி பின்னே பேரின்பம் பயவாநின்றதென்பாள் 'புலத்தலிற் புத்தே ணாடுண்டோ' என்றுங் கூறினாள். உவமம் பயன்பற்றி வந்தது. (௩)

## ஊடலுவகை 

விளக்கம்:—"நிலத்தினோடு நீர் கலந்ததுபோன்ற ஒற்றுமையுடைய காதலரிடத்துப் புலத்தல் கொள்வதுபோல் நமக்கு இன்பத்தைத் தருவ தாகிய ஒரு தேவ உலகமும் உண்டோ, இல்லை" என்று தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நீரானது எந்நிலத்தில் நின் றதோ அந்நிலத்து இயல்பினை அடைவதுபோலக் காதலராய் உள்ளவரும் தாம் கூடிய பெண்களது இயல்புக்குத் தக்க அளவாகப் பொருந்தி வாழ்வாராதலால் அவ்வித தகுதியைக் கருதிப் புலவியுண்டாகின்றதென் றும், அவ்விதம் புலவி உண்டாய காலத்து நம்மை அவர் தெளிவித் துக் கூடுகின்ற கூட்டத்தினுள் உண்டாகும் பேரின்பமானது நாம் இறந்து மறுமைப் பயனை அடையும் தேவபோகத்திற்கும் மேலாய தென்றும் அறிந்தோம். ஆதலால் புலந்துகூடி பேரின்பத்தை அடை வது கலவியின் பயனாகும் என்று புலவியின் பயனைத் தலைவி தோழிக்குக் கூறியதாயிற்று.

1324. புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
உள்ள முடைக்கும் படை.

அப்புலவி இனி யாதானிக்தமென்றட்தச் சொல்லியது.

(பரி.) இ - ள். புல்லி விடாப் புலவியுள் தோன்றும்=காதலரைப் புல்

விக் கொண்டு பின்விடாமைக் கே துவாகிய அப்புலவிக்கண்ணே யுளதாம்,—என் உள்ளம் உடைக்கும் படை=அதன்மேற்சென்ற என்னுள்ளத்தைக் கெடுக்கும் படைக்கலம், எ-று

புலவியுளென்னுமேழாவது வினைநிகழ்ச்சிக்கண் வந்தது. என்னுள்ள முடைக்கும் படைக்கலமென்றது பணக்கத்தையும் பணிமொழியையும். படைக்கலம் என்றான், அவற்றான் அப்புலவியுள்ளமழிதலின். புலவிநீங்குந் திறங் கூறியவாறு. (௪)

விளக்கம்:—"காதலரை அணைத்துக்கொண்டு பின் விடாமைக்கு ஏதுவாக உள்ள அப்புலவியினிடத்தே உள்ளது ஆகும், அப்புலவிமீது சென்ற என் உள்ளத்தைக் கெடுக்கும் படைக்கலம்" என்று தோழியானவள் நீ கூறும் பேரின்பத்திற்குக் காரணமாகிய புலவியானது இனி எதனால் நீங்கும் என்று கேட்டதற்குத் தலைவி கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தோழியே! காதலர் தாம் தம் தவறின்மையைக் கூறி வணங்கியும் பணிந்த மொழியால் என்னைத்



தற்றியும் நின்றகாலத்துப் புலவியைக் கொண்ட மனமானது புலவியி னின்றும் நீங்கிக் கூடுந் திறத்தை நாடும் என்று புலவி நீங்கும் திறத்தினைக் கூறியதாயிற்று.

1325. தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து.

தலைமகளையுடனிக்கிக் கூடிய தலைமகன் கழியுவகையானுய்த் தன்னுள்ளே சொல்லியது.

(பரி) இ-ள். தவறு இலராயினும் தாம் வீழ்வார் மென்றோள் அகறலின் =ஆடவர் தங்கட்டவறிலராயினும் உடையார்போல ஊடப்பட்டுத் தாம் விரும்பு மகளிருடைய மெல்லிய தோள்களைக் கூடப்பெறாத வெல்லைக்கண் —ஆங்கு ஒன்று உடைத்து=அவர்க்கு அப்பெற்றியதோரின்பம் பயத்த லுடைத்து. எ-று.

உடையாராயக்கால் இறத்தலின்பத்தோடு வருமின்பமுமெய்துவராகலின் அது மிக நன்று, மற்றையிலராயக்காலும் வருமின்பத்தை யிகழ்ந்ததில்லை யென்னுங் கருத்தால், தவறிலராயினு மாங்கொன்றுடைத்தென்றான், ஊடலினுயவின்பம் அளவிறத்தலிற் கூறற்கரிதென்பான், அப்பெற்றிய தொன்றென்றான். தவறின்றியூடிய தூடலும் எனக்கின்பமாயிற்றென்பதாம். (ரு)

விளக்கம்:—"ஆடவரானவர் தம்மிடத்துத் தவறு இல்லாதவராயினும் தவறு உடையவர்போல ஊடப்பட்டுத் தம்மை விரும்புகின்ற பெண்களுடைய மெல்லிய தோள்களைக் கூடப்பெறாத அளவில் ஆடவர்க்கு அவ்வித தகுதியுடையதோர் இன்பம் பயத்தலையுடையதாயுள்ளது" என்று தலைமகளை ஊடல் நீக்கிக் கூடிய தலைமகனானவன் மிகுதியும் உவகை யுடையவனாய்த் தனக்குள்ளேயே கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஆடவர் தம்மிடத்துத் தவறு உடையாராய் அத்தவறின் பொருட்டுப் பெண்களால் ஊடப்பெற்று அவ்வூடல் தீர்ந்தவுடன் ஊடலால் பிரிந்திருந்த காலத்து அநுபவியாத இன்பத்தோடு இனி அநுபவிக்க வேண்டிய இன்பத்தையும் அநுபவிப்பதற்கு உரியராதலின், அத்தவறுடைமை கண்டு ஊடுதல் மிக நன்மையுடையதென்றும், அவ்விதம் அல்லாத ஆடவர் தவறில்லாதவராயினும் தவறு உடையாரென எண்ணி ஊடியகாலத்தும் அளவு இறந்து சொல்லுதற்கு ஒண்ணாத அவ்வின்பத்தையே ஒத்து இருந்ததென்றும், ஆதலால் என்னிடத்துத் தவறில்லா



திருந்தும் இவள் ஊடல் கொண்டதும் மனக்கின்பமாயிற்று என்றும் தலைமகன் சொல்லிக் கொண்டான் என்பதாயிற்று.

**1326. உணலினு முண்ட தறலினிது காமம்**
**புணர்தலி னூட லினிது.**

இதுவுமது.

(பரி.) இ - ள். உணவினும் உண்டது அறல் இனிது=உயிர்க்குமேலுண்பதனினும் முன்னுண்டதறுதல் இன்பந்தரும்;—காமம் புணர்தலின் ஊடல்

இனிது = அதுபோலக் காமத்திற்கு மேற்புணர்தலினும் முன்னைத்தவறு பற்றியூடுதல் இன்பந்தரும். எ-று.

காமத்திற்கென்புழிச் சாரியையும் நான்கனுருபும் விகாரத்தாற்றொக்கன. பசித்துண்ணும்வழி மிகவுண்ணலுமாய் இன்சுவைத்துமாம் அதுபோல அகன்று கூடும்வழி ஆராதுமாய்ப் பேரின்பத்துமாமெனத் தன்னனுபவம் பற்றிக் கூறியவாறு. (௬)

விளக்கம்:—"உயிர்களுக்குப் பசியாத காலத்து உண்பதிலும் முன் உண்டது முழுவதும் அற்ற பிறகு உண்ணுதல் எவ்வித இன்பத்தினைத் தருமோ அது போலக் காமத்துக்கு மேலும் மேலும் புணர்தலினும் தலைவன் பிரிந்திருந்த காலத்து அவன் செய்த தவறு நோக்கிப் பெண்கள் ஊடிக்கொள்ளுதல் ஆடவர்க்கு இன்பத்தைத்தரும்" என்று தலைமகளது ஊடலைப்போக்கிக் கூடிய தலைமகனவன் மிக மகிழ்ச்சியுடையனுய்க் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பசித்து உண்ட காலத்து உண்ணும் பொருள்களை மிகுதியும் உண்டலும், அவ்விதம் உண்ட உணவுகள் இனிய சுவையைத் தருதலும் இயல்பு ஆதல் போல, பெண்களை நீங்கியிருந்து கூடுங்காலத்து உண்டாகும் இன்பமானது ஆராத தன்மையுடையதுமாய்ப் பேரின்பத்தைத் தருவதுமாய் உள்ளது என்று ஊடலால் வருகின்ற அனுபவத்தைக் கூறியதாயிற்று.

**1327. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்**
**கூடலிற் காணப் படும்.**

இதுவுமது.

(பரி.) இ-ள். ஊடலின் தோற்றவர் வென்றார் = காமநுகர்தற்குரிய இருவருள் ஊடலின்கட்டோற்றவர் வென்றாராவர்;—அது கூடலிற் காணப்





படும் = அஃதப்பொழுதறியப்படாதாயினும் பின்னைப் புணர்ச்சியின்கண் அவராலறியப்படும். எ-று.

தோற்றவர் = எதிர்தலாற்றாது சாய்ந்தவர். அவர் புணர்ச்சிக்கட் பேரின்ப

மெய்தலின் வென்றாராயினர். மன்னும் உம்மும் அசைநிலை. யானதுபொழுது சாயதலின் இதுபொழுது பேரின்பம்பெற்றேனென்பதாம். (எ)

விளக்கம்:—"காம இன்பம் அனுபவித்தற்கு உரிய இருவருள் ஊடலாகிய சிறு பிணக்கு இடத்தே தோற்றவர் வெற்றி அடைந்தவராவார். அவ்வெற்றியானது தோற்ற அப்பொழுது அறியப்படாது இருக்கினும் பின்னைப் புணர்ச்சியின்பம் அனுபவிக்கும் காலத்து அவரால் அறியப்படும்" என்று தலைமகன்கூறியதாக இத்திருக்குறள்கூறுகின்றது. அதாவது, ஊடல்கொண்ட தலைமகளைத் தலைமகனவன் அவள் ஊடலை நீக்கி அவளோடு புணர்கின்ற காலத்து அப்புணர்ச்சியால் வரும் இன்பத்தைக் கூறுவான் போன்று மகளிர் ஊடல் கொண்டகாலத்து அவரோடு ஊடவரும் ஊடிக்கொள்ளாமல் தம்முடைய தவறின்மையைக்கூறி அவர்களை வணங்கித் தம்வழிப்படுத்தும் தோல்வியானது அப்பொழுது அம்மகளிர்க்குத் தோற்றவர்போல் காணப்பட்டாலும் ஊடல் தீர்ந்த மகளிர் பின்னர்க் காண்பிக்கும் இன்பமானது பேரின்பமாக இருக்குமாதலால், அத்தோல்வி அப்போது தோல்வியாகக் காணப்படினும் பின்னர் வெற்றியாகவே முடியும். அதனை என் தலைவி ஊடல்கொண்ட காலத்து நான் வணங்கி நின்றேனாதலின் புணர்ச்சியின்பம் அனுபவிக்கும் இக்காலத்து அடைந்த பேரின்பத்தால் அறிந்தேன் என்று கூறியதாயிற்று.

1328. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

இதுவுமது.

(பரி.) இ - ள். நுதல் வெயர்ப்பக் கூடலில் தோன்றிய உப்பு=இதுபொழுது இவணுதல் வெயர்க்கும்வகை கலவியின்கணுளதாய இனிமையை— ஊடிப் பெறுகுவங்கொல்லோ=இன்னுமொருகால் இவளூடி யாம்பெறவல்லேமோ! எ-று.

கலவியது விசேடம்பற்றி 'நுதல்வெயர்ப்ப' என்றான். இனிமை=கண்டு கேட்டுண்டுயிர்த்துற் றறிதலானுய வின்பம். இனி அப்பேறு கூடாதெனப் பெற்றதன் சிறப்புக் கூறியவாறு. (அ)

விளக்கம்:—"இதுபொழுது இவளுடைய நெற்றியில் வெயர்வை தோன்றும் வண்ணம் கலவியினிடத்தே உண்டாகிய இனிமையை இன்னும் ஓர் காலத்து இவள் ஊடல் கொண்டு யாம் அடைய வல்லவராவோமோ" என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது. ஊடல் நீர்த்தக்கூடிய தலைமகன் அக்கூடலிலுண்டாகிய விசேடம் குறித்து நுதல் வெயர்த்ததென்றும், நுதல் வெயர்க்கக்கூடிய கலவியால் கண்ட இன்பமானது ஊடலால்நேர்ந்ததென்றும், இன்னும் மற்றோர் முறை அவ்விதம் ஊடி இவ்வித கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிதலால் உண்டாகிய இன்பத்தினை அடைவது உண்டாகாதென்றும், ஊடலால் தான் இதுபொழுது பெற்ற இன்பத்தின் சிறப்பினைக் கூறியவாறுமாயிற்று.

1329. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
 நீடுக மன்னோ விரா.

இதுவுமது.

(பரி.) இ - ள். ஒளியிழை ஊடுகமன் = ஒளியிழையினையுடையாள் இன்னுமெம்மோடூடுவாளாக;—யாம் இரப்ப இரா நீடுகமன் = அங்ஙனம் அவளூடி நிற்றற்கும் அதனையுணர்த்துதற்பொருட்டு யாமிரந்து நிற்றற்கும் காலம் பெறும்வகை இவ்விரவு விடியாது நீட்டித்தல் வேண்டுக; எ-று.

ஊடுக நீடுகவென்பன வேண்டிக்கோடற்பொருள். மன்னிரண்டும் ஆக்கத்தின்கண் வந்தன. ஓகாரங்கள் அசைநிலை. கூடலின் ஊடலேயமையுமென்பதாம். (கூ)

விளக்கம்:—"ஒளிநிறைந்திய ஆபரணங்களை உடையாளாகிய இவள்

இன்னும் எம்மோடு ஊடிக்கொள்ளல் வேண்டும். அவ்விதம் அவள் ஊடல் கொண்டு இருப்பதற்கும் அவ்வூடலைத் தீர்த்தற்பொருட்டு யாம் எம் குறையையெல்லாம் கூறி வணங்கி நிற்றற்கும் காலம் இருக்கும்படி இவ்விராப் பொழுதானது விடிந்து விடாது நீட்டித்து இருத்தல் வேண்டும்'' என்று தலைவன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஊடல் தீர்த்துப் புணர்ந்த தலைமகன் அவ்வூடலால் வந்த பேரின்பத்தைக் கருதி எக்காலத்தும் கூடி நிற்பதினும் முன்னர் ஊடி பின்னர் கூடுதலே மிக்கதோர் இன்பத்தை அடைவதற்குக் காரணமாகும் என்று ஊடலிடத்தே உண்டாகும் உவகையைக் கூறியதாயிற்று.



1330. ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.

இதுவுமது.

(பரி.) இ-ள். காமத்திற்கு இன்பம் ஊடுதல் = காமநுகர்ச்சிக்கின்பமாவது அதனை நுகர்தற்குரியாராவார் ஆராமைபற்றித் தம்முளூடுதல், — அதற்கு இன்பம் கூடி முயங்கப் பெறின் = அவ்வூடதற்கின்பமாவது, அதனை யளவறிந்து நீங்கித் தம்முட்கூடி முயங்குதல் கூடுமாயின், அம்முயக்கம். எ-று.

கூடுதல் = ஒத்தவளவினராதல். முதிர்ந்ததுனியாயவழித் துன்பம்பயத்தலானும், முதிராதபுலவியாயவழிக் கலவியின்பம் பயவாமையானும், இரண்டற்குமிடையாகிய வளவறிந்து நீங்குதலரிதென்பதுபற்றிக் 'கூடிமுயங்கப் பெறின்' என்றான். அவ்விரண்டின்பமும் யான் பெற்றேனென்பதாம். (10)

விளக்கம்:—"காம அனுபவத்திற்கு இன்பமாக இருப்பது அக் காம இன்பத்தினை அனுபவித்தற்கு உரியவராவார் அடங்காக் காமத்தால் தமக்குள் ஊடிக்கொள்ளுதலாகும். அவ்விதம் ஊடிக்கொள்வதற்கு இன்பமாக இருப்பது அவ்வூடலை அளவு அறிந்து நீங்கித் தம்

முன் ஒத்த அளவினராய்க் கூடி முயங்குதல் கூடுமாயின், அம் முயக்கமேபாகும்" என்று தலைமகன் கூறியதாக இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தலைமகன் தலைமகளது புலவியை நீக்கிக் கூடுங் காலத்து உண்டாகும் இன்பத்தினைக் கூறுவானாகி ஊடுதலே காம நுகர்ச்சிக்கு இன்பமாயினும் அவ்வூடல் அதிகப் படாமலும் குறையாமலும் இருத்தல் வேண்டுமென்றும், அவ்விதம் அளவறிந்து கூடாவிடின் ஊடல் முதிர்ந்தகாலத்து அது துன்பம் பயக்குமென்றும், முதிராத சிறு புலவியாய இடத்துக் கலவி இன்பம் மிக்கதோர் பயனைத் தாராது என்றும், ஆதலால் அவ்வளவறிந்து இருவர்கூடுதல் மிகுதியும் அருமையென்றும், ஆயின், யானே அவ்விரண்டு இன்பமும் பெற்றேன் என்றும் தான் பெற்ற இன்பத்தினைக் கூறினானாயிற்று.

கற்பியல் முற்றிற்று.

---



(பரி.) ஈண்டுப் பிரிவினை வடநூன்மதம்பற்றிச் செலவு ஆற்றாமை விதுப்புப் புலவியென நால்வகைத்தாக்கிக் கூறினார். அவற்றுட் செலவு பிரிவாற்றாமை யுள்ளும், ஆற்றாமை படர்மெலிந்திரங்கல் முதல் நிறையழிதலீறாயவற்றுள்ளும், விதுப்பு அவர்வயின்விதும்பன்முதற் புணர்ச்சிவிதும்பலீறாயவற்றுள்ளும், புலவி நெஞ்சொடுபுலத்தன்முதல் ஊடலுவகையீறாயவற்றுள்ளுங்கண்டு கொள்க. அஃதேல் வடநூலார் இவற்றுடனே சாபத்தினானாய நீக்கத்தினையுங் கூட்டிப் பிரிவினை ஐவகைத்தென்றாராலெனின், அஃது அறம் பொருளின்பமென்னும் பயன்களுள் ஒன்றுபற்றிய பிரிவன்மையானும், முனிவராணையான் ஒருகாலத்தோர் குற்றத்தினதாவதல்லது உலகியல்பாய்

வாராமையானும் ஈண்டொழிக்கப்பட்டதென்க.

விளக்கம்:—இவ்வாசிரியர் பிரிவு என்பதனை வடநூலார் கொள்கையின் வழி பிரிந்து செல்லுதல், அதனால் உண்டாகும் ஆற்றாமை, பின்வினைதல், புலத்தல் என்று நால்வகையாகக் கூறியுள்ளனர். அவ்விதம் கூறிய நான்கு பகுதியினுள் செலவு என்பதனைப் பிரிவாற்றாமை என்னும் அதிகாரத்துள்ளும், ஆற்றாமை என்பதனைப் படர்மெலிந்து இரங்கல் என்னும் அதிகாரம் முதல் நிறையழிதல் என்கின்ற அதிகாரங்கள் வரையும், விதுப்பு என்பதனை அவர்வயின்விதும்பல் என்னும் அதிகாரம் முதல் புணர்ச்சிவிதும்பல் என்னும் அதிகாரங்கள் வரையும், புலவி என்பதனை நெஞ்சொடுபுலத்தல் என்னும் அதிகாரம் முதல் ஊடலுவகை என்கின்ற அதிகாரங்கள் வரையும் கண்டுகொள்ளுதல் வேண்டும். அதுவல்லாமலும், வடநூலார் இப்பிரிவினை மேல்கூறிய நான்குவகையாகக் கூறுவதுடன் நில்லாமல் சாபத்தினால் உண்டாகும் நீக்கத்தினையும் கூட்டிப் பிரிவு என்பதனை ஐந்துவிதம் என்று கூறுகின்றனரே எனின், அவ்வித பிரிவானது அறம், பொருள், இன்பம் என்னும் பயன்கள் அடைவதற்கு நேர்ந்த பிரிவு அல்லாமையானும், முற்றத் துறந்த முனிவரது ஆணையால் எப்போதேனும் ஓர் காலத்து ஓர் குற்றத்தின்பொருட்டு உண்டாவது அல்லது உலக இயல்பாய் வாராமையானும் அவ்வடநூலார் கூறும் சாபத்தினால் வரும் பிரிவினைத் தெய்வப் புலவர் திருவள்ளுவர் கூறாமல் விட்டுவிட்டனர் என்பதாம்.

காமத்துப்பால் முற்றிற்று
திருக்குறள் விளக்கம் முற்றுப்பெற்றது.

---

# திருக்குறள் விளக்கம்.

## காமத்துப்பால் அகராதி.

காமத்துப்பால் அகராதி முற்றிற்று.

உ

## திருக்குறளின் சிறப்புப் பாயிரமாகிய

# திருவள்ளுவ மாலை.

### அசரீரி

க. திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர் சொல்

(இ-ள்.) திருத்தகு தெய்வத் திருவள்ளுவரோடு = அருட் செல்வத்தையும் அதற்குத் தக்க தெய்வத் தன்மையையுமுடைய திருவள்ளுவரோடு—உருத்தகு நற்பலகை உருத்திரசன்மர் ஒக்க இருக்க என உரைத்து = (அவரிருத்தற்குத் தனது உருவத்தினாலே தக்க நல்ல சங்கப் பலகையிடத்து உருத்திரசன்

மர் ஒருவரோ ஒப்பவேறியிருக்கவென்று கூறி,—வானில் ஒருக்க ஓர் சொல் ஓவென்றது=ஆகாசத்திலிருந்து அவ்விடத்துள்ள புலவர் கருத்தையெல் லாம் ஒற்றுமை செய்யும்படி ஒரு வாக்கியம் ஓவென்று இரைந் தெழுந்தது. எ-று.

"அருட் செல்வஞ் செல்வத்துட் செல்வம்" என்பவாகலின், திரு வென்பதற்கு அப்பொருளுரைக்கப் பட்டது. தெய்வத்தன்மை தெய்வத்தி னவதாரமாய் விளங்குகை. தெய்வத்தன்மை யில்லாதார்க்கு அருளுளதாயி னும் அதனாலே பெரும்பயன் விளையாமையின், தகுதி சொல்லப்பட்டது. திருவள்ளுவரென்னும் பெயருள், திருவென்பது உயர்வையும், வள்ளுவரென் பது வண்மை யுடையவரென்பதையும், விளக்கி நின்றனவாகலின், அது வே தத்தில் இலைமறை காய்கள்போற் பலவிடங்களினும் மறைந்து வெளிப்படா திருந்த மெய்ப்பொருள்களை யெல்லாம் தொகுத்து உலகத்தாருக்குக் கொடுத் தருள் செய்தவரென்னும் காரணம் பற்றி வந்த பெயராயிற்று. வள் முத னிலை, அர் இறுதிநிலை, உ சாரியை. அம்முதனிலைக்குப் பொருள் ஈகை. உருத் திரசன்மர் உருத்திரனால் அடைந்த சன்மத்தையுடையவரென விரியும். அவர் முருகக்கடவுளது திருவவதாரமாய் வணிகர் மரபிற்றோன்றிய மூங்கைப்



பிள்ளையார். அசரீரி அருவமாய் எங்குநிறைந்துள்ள முதற்றெய்வம். அரங் கேற்றத் தொடங்கிய காலத்துத் தெய்வப் புலவரோடு ஒப்ப விருந்து கேட் டற்குத் தகுதியுடையோர் யாரென யாவரும் எண்ணமுற்று நின்றவழி இவ் வசரீரி வாக்கியம் பிறந்தது. என்றதெனப் படர்க்கை வினையாகக் கூறலின், ஆண்டு நின்று கேட்ட புலவர்களுள் ஒருவர் அதனை இங்ஙனம் பாடலாகச் செய்தனரென்றறிக. (க)

## நாமகள்.

௨. நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு

(இ-ள்,) கூடாரை எள்ளிய வென்றி இலங்கு இலைவேல் மாற=பகைவரைப் புறங்கொடுக்கச் செய்து இகழ்ந்த வெற்றியை உண்டாக்கி விளங்காநின்ற இலைபோலும் வேற்படையையுடைய பாண்டியராசனே,—நாடா=உலகத்தார் விதிவிலக்குகளை அறிந்து உய்யும் வழியை நாடி,—முதல் நான்முகன் நாவின் நான் மறை பாடா=படைப்புக் காலத்திலே பிரமனது நாவிலிருந்து இருக்கு முதலாகிய நான்கு வேதங்களையும் பாடி,—இடைப்பாரதம் பகர்ந்தேன்=நடுவான காலத்திலே பாரதமாகிய வேதத்தைக் கூறினேன்;—பின் என் வாக்கு வள்ளுவன் வாயது=அதற்குப் பிற்பட்ட இக்காலத்திலே என் வாக்குத் திருக்குறளாகிய வேதத்தைச் சொல்லி வள்ளுவன் வாயின் கணணதாயிற்று, எ-று.

தன் கணவனுக்கவின் நான்முகனுவிலிருந்தென்றும், அவனவதாரமாகலின், வள்ளுவன் வாயதென் வாக்கென்றும், கூறினள். பாரதம் வியாசரைக் கொண்டு சொல்லப்பட்டது. இதனால் நான்மறை பூர்வ வேதமும், பாரதம் மத்திய வேதமும், திருக்குறள் உத்தர வேதமும் என்றதாயிற்று. வேதம் மூவகைத் தென்பதூஉம், இவற்றது தோற்றமுறையால் இஃது வாக்கியப் பிரமாணத்திற் சிறப்புடைத் தென்பதூஉம் சொல்லியபடி. (உ)

## இறையனர்.

ஙு. என்றும் புலரா தியாணர்நாட் சொல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.



(இ-ள்.) மன்புலவன் வள்ளுவன் வாய்ச்சொல்=புலவர்க்கரசனுகிய வள்ளுவன் வாயிற் பிறந்த திருக்குறளானது,—என்றும் யாணர் புலராது நாட்செல்லுகினும் நின்று அலர்ந்து தேன் பிலிற்றும் நீர்மையதாய்=எக்காலத்துந் தன்னழகு கெடாது நெடுங்காலங் கழியினும் நிலை பெற்று மலர்ந்து தேனைச் சொரிகின்ற குணமுடையதாய் விளங்குமாதலால்,—குன்றாத செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர் போன்=குறைவு படாத செய்ய தளிர்களையுடைய கற்பகத்தினது தெய்வத் தன்மை பொருந்திய உயர்வாகிய

மலர்போலும். எ-று.

திருக்குறளுக்கு அழகு சொன்முடிபு பொருண்முடிபின் குணங்களும், அலர்தல் எங்கும் பரவுதலும், தேன்பிலிற்றல் இருமை யின்பங்களும் விளைத்தலுமாம். சொல் ஆகு பெயர். இறையனார் கடவுளாகலின், இனி இதிற் சிறப்ப தொன்றுளதாவதின் றென்னுந் துணிவுதோன்ற என்றுமென்றும், பினனும் அதனை வலியுறுத்தற்கு நாட் செல்கினு நின்றென்றும் வாழ்த்துப் பொருள்பட இவ்வாறு கூறினார். இது அழியாது நின்று பெருகிப் பயன்படுமாறு சொல்லியபடி. (௩)

## உக்கிரப்பெருவழுதியார்.

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
றான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன் முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி.

(இ-ள்.) நான்முகத்தோன் தான் மறைந்து வள்ளுவனாய் நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளாத் தந்து உரைத்த நூன முறையை= நான்முகன் தான் தன்னுரு மறைந்து திருவள்ளுவனாயவதரித்து நான்கு வேதங்களினுண்மைப் பொருளை அறம் பொருள் இன்பமென்னும் முப்பாற் பொருளாகத் தமிழிற் றந்து கூறிய திருக்குறளெனு நூல் திருமுறையை—சென்னி வந்திக்க=என் தலை வணங்குக,—வாய் வாழ்த்துக=வாய் துதிக்க,—நன்னெஞ்சம் சிந்திக்க=நல்ல மனம் தியானிக்க,—செவிகேட்க=காது கேட்க. எ-று.

முப்பொருள் ஆகுபெயர். இவ்வேதப் பொருள் ஆதியிலே வேதஞ் சொல்லியோனாலேயே சொல்லப்பட்டமையால் உலகத்துச் சமயாசாரியர்களாலும் பிறராலும் ஒன்றற்கொன்று மாறுகக் கொள்ளப்பட்ட பொருள்கள் போல்வதன்றென்பது தோன்ற, மெய்ப் பொருளென்றார். கலையுணர் புலமையிற் றலையோனாகி விதிமுறை வழாது முதுநிலம் புரக்கும் பெருத்

தகை யுக்கிரப் பெருவழுதி யென்னுந் தன்னிக ரில்லா மன்னவர் பெருமான் தான் மேற்கொண்ட சிறப்பைப் பலரும் அறிந்து மேற்கொள்ள, இவ்வாறு வழிபாடு கூறினன், "மன்ன னெப்படி மன்னுயிரப்படி" ஆகலின், இப்புத்தகத்தை முன்னே பூசித்து மெய்மொழி மனங்களால் வணக்கஞ் செய்து பின் கேட்கவேணுமென்று சொல்லியபடி. (அ)

## கபிலர்.

௫. தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.

(இ-ள்.) மனை அளகு வள்ளைக்கு உறங்கும் வளநாட = மனையில் வளர்க்கப் படுகின்ற பறவைப் பேடுகள் உலக்கைப்பாட்டால் கண்ணுறங்குகின்ற வளம் பொருந்திய நாட்டையுடைய அரசனே, — வள்ளுவனார் வெள்ளைக் குறட்பா விரி = திருவள்ளுவரால் அருளிச் செய்யப்பட்ட குறள் வெண்பா மிகப் பெரிய பொருளைத் தன்னுட்கொண்டு காட்டுதல் — தினையளவு போதாச் சிறு புன்னீர் நீண்ட பனையளவு காட்டும் படித்து = தினையரிசியி னளவுக்கும் போதாத சிறிய புல்லினது நுனியின் கண்ணுள்ள பனி நீர் உயர்ந்த பனையி னளவான அகன் சாயையைத் தன்னுட்கொண்டு காட்டுங் குணம் போலுங் குணத்தையுடைத்து. எ-று.

பனை ஆகுபெயர். ஆல் அசை. பறவை கிளி முதலியவை. உலக்கைப் பாட்டு மகளிர் பரிமளப்பொடி இடிக்கின்றபோது பாடும் பாட்டு. விரி விரிதல். எப்படி மிகச்சிறிய பனித்துளியிலே மிகப் பெரிய பனைமரத்தின் சாயை அடங்கி விளங்குகின்றதோ அப்படியே மிகச் சிறிய இக்குறள் வெண்பாவில் மிகப் பெரிய பொருள் அடங்கி விளங்குகின்றதென்பதாம். இது சுருங்கியிருந்தும் விரிவான பொருளை விளக்குமாறு சொல்லியபடி. இது முதலியன சங்கத்துப் புலவராலே பாடப்பட்டன. (௫)

## பரணர்.

௬ மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்

வதையும் அறிந்து—தணடமிழின் வெணகுறளால் ஆறு அறமுதலா அந்நான்கும் ஏனோருககு ஊழின உரைத்தாற்கும்—தண்ணிய தமிழினகண குறள் வெண்பாககளால விட்டு நீங்குதல் கூடாத அறமுதலிய அந்நான்கு பொருள்களையும் அவற்றை அறியாதவர்களுக்கு அவர் எளிதினறிய முறையாற் சொல்லியருளிய திருவள்ளுவருககும—ஒணணீர முகிலுககும்—ஒள்ளிய நீரைக் கடத யேகத்த ஈகும்— உலகு மற்று என ஆற்றும்—இவ்வுலகம எதிர நன்றி யாது செய்யு? சொாக கி ந்த து னொ லுமின்றி ;— வாழி—அவரும அதுவும் வாழக எ-று



ஆறுமை நீங்காமை., தானே முழுதுணர்ந்தெனவே, ஆசிரியராயிருந்து பிறர் அறிவிக்க அறிந்திலரென்றதாயிற்று. முழுது மென்னு மும்மை தொக்கது. ஒண்மை இனிமைமேல் நின்றது. முறை நூலின் முப்பொருள்களின் கிடக்கையொழுகுகு. ஈயனூர் கொடைச் சிறப்புச் சொல்லியபடி. (எ)

## மாமூலனார்.

அ. அறம்பொரு ளின்பம்வி டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்.

(இ-ள்.) அறம் பொருள் இன்பம் வீடு என்னும் அந்நான்கின் திறம் தெரிந்து செப்பிய தேவை - அறம் முதலாகச் சொல்லப்பட்ட அவ்வேதப பொருள்களாகிய நான்கனது கூறுபாட்டையும தெரிந்து உலகத்தார்க்குச் சொல்லிய தேவனை - மறந்தேயும் வள்ளுவனென்பான் பேதை—மறந்தாயி னும் ஒரு மனிதனுக உட்கொண்டு வள்ளுவனென்று சொல்லுதற்கு ஒருவன் உளனாயின், அவன் அறிவிலலாதவனாவன் ;—அவன் வாய்ச்சொல அறிவு உடையார் கொள்ளார்—அவனது வாயிற் பிறந்த அச்சொல்லை அறிவுடை யார் கொள்ளார். எ-று.

அறமுதலியவற்றின் கூறுபாடு அவற்றினது மதாகை வகை விரிகள்

மறந்தேயும் என்றதனால், இனைப்புடன் சொல்லுவோன் பேதையிற் பேதையாம் என்பதாயிற்று. முன்னும் பின்னுமுள்ள பாட்டுக்களில் இப்பெயர் தெய்வத் தன்மையைக் குறிப்பிக்கும்படி நன்கு மதித்து உயர்த்திச் சொல்லப் படுதலால், ஒரு மனிதனாக உட்கொண்டென்பது வருவிக்கப்பட்டது; அன்றி ஒலிக்குறிப்பினாலே சாதி யிழிவு தோன்ற வள்ளுவனென்பா னெனினுமமையும். இக்குறிப்பொலியை வட நூலார் காகுசுரமென்பர். தெய்வப் புலவரை அவமதிப் பினிழிவு சொல்லியபடி. (அ)

## கல்லாடர்.

௯. ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி
னன்றென்ப வாறு சமயத்தார்—நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி



(இ-ள்.) ஆறு சமயத்தார் ஒன்றே பொருள் எனின் வேறு என்ப=அறுவகை மதத்தோரும் ஒருமதத்தார் தமது நூலிலே உலகமும் உயிரும் கடவுளுமாகிய பொருள்கள் ஒன்றே என்று காட்டுவாராயின், மற்றொரு மதத்தார் தமது நூலிலே அதனை மறுக்க அவை வேறும் என்று காட்டுவர்;—வேறு எனின் அன்று என்ப—அப்படி வேறு என்று காட்டின், பின்னொரு மதத்தார் அதனை அன்றென்று மறுப்பர்; ஆதலால், சமய நூல்களெல்லாம் இவ்வாறு மறுக்கப்படுகின்றன,—வள்ளுவனார் முப்பால் மொழிந்த மொழி நன்று என எப்பாலவரும் இயைப=திருவள்ளுவராலே முப்பாலாகச் சொல்லப்பட்ட நூலை நன்றென்று கொள்ளுதற்கு எவ்வகைப்பட்ட பகுதியோரும் உடன்படுவார். எ-று.

மொழி ஆகுபெயர். ஆறு மதமாவன வியாச மதம், சைமினி மதம், பதஞ்சலி மதம், கபிலமதம், கணாதமதம், அக்ஷபாதமதம்; அன்றிச் சைவ வைணவ முதலியவற்றைக் கூறினுமாம். எச்சமயத்தாரு மென்னாது எப்பாலவரும் என்றதனால், வேதத்தகப்பட்ட சமயத்தாரே யன்றி புறப்பட்ட சைனம், பௌத்தம் முதலிய மதத்தாரும், பலவகைப்பட்ட சாதியாரும் தேசத்தாரும், காலத்தாரும், பிறரும் தழுவப்படுதலறிக. இதுவே பொது

## சீத்தலைச் சாத்தனார்.

ம. மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு முக்கோடியு—மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றே
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.

(இ-ள்.) வள்ளுவர் பாமுறை தேர் முப்பால் = திருவள்ளுவரது பாக்களின் முன்பின் முறை தெரிதற்கிடனாகிய திருக்குறளானது,—மும்மலையும் = கொல்லிமலை, நேரிமலை, பொதியமலை எனப்படுகின்ற மூன்று மலைகளையும்—முந்நாடும் = குடநாடு புனநாடு தென்னாடு எனப்படுகின்ற மூன்று நாடுகளையும்—முந்நதி = பொருனை நதி காவிரி நதி வையை நதி எனப்படுகின்ற மூன்று நதிகளையும்—முப்பதி = கருவூர் உறையூர் மதுரை எனப்படுகின்ற மூன்று பதிகளையும் —மும்முரசும் = மங்கல முரசு வெற்றி முரசு கொடை முரசு எனப்படுகின்ற மூன்று முரசுகளையும்—முத்தமிழும் = இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத் தமிழ் எனப்படுகின்ற மூன்று தமிழ்களையும்—முக்கொடியும் = விற்கொடி புலிக்கொடி மீனக்கொடி எனப்படுகின்ற மூன்று கொடிகளையும்—மும்மாவும் = கனவட்டம் பாடலம் கோரம் எனப்படுகின்ற



மூன்று குதிரைகளையும—தாமுடைய மன்னர் தடமுடிமேல் தாரன்றே = தாம் முறையேயுடைய சேர சோழ பாண்டியரெனப்படுகின்ற மூவரசருடைய பெரிய முடிகளின் மேலும் கொள்ளப்பட்ட மாலையன்றோ. எ-று.

அன்றே என்றது பலரறிந்தேற்றம். முப்பால் ஆகுபெயர். மும்முரசும் முத்தமிழும் அம்மூவரசர்க்கும் பொதுவுமையவாயினும், இம்முறையுரிமை அவர் குடிமரபிற்கு இயைந்தன போலும். அரசர் மூவருக்கு மேற்கொண்ட சிறப்புச் சொல்லியபடி. (ம)

## மருத்துவன்றாமோதரனார்.

௰௧. சிந்திநீர்க் கண்டந் தேறிசக்தத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்--காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

(இ-ள்.) காந்தி மலைக்குத்தும் மால்யானை — தன்பகையென வெகுண்டு மலையைக் குத்துகின்ற பெரிய களிறுபோலுள்ள அரசனே,—சிந்திநீர்க்கண்டம் தெறிசுக்குத் தேன் அளாய் மோந்த பின் யார்க்கும் தலைகுத்து இல்= சிந்தி நீர்ச்சருக்கரையையும் சிதைக்கப்பட்ட சுக்கையும் தேனோடுகலந்து மோந்த பின் அதனால் தலைக்குத்துடையோர் யாவர்க்கும் தலை குத்து இல்லையாகும்.—வள்ளுவர் முப்பாலால் சாத்தற்குத் தலைக்குத்துத் தீர்வு—திருவள்ளுவர் அருளிச்செய்த முப்பாலினாலே சீத்தலைச சாத்தனார்க்குத் தலைக்குத்து இல்லையாயிற்று. எ-று.

யானைபோல்பவனை யானையெனலால், ஆகுபெயர் முன்கேட்கப்பட்ட நூல்களிலெல்லாம் பல சொற்குற்றங்களும், பொருட் குற்றங்களும், கண்டு பொறாது தலையில் அறைந்துகொண்டு வந்தமையால், புண்பட்டுக் குத்தல் உண்டாயிருந்தது; இதன் கண் ஓர் குற்றமும் காணப்பெறாமையால் அது நீங்கிற்றென்க. எப்படி அம் மூன்று சரக்கும் அதற்கு மருந்தாமோ அப்படியே இதற்கு இம்மூன்று பாலும் மருந்தாயின வென்பதாம், தீர்வென்னும் தொழிற்பெயர் முற்றுப் பொருளில் வந்தது. இதன் குற்றமற்ற விசேடிகை சொல்லியபடி. (௰௧)

## நாகன் றேவனர்.

௰௨. தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவா தண்ணீரை
வேளா தொழிதல் வியப்பன்று—வாளாதா
மப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனர்
முப்பான் மொழிமூழ்கு வார்.



(இ-ள்.) தாள் ஆர் மலர்ப்பொய்கை குடைவார் தீண்ணீரை வேளா தொழிதல் வியப்பு அன்று=காளத்தோடு பொருந்திய தாமரைமலர்களையுடைய ஒரு குளத்து நீரின்கண்ணே மூழ்குவோர் வேறு தண்ணீரை விரும்பாதொழிதல் வியப்பைச் செய்வதன்று;—வள்ளுவனர் முப்பால் மொழி மூழ்குவார்

தாம்வானா அபபால் ஒருபாவை ஆய்பவோ=திருவள்ளுவரது முப்பால்களை யுடைய நூலின் கண்ணே மூழ்குவார் தாம் வீணாக அப்பால் ஒருநூலை விரும் புவரோ! விரும்பார்; ஆதலின், இதுவே வியப்பைச் செய்வதாம். எ-று.

தாளார் மலரெனலால், தாமரைமலரெனப்பட்டது. வியப்பைச் செய் வதை வியப்பென்றார். மூழ்குதல் இங்கே கருத்து முழுதும் அழுந்தி நிற்றன் மேனின்றது. மொழி ஆகுபெயர். ஓகாரம் எதிர்மறை. விரும்புதலாகிய காரணத்தை ஆய்பவோவெனக் காரியமாக உபசரித்தார். அது வியப்பன்றென் றமையால், இது வியப்பென்றதாயிற்று. உயர்வானபொருள் பெற்றோர்க்கு அதினிழிவான பொருள்களையும் பெற விரும்புதல் இயல்பாயிருக்க, குளிர்ச்சி இன்சுவை நறுமணம் முதலிய குணங்களாலே சிறந்தஒரு தாமரைக் குளத்து நீரைப் பெற்றோர்க்கு அதனாற்றானே அமைதி பெற்று வேறு தண்ணீரைப் பெற விரும்பாமை வியப்பைச் செய்வதாயிற்று; ஆயினும் இதுகாறும் ஒரு நூலைக் கற்றோர்க்கு வேறுநூலைக் கற்கவிரும்புதலன்றி விரும்பாமை யில்லாதிருக்க, இப்போது உளதாகலின், இதுவே பெருவியப்பைச் செய்வதென்றதாயிற்று. இதனால் இந்நூலகத்து எந்நூற்பொருளும் அடங்கியிருக்கின்றமைக் குறிப்பிக்கப்பட்டது. பலநூல்களையும் கற்க விரும்புவோர்க்கு இதுவொன்றே அமைதல் சொல்லியபடி. (டூஉ)

## அரிசிற்கிழார்.

டூஈ. பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தோறுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள் விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால்.

(இ-ள்.) பரந்த பொருளெல்லாம் பார் அறிய வேறு தெரிந்து=வேதத்திலே ஒன்றோடொன்று மயங்கி நின்ற நால்வகைப் பொருள்களையும் இப் பூமியிலுள்ளோர் அறிதற்பொருட்டு வேறாகப் பிரித்து—திறந்தொறுஞ்சேரச் சுருங்கிய சொல்லால் பொருள் விளங்க விரித்துச் சொல்லுதல் வல்லார்= அது அது தனது தனது வகையோடு சேரும்படி சுருங்கிய சொல்லால் பொருள் விளங்க விரியும்படி வைத்துச்சொல்லுதல் வல்லார்—வள்ளுவரல்லால் ஆர்=வள்ளுவரல்லது ஒருவருமில்லை. எ-று.

பார் ஆகுபெயர். திறம் அறமுதலியவற்றின் கூறுபாடு. சுருங்கச சொல்லல் விளங்கவைத்தல் முதலிய அழகுகள் எப்படி இவரால் அமைக்கப்பட்டனவோ அப்படிப் பிறரால் அமைக்கப்படுதல் கூடாமை காட்டியதாயிற்று. நூலுக்கும் நாயனர்க்கும் தகுதி சொல்லியபடி. (௰௩)

## பொன்முடியார்.

௰௪. கானின்ற தொங்கலாய் காசிபனார் தந்ததுமுன்
கூநின் றளந்த குறளென்ப—நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தாநின் றளந்த குறள்.

(இ-ள்.) கான் நின்ற தொங்கலாய்=மணந்தங்கப்பெற்ற மாலையையுடைய பாண்டியராஜனே,—முன்காசிபனார் தந்தது கூநின்று அளந்த குறள் என்ப=முன் காசிபராலே தரப்பட்ட குறளை மண்ணின்கண்ணே நின்று உலகத்தை அளந்த குறளென்று சொல்லுவர்;—தாம் நின்று வள்ளுவனார் அளந்த குறள் நூன்முறையான் வான் நின்று மண் நின்று அளந்தது=தாம் இங்கே எழுந்தருளித் திருவள்ளுவராலே தரப்பட்ட குறள் நூலின் முறையோடு கூடி விண்ணின் கண்ணே நின்றும் மண்ணின் கண்ணே நின்றும் உலகத்தை அளந்தது. எ-று.

கு கூ என நீண்டது. ஆறுருபு ஒழ்வுருபின் பொருளில் வந்தது. அக்குறள் வஞ்சித்துப் பெற்றனத்தலால் நூன்முறையோடு கூடாததாயிற்று. இக்குறளுக்கு ஒலிவடிவும் வரிவடிவுமென இரண்டு வடிவுண்மையால், ஒலிவடிவுக்கிடம் வானாகலின் வானின்றென்றும், வரிவடிவுக்கிடம் மண்ணாகலின் மண்ணின்றென்றும், கூறினார். இக்குறளுக்கு நூன்முறையோடு கூடலும் வானிற்றலும் மிகுத்துச் சொல்லி வேற்றுமை செய்யப்பட்டது. முன் மாலுமென் பாட்டிலே நாயனர்கும் மாலுக்கும் இப்பாட்டிலே திருக்குறளுக்கும் மாலவதாரக் குறளுக்கும், ஒப்புமை குறித்துச் சொல்லலால் வேறுபாடம். உலகத்துப் பொருளெல்லாம் இஃது அளத்தற் சிறப்புச் சொல்லியபடி. (௰௪)

## கோதமனார்.

௰௫. ஆற்றலழியுமென் றந்தணர் கனான் மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதா— ரேட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல்சோர் வின்று.

(இ-ள்.) அந்தணர்கள் நான் மறையை உரைத்துப் போற்றி ஆற்றல் அழியும் என்று எட்டின்புறத்து எழுதார்=அந்தணர்கள் நான்கு வேதங்களையும் வாய்ப்பாடமாகக் காப்பாற்றி, எட்டின்கண் எழுதிவைத்தால் வலியில்லாரும் ஓதுவாராகலின் இவற்றின் வலிமை குறையுமென்று எட்டின்கண் எழுதார்; —வள்ளுவனார் முப்பாலை எட்டில் எழுதி வல்லுநரும் வல்லாரும் சொல்லிடினும் ஆற்றல் சோர்வின்று=திருவள்ளுவனாரது திருக்குறளை எட்டின்கணெழுதிவைத்து வலியுடையவரும் வலியில்லாரும் ஓதினாலும், வலிமை குறைச லில்லை. எ-று.

அவ்வேதத்துக்கு உதாத்தம் அநுதாத்தம் சுவரிதமென்னுஞ் சுரங்களின் வழுவாமல் ஓதல்வேண்டு மென்னும விதியுளதாதலின், அதற்குத் தகுதியுடைய அந்தணரே அதிகாரிகளாயினர், இதற்கு அஃதில்லாமையால் யாவரும் அதிகாரிகளாவ ரென்றறிக. சொல்லிடினு மென்றதனால் பொருளுணர்ச்சிக்கும் இதற்கும வலிமை வேண்டுமென்பது பெறப்பட்டது. ஆற்றல் சொற் செறிவின் திட்பம். இங்ஙனங்கூறவே, அவ்வேதம் சொல்லின் கண்ணே தலைமையுடைத் தென்பதூஉம் இவ்வேதம் பொருளின் கண்ணே தலைமை யுடைத்தென்பதூஉம் பெறப்பட்டன. ஈதப்படுதலின் அவ்வேதத்தினும் இது சிறப்புடைமை சொல்லியபடி. (௰௫)

## நத்தத்தனார்.

௰௬. ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ

ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்.

(இ-ள்.) பாயிரத்திேைடு ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும் பகர்ந்ததற்பின் போய் ஒருத்தர் வாய்க்கேட்க நூல்உளவோ=பாயிரம் நான் கதிகாரங்களோடு சேர்த்து தொகையாகிய அரிய ஆயிரத்து முந்நூற்று முப் பது குறள் வெண்பாக்களையும் ஓதி யுணர்ந்தபின்பு, போய் ஒருவரது வாயாலே கேட்டறிதற்கு நூலுளவோ! இல்லை:—மன்னு தமிழ்ப் புலவராய்க் கேட்க வீற்றிருக்காலம=நிலைபெற்ற தமிழிலே புலமை நிரம்பியோராகிப் பிறர் தம்மிடத்து வந்து கேட்க வீற்றிருக்கலாம். எ-று.

வீற்றிருத்தல் ஒரு சபை நடுவிலே உயர்வாகிய ஆதனத்தில் எறியிருத் தல். இவற்றுட் பலவகைப்பட்ட நூல்களின் கருத்துக்களெல்லாம் விளங்கி நிற்றலின், கேட்க நூலுளவோ வென்றார். புலவராயெனவே, புலமை நிரம்பு தற்கு இவை ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்களும் போது மென்பது பெறப்பட்டது. ஓதியோர்க்கு வரும் இம்மைப் பயன் சொல்லியபடி. (௬௪)



## முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்.

௬௫. உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தெள்ளுத லன்றே செயற்பால—வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வா
ரெப்பா வலரினு மில்.

(இ-ள்.) வள்ளுவனார் முப்பாலின் மிக்கமொழி உண்டு எனப் பகர்வார் எப்பாவலரினும் இல்=திருவள்ளுவரது திருக்குறளின் மேற்பட்ட நூலொன்று உளதென்று சொல்ல வல்லவர் எவ்வகைப்பட்ட புலவருள்ளும் இல்லை;—செயல் பால உள்ளுதல் உள்ளி உரைத்தல் உரைத்ததனைத் தெள்ளுதல் அன்றே= ஆதலால், நாம் இந்நூலைக் குறித்துச் செயக்கடவன நாம் இதன் பொருளைச் சிந்தித்துக் கொள்ளுதலும், சிந்தித்துப் பிறர்க்கு அதனைச் சொல்லுதலும், பிறராலே சொல்லப்பட்ட அதனைத் தெளிதலும் அன்றே. எ-று.

மொழி ஆகுபெயர். ஒப்பது வடமொழி வேதமிருத்தலின் மிக்க மொழி என்றும், தமிழின் மாத்திரமன்றி வடமொழி முதலியவற்றினுள்ள 'புலவரை

யும் தழுவதற்கு எப்பாவலரினு மென்றும், அறி வொப்புக் காண்டற்கு உரைத் ததனைத் தெள்ளுதல் என்றும், கூறினர். உள்ளுதலெனவே கேட்டலும், தெளிதலெனவே அவ்வா றொழுகலும் அடங்கின. இது பயிற்சி செய்தொ ழுகுமாறு சொல்லியபடி. (மஎ)

## ஆசிரியர் நல்லந்துவனார்.

மஅ. சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்—தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரோப்பா
ரேப்பா வலரினு மில்.

(இ-ள்.) சாற்றிய பல்கலையும் தப்பா அருமறையும் போற்றி உரைத்த பொருளெல்லாம் தோற்ற=அறிவுடையோரால் சொல்லப்பட்ட பல நூல் களாலும் தப்பாத அரிய வேதத்தினாலும் காப்பாற்றி வைத்திருந்து உலகத் தார்க்குச் சொல்லப்பட்ட விடயங்க ளெல்லாம் தன்னிடத்தே காட்டும்படி —முப்பால்மொழிந்த முதற் பாவலர் ஒப்பார் எப்பாவலரினும் இல்=திருக் குறளைச் சொல்லிய திருவள்ளுவரை ஒப்பவர் எவ்வகைப்பட்ட பாவலருள்ளும் இல்லை. எ-று.

தம்மாலே சொல்லபபட்டவற்றில் வழுவுறுமையால் தப்பாவென்றும், பொருளுணர்தற்கேயன்றி ஓதுதற்கும் எளிதன்றாகலின் அருவென்றும்,



விசேடணஞ் செய்யப்பட்டது. எப்பாவலரினுமில் இதற்கு முன்னுரைக்கப் பட்டபடியே கொள்க. முதற் பாவலர் முதன்மையையுடைய பாவலர்; நால் வகைப் பாக்களில் வெண்பாக்களும் அவற்றுள்ளும் குறள் வெண்பாவும் தலை மைபெற்று நிற்றலின், அக்குறள் வெண்பாவால் நூல்செய்த வல்லமையுடைய ரென்றுமாம். புலமையிலே நாயனாருக்கு ஒப்பின்மை சொல்லியபடி. (மஅ)

## கீரந்தையார்.

மசு. தப்பா முதற்பாவாற் றமாண்ட பாடலினன்

முப்பாலி னாற்பான் மொழிந்தவ—ரெப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர்.

(இ-ள்.) எப்பாலும் வைவைத்த கூர்வேல் வழுதி மனம் மகிழ=எவ்விடத்திலும் கூர்மைவைத்த சிறப்புப்பொருந்திய வேலையுடைய பாண்டிய ராசன் மனமகிழ—தப்பா முதற்பாவால் தாம் மாண்ட பாடலினால் முப்பாலின் நாற்பால் மொழிந்தவர்=சொல்லப்பட்ட பொருள் வழுவாமல் முதன்மையுடைய பாவாகிய குறள் வெண்பாக்களாலே தாம் மாட்சிபெற்ற பாடற்றொழிலினாலே மூன்று பால்களினாலே அறம் முதலிய நான்கு பகுதிப்பொருளையும் திருவாய் மலர்ந்தவர்—தெய்வத் திருவள்ளுவர்=தெய்வத் தன்மையுடைய திருவள்ளுவ நாயனார். எ-று.

கூர் சிறப்பு. நான்கனுள் மூன்றடங்குவதன்றி மூன்றனுள் நான்கடங்காமையின், வியந்து கூறப்பட்டதாயிற்று. நூல்செய்த சிறப்பும், அதனால் அரசனை மகிழ்வித்தமையும், சொல்லியபடி. (௰௯)

## சிறுமேதாவியார்.

௨௰. வீடொன்று பாயிர நான்கு விளங்கற
நாடிய முப்பத்து மூன்றொன்றூழ்—கூடுபொரு
ளெள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை.

(இ-ள்.) வள்ளுவர் சொன்னவகை=திருவள்ளுவராலே சொல்லப்பட்ட திருக்குறளின் அதிகாரவகை,—பாயிரம நான்கு=பாயிரம் நான்கு அதிகாரத்தை உடைத்து, அறம் முப்பத்துமூன்று=அறம் முப்பத்துமூன்று அதிகாரத்தை யுடைத்து,—ஊழ் ஒன்று=ஊழ் ஓரதிகாரத்தையுடைத்து,—பொருள் எழுபது=பொருள் எழுபது அதிகாரத்தை யுடைத்து,—இன்பம் இருபதிற்றைந்து= காமம் இருபத்தைந்து அதிகாரத்தை யுடைத்து. எ-று.



அறத்துப்பாலுள் அடங்காது அதனைவிட்டு ஊற்கெல்லாம் பொதுவாய்

நிற்றலின் வீடொன்று பாயிரமென்றும், இம்மை மறுமை வீடு மூன்றும் பயத் தற் சிறப்பிற்றாய் மூன்றனுண் முதனிற்றலின் விளக்கறமென்றும், யாவர்க் கும் பொதுப்பட நாடித் தொகுக்கப்பட்ட அறத்தின் கூறுபாடு இவையே யாகலின் நாடிய முப்பத்து மூன்றென்றும், முன்னின்ற அறமும் பின் னின்ற இன்பமும் கைகூடுதற்குத் துணையாய் நிற்றலின், கூடுபொருள் என் றும், அப்பொருளின் பாகுபாடுகளெல்லாம் இவற்றினடங்குதலின் எள்ளி வெழுபதென்றும், கூறினர். எள்ளல் இகழ்தல். சிலர் பழைய நூல்களிலே சிலவற்றைச் சாதியாரும் சமயத்தாரும் மிகுத்தும் குறைத்தும் வேறு படுத்த லால் அப்படிப்பட்ட வேறுபாடு இதற்கும் வரினும் வருமென்று ஆசங்கித்து, இதனதிகாரங்களுக்கு இங்ஙனம் தொகை செய்தார். பின் இவ்வாறு தொகை செய்யப்பட்டு வருவனவற்றிற்கும் இதுவே கருத்தாகக் கொள்க. முப்பால் களுக்கும் அதிகாரத்தொகை சொல்லியபடி. (உ0)

## நல்கூர்வேள்வியார்.

உக. உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தா
ளுத்தர மாமதுரைக் கச்சென்ப—விப்பக்க
மாதாநு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற் கூடற் கச்சு.

(இ-ள்.) உப்பக்கம் நோக்கி உபகேசி தோள்மணந்தான உத்தரமா மது ரைக்கு அச்சு என்ப=அப்பக்கத்தைக் குறித்துச் சென்றோனாகிய உமாதேவி யினது தோளை மணந்த கடவுளை வடமதுரைக்கு ஆதாரமென்று சொல்லுவர்;— இப்பக்கம் மாதாநு பங்கி மறு இல் புலச் செந்நாப் போதார் புனற்கூடற்கு அச்சு=இப்பக்கம் மாதாநு பங்கி எனப்படுகின்ற குற்றமற்ற புலமையாகிய தேனைச் சொரிகின்ற செவ்விய நாவாகிய மலரையுடையவர் நீர்வளத்தை யுடைய தென் மதுரைக்கு ஆதாரமாவர். எ-று.

உப்பக்கம் இடைக்காடர் அரசன் தன் பாடலை அவமதித்தமைப் பற்றிப் பிணங்கிச் சென்ற பக்கம். உப்பக்கநோக்கி என்றது வினையாலணையும் பெயர் கேசி திருமால்; இது அக்கடவுள் சகசிர நாமத்திற் கண்டது. கேசிக்குப் பின்னே பிறந்தவள் உபகேசி என்றாயது உபேந்திரன் என்பதுபோல. மாதா அநுபங்கி மாதாவை நிகராகக் கொண்டு நடக்கின்ற ஒழுக்கினனெப்படுத

லின் அவன் பிள்ளை மேலேபோல் இவர் உலகத்தார்மேல் அருள் செய்தல் சொல்லப்பட்டதாயிற்று. காப்போதென்றதற்கேற்பப் புலமையிலே தேஞ



ரோபிக்கப்பட்டது. அச்சுப்போர் குறைகுதலால், அச்சென்றூர். நாயனாலே திகைட் குடைபுடைச் சீர்சால் வழுதியுஞ் சங்கப்புலவருக் தழைத்தினி தோங்கிய மதுரைக்குண்டான சிறப்பு சொல்லியபடி. (உக)

## தொடித்தலை விழுத்தண்டினூர்.

உஉ. அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
திறமுன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள்.

(இ-ள்.) அறத்திறம் நான்கு=பாயிரம், இல்லறம், துறவறம், ஊழென அறப்பாலினுட் பிரிவுகள் நான்கும்,—அரி பொருட்டிறம் எழ்=அரசு, அமைச்சு, அரண், கூழ், படை, நட்பு, ஒழிபென அறியப்பட்ட பொருட்பாலினுட் பிரிவுகள் ஏழும்,—காமத்திறம் மூன்று எனப் பகுதி செய்து=ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று, அவ்விருபாற் கூற்றெனக் காமத்துப் பாலினுள் பிரிவுகள் மூன்றுமாகப் பகுதிசெய்து—பெறலரிய நாலும் மொழிந்த பெருநாவலரே=பெறுதற்கரிய அறம் பொருள் இன்பம் வீடு எனப்படுகின்ற நான்கு பொருள்களையும் சொல்லிய பெருநாவலரே—ஒழிந்த பொருள் நன்கு உணர்வார்போலும்=அவற்றுள் அடங்காது ஒழிந்த பொருள் உளதாயின், அதனை நன்றாக அறியவல்லவர் போலும். எ-று.

திறமென்றது அறமுதலியவற்றோடும் கூட்டப்பட்டது. நாவல்லரே என்றமையால், பிறரால் அறியப்படுவதன்றென்றதாயிற்று முப்பாலியற்றுகையும், இவற்றினடங்காதது ஒன்றில்லை என்பதும், சொல்லியபடி (உஉ)

## வெள்ளி வீதியார்.

உ௩. செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரல்லாதா ரில்.

(இ-ள்.) செய்யா மொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே – ஒருவராலே செய்யப்படாத மொழியாகிய வேதத்துக்கும் திருவள்ளுவரால் அருளிச்செய்யப்பட்ட தன்வழியொழுகுவோர்க்குப் பயன் விளைவிலே பொய்படாத மொழியாகிய திருக்குறளுக்கும் பொருளொன்றே;—ஆராயிற் செய்யா அதற்கு உரியர் அந்தணரே=ஆராயுங்கால்,



செய்யப்படாத அவ்வேதம் ஓதுதற்குரியவர் அந்தணரே,—ஏனையிதற்கு உரியரல்லாதார் இல்=பொய்படாத இத்திருக்குறள் ஓதுதற்கு உரியவரல்லாதவர் உலகத்தில் இல்லை. எ-று.

பூர்வவேதத்தை நித்தியமென்பார் மதம்பற்றிச் செய்யாமொழி யென்றார். அது வடமொழியும் இது தென்மொழியுமாய் நின்று சில வேறுபாடுடையன போல் தோன்றினும் நுண்ணுணர்வாளுக்குவார்க்குக் கருத்து வேறுபடாமையின், பொருளொன்றேயெனத் தேற்றேகாரம் கொடுத்துக் கூறினார். செய்யாமொழி பொய்யாமொழி அன்மொழித் தொகைகள். இதற்குரியரல்லாதாரில்லென்றதனாலும் பொதுவேதமாதலறிக. அதற்கும் இதற்கும் பொருள் வேறோவென்றும், இதனை யோதற்கதிகாரிகளாவார் யாவரோவென்றும் நிகழ்கின்ற ஐயமொழித்தபடி. (உ௩)

## மாங்குடி மருதனார்.

உ௪. ஓதற்கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோ
ருள்ளுதோ றுள்ளுதோ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

(இ-ள்.) வள்ளுவர் வாய்மொழி மாண்பு = திருவள்ளுவரது வாயினின் றுந் தோன்றிய திருக்குறளினது மாட்சியைச் சொல்லின்,—ஓதற்கு எளிதாய் உணர்தற்கு அரிதாகி வேதப் பொருளாய் மிகவிளங்கி = அது ஓதப்படுதற்கு எளிய சொற்களையுடையதாகியும் அறியப்படுதற்கு அரியபொருள்களையுடை யதாகியும் வேதமெனப் படுகின்ற பொருளாகியும் அவ்வேதத்தின் மிக விளங்கி,—தீது அற்றோர் உள்ளுதொறு உள்ளுதொறு உள்ளம் உருக்கும் = குற்றமற்றோர்கள் நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் அவர்களுடைய மனத் தைக் கரைக்கும். எ-று.

ஓதற்கெளிதாயெனவே நவின்றோர்க்கினிமை நன்மொழி புணர்த்தல் களும், உணர்தற்கரிதாயெனவே ஆழமுடைமையும், வேதப்பொருளாயெ னவே விழுமியது பயத்தலும், பிறவுமாகிய அழகுகளினமைதி சொல்லப்பட் டதாயிற்று. தீதற்றோர் பொருளாராய்ச்சிக் கேற்ற நுண்ணறிவுடையோர். உள்ளுதொறுள்ளுதொறு முள்ள முருக்கு மெனவே, முன்காணப்பட்டதி னும் பின்காணப்படும் பொருள் சிறந்தும் விரிந்துந் தோன்றுதலுடைமை பெறப்பட்டது. இதனது அற்புதமான குணமுடைமைச் சிறப்புச் சொல்லிய படி. (உச)

## திருவள்ளுவ மாலை 17

### எறிச்சலூர் மலாடனார்.

உரு. பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—வாய
வறத்துப்பா னல்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்
றிறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

(இ-ள்.) வள்ளுவனார் ஆய்ந்து நூலின் திறததுப்பால் தேர்ந்து = திரு வள்ளுவநாயனார் அவ்வேதத்தின் கருத்துக்களை யாராய்ந்து தம்மாலே செய் யப்பட்ட நூலினது திறத்திற்குத் தக்க நன்மையுடைமையால் இவையே உரி யவை யென்று தெரிந்து,—பாயிரம் நான்கு = பாயிரம் நான்கதிகாரமும்,— இல்லறம் இருபான் = இல்லறவியல் இருபததிகாரமும்,—துறவறம் பன் மூன்று = துறவறவியல் பதின்மூன்றதிகாரமும்,—ஊழ் ஒன்றாக = ஊழ் ஒரு

திகாரமுடையனவாக,—ஆய அறத்துப்பால் நால்வகையா உரைத்தார்=இவ் வாறாய அறத்துப்பாலை பாயிர முதலிய நால்வகையுடைத்தாகக் கூறினார்.

முப்பாற் பொருள்களினும் முத்திக்குக் காரணமாதற் சிறப்புடைமையின், ஆயதுறவற மென்றார். துப்பு நன்மை; அது எல்லா வருணாச்சிரமங்களுக்கும் பொதுவா யிருக்கை. அறப்பாலிய லதிகாரத்தொகை சொல்லியபடி.

## போக்கியார்.

உசு. அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
துருவல் லரணிரண்டொன் றொண்கூ—ழிருவிய
றிண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை.

(இ-ள்.) அரசியல் ஐயைந்து=அரசியல் இருபத்தைந் ததிகாரமுடைத்து,—அமைச்சியல் ஈரைந்து=அமைச்சியல் பத்ததிகாரமுடைத்து, அரண் இரண்டு=அரணியல் இரண்டதிகாரமுடைத்து,—கூழ் ஒன்று= பொருளியல் ஓரதிகாரமுடைத்து,—படை இருவியல்=படையியல் இரண்டதிகாரமுடைத்து,—நட்புப் பதினேழ்=நட்பியல் பதினேழதிகாரமுடைத்து,—குடி பதின்மூன்று=ஒழிபியல் பதின்மூன் றதிகாரமுடைத்து,—எண்பொருள் இவை ஏழாம்=எண்ணப்பட்ட பொருட்பாலுக்கு இவ்வியல்களேழாம். எ-று.

அரசனுக்கு உருத்திட்பம் சிறத்தலின் உருவல்லரணென்றும், பொருளுடையார்க்கே ஒளி அமைவதாகலின் ஒண்பொருளென்றும், படைக்குக் கடும்போரிற் பின்கொடாத திண்மை உரித்தாகலின், திண்படையென்

3



றும் கூறினார். பிற்காலத்தார் அமைச்சு முதலிய வைந்தனையும் அங்கவியலென ஓரியலாக்கியும் வழங்குப. பொருட்பாலிய லதிகாரத்தொகை சொல்லியபடி. (உசு)

## மோசிகீரனர்.

உ௱. ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராருக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்ருகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனர் நன்கு.

(இ-ள்.) *ஆண்பால் எழ்=ஆண்பாற் கூற்று எழதிகாரமும்,—பெண்பால் ஆறிரண்டு=பெண்பாற் கூற்றுப் பன்னிரண்டதிகாரமும்,—அடுத்து அன்பு பூண்பால் இருபால் ஓராருக=ஒருவரை யொருவர் அடுத்து அன்பைப் பூணுதற் பகுதியுடைய அவ்விருபாற் கூற்று ஆறதிகாரமுமாக,—மாண்பு ஆயகாமத்தின் பக்கம் ஒரு மூன்ருக நாமத்தின் வள்ளுவனர் நன்கு கட்டுரைத்தார்= மாட்சியான காமத்துப் பாலினியல்கள் மூன்ருகப் பெயர் பெற்ற திருவள்ளுவர் நன்கு கூறினர். எ-று.*

*இவையே பொருளிலக்கணத் துக்கமையக் களவியல் கற்பியலென இரண்டாக்கப்பட்டன. காமத்துப் பாலியலதிகாரத் தொகை சொல்லியபடி.* (உ௭)

## காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனர்.

உ௮. ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப்—பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனகி
யந்தா மறைமே லயன்.

(இ-ள்.) *அதிகாரம் நூறும் ஐயாறும் மூன்றுமாம்=அதிகாரம் நூற்றுமுப்பத்து மூன்ருக,—மெய்யாய வேதப்பொருள் பொய்யாது விளங்க= வடமொழியிலிருந்து மெய்யாகிய வேதப்பொருள் பொய்யுருது விளங்கும் பொருட்டு,—அந்தாமரை மேல் அயன் தான் வள்ளுவனகித் தந்தான்=அழகிய தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் நான்முகக் கடவுள் தான் திருவள்ளுவனகி உலகத்தாருக்குத் தமிழ்செய்து தந்தான். எ-று.*

*உலகு இங்கே மக்களை உணர்த்தி நின்றது. மெய்யாய வேதப்பொருள் பொய்யாது விளங்கவெனவே, இதற்குமுன் மெய்யாய பொருள் பொய்யாய் மறைந்தும், பொய்யாய பொருள் மெய்யாய் விளங்கியும், கிடந்தமை சொல்லப்பட்டதாயிற்று. அதிகாரத் தொகையோடு நூற்பொருளியல்பு சொல்லியபடி.* (உ௮)

## மதுரைத் தமிழ் நாயகனார்.

உகூ எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பா
லில்லாத வெப்பொருளு மில்லையாற்—சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

(இ-ள்.) எல்லாப் பொருளும் இதன்பால் உள=பலவகை நூல்களாலுஞ் சொல்லப்பட்ட எல்லாப் பொருளும் இந்நூலகத்தடங்கி யிருக்கின்றன;—இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை=இதனிடத்தில்லாத யாதொரு பொருளும் எந்நூலகத்தும் இல்லை,—சொல்லாற் பரந்த பாவால் பயன் என்=

ஆதலால், சொல்வளவினாலே விரித்த நூல்களாற் பயன் யாது! வள்ளுவனார் சுரந்தபா வையத் துணை=திருவள்ளுவராலே தரப்பட்ட இந்நூலொன்றே மூன்றுலகத்தாருக்குத் துணையாதலமையும். எ-று.

எல்லாப்பொருள்களுமாவன,முதல் வழி சார்பென மூவகைப்பட்ட அற நூல் பொருணூல் இன்பநூல் வீட்டுநூல்என்பவற்றிற் செம்பொருள் ஆக்கப் பொருள் குறிப்புப்பொருளென இம் மூவகையாற் கொள்ளக்கிடந்த காட்சிப் பொருள்களும் கருத்துப்பொருள்களுமாம். தொழிலும் பண்பும் ஒரோவழிப் பொருளெனற் கேற்புடைமையின், அவையும் இவற்றுள் அடங்குமாறறிக. பின்னும் அதனை வலியுறுத்தற்கு இதன்பாலில்லாத வெப்பொருளு மில்லை யென்றார். சொல்லாற் பரந்தவெனவே, அவை பொருளாற் பரப்பின்மை பெறப்பட்டது. பரத்தல் பதினாயிரம் நூறாயிர முதலிய கிரந்தவளவையால் விரிதல். சொல்லாற்பரந்த நூல்களை ஆய்வோர் மலையகழ்ந்து எலிபிடித்தல் போல மிகவருந்திச் சிறுபயன் கொள்ளுதலால், என்பயனென்றார். ஆல் அசை. பா, வையம் ஆகுபெயர்கள். சின்னாட் பல்பிணிச்சிற்றறிவுடையோர்க்கு விதிவிலக்குக்கண் முற்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோலக் கண்டு தெளியு மாறு உணர்த்தித் தடுமாற்றந் தீர்த்தலின், வையத்துணை யென்றார். முற்றொ ருங்குணர விழைவார்க்கு இஃது இன்றியமையாச் சிறப்பிற்றென்றபடி. (௰௯)

## பாரதம்பாடிய பெருந்தேவனார்.

௨௰ எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரு—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்.

(இ-ள்.) பாரதம் சீராமகதை மனுப் பண்டைமறை நேர்வன=பாரதமு சீராமகதையையும், மனுமிருதி பழைய வேதத்தையும், ஒப்பன வாகும்;—எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச் செப்பிய வள்ளுவர்



செப்பவரும் முப்பாற்கு நிகர் இல்லை=எவ்வகைப்பட்ட பொருள்களை யும் எவ்வகையோடும் அவற்றின்றன்மையோடு அறிய அவர்க்குச் சொல்லும் படிக்குத் திருவள்ளுவர் சொல்லால் வந்த திருக்குறளுக்கு உவமானமாகத்

தக்கது ஒன்றில்லை. எ-று.

மற்று அசை. அறிதற்கரிய வேதாந்தப் பொருளுமென்றற்கு எப்பொருளுமென்றும், உயர்குலத்தாரேயன்றி ஏனையோருமென்றற்கு யாருமென்றும், ஐயந்திரி பின்றியறிய வென்றற்கு இயல்பினறிவுற வென்றும் இதுவே சுருதி குருவிரண்டுமா மென்றற்குச் செப்பிய வென்றும், கூறினர். பண்டை யென்பது சிராமகதைக்குங் கூட்டுக. கதாரூபமாயிருந்து பாரத ராமாயண மெனவும், விதிரூபமாயிருந்து சுருதி மிருதியெனவும் கூட்டிச் சொல்லப்படுதலால், உவமான உவமேயங்களாதலறிக. எப்பொருளும் யாருமியல்பினறிவுறச் செப்புதல் வேதத்திற்கின்மையால், முன் முப்பாலின் மிக்கதொழியென்ற அதனாற் பெறப்பட்ட வேதத்தினொப்புமையை மறுத்தபடி. (கூ0)

## உருத்திரசன்மகண்ணர்.

கூக. மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்குந் தாய்முலை யொண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோர்க்
காய்தொறு மூறு மறிவு.

(இ-ள்.) மணற்கிளைக்க நீர் ஊறும்=மணலைத் தோண்டுந் தோறும் நீர் பெருகும்,—மைந்தர்கள் வாய் வைத்து உணத் தாய் முலை ஒண்பால் சுரக்கும்=புதல்வர்கள் வாய்வைத்து உண்ணுந்தோறும் தாயினது முலைக்கண் நல்ல பால் பெருகும்;—பிணக்கு இலா வாய் மொழி வள்ளுவர் முப்பால் ஆய் தொறும் மதிப்புலவோர்க்கு அறிவு ஊறும்=அவைபோல, பிணங்குதற்கு ஏதுவில்லாத வாய்மைச் சொல்லையுடைய திருவள்ளுவரது திருக்குறளை ஆராயுந் தோறும், அறிவுடைய புலவர்க்கு அறிவு வளரும். எ-று.

கற்பிதமாகிய சாதிசமயங்களின் மானம்பற்றி உள்ளதை இல்லதாகவும் இல்லதை உள்ளதாகவும், சிறிதைப் பெரிதாகவும், பெரிதைச் சிறிதாகவும், தீயதை நல்லதாகவும், நல்லதைத் தீயதாகவும், புனைந்து பிறர் பிணங்கும்படி சொல்லப்பட்டதல்லாமையால், பிணக்கிலா வாய்மொழி யென்றார். மதிப்புலவோர்க் கறிவூறு மெனவே, அவர் அவ்வறிவைக்கொண்டு பிறர்க்கெல்லாம் விதி விலக்குகளைக் கற்பித்தல் வேண்டுமென்றதாயிற்று. இதனைச் சிலகாற் பயிறலினமையாது பலகாலும் பயிற்சி செயல் வேண்டுமென்றபடி. (கூக)

## பெருஞ்சித்தனர்.

௩௨ ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினு
லோதிய வொண்பொரு ளெல்லா—முரைத்ததனற்
றாதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன.

(இ-ள்.) *தாது அவிழ்தார்மாற=பொடியொடு விரிந்த பூமாலையையுடைய பாண்டியராசனே,—ஏதம் இல் வள்ளுவர் இன் குறள் வெண்பாவினுல் ஓதிய ஒண்பொருளெல்லாம் உரைத்ததனல்=குற்றமில்லாத் திருவள்ளுவர் இனிய குறள் வெண்பாக்களாலே நான்கு வேதங்களாலுஞ் சொல்லப்பட்ட ஒள்ளிய பொருள்களை யெல்லாங் கூறினமையால்,—மேதக்கன தாமே தமைப்பயந்த வேதமே=மேம்பாட்டுக்குத் தக்கவை அக்குறள் வெண்பாக்களே, முதனூலாய் நின்று அவற்றைப் பயந்த வேதங்களோ! நீ சொல்லுவாயாக. எ-று.*

*தாம் தம்மை எனப்பட்டவை அவை அவற்றை என்னும் பொருளைத் தந்து நின்றன. ஏகாரம் இரண்டும் வினா. பிறநூலாசிரியர்க்கெல்லாம அவரெதிரிகளாலே மறுக்கப்பட்டுவருங் குற்றம்போல்வது இவர்க்கு இல்லையென்றற்கு ஏதமில் வள்ளுவரென்றும், தாங்குறியவாய் நின்று கற்போர்க்கு வருத்தம் விளையாமை பற்றி இன்குறளென்றும், உணர்வுடையோராலே விரும்பப்பட்ட நற்குண முடைமைபற்றி ஒண்பொருளென்றும், கூறினர். நூலாசிரியர்க்கும் நூலுக்கும், நூனுதலிய பொருளுக்கும், தகுதிதோன்றச் சொல்லப்பட்ட விசேடண குணங்களாலே, இவ்வேதம் அவ்வேதத்தினுஞ் சிறப்புடைமை குறிப்பித்தபடி.* (௩௨.)

## நரிவெருத்தலையார்.

௩௩ இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன்—மன்பதைகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்.

(இ-ள்.) *இன்பம் பொருள் அறம் வீடு என்னும் இந்நான்கும் மன்பதை*

கட்கு முன்பு அறியச் சொன்ன முதுமொழி நூல் உள்ள அரிது என்று= இன்ப முதலிய இக்காற் பொருளியல்புகளையும் மக்கட் பரப்புக்கு அக்காலத்தில் அறியும் வண்ணஞ் சொல்லப்பட்ட பழமொழி வேதமானது ஓதியுணரப் படுதற்கரிதென்று,—வள்ளுவர் அவை உலகம் கொள்ளக் குறள் மொழிந்தார்= திருவள்ளுவர் அவற்றை உலகத்தார் எளிதிலுணரும்படி திருக்குறளைக் கூறினார். எ-று.



முன்பறியவெனவே, உற்சர்ப்பிணியாகலின், அக்காலத்தோர்க்கு உணர்தற்கேற்ற ஆயுணீட்சியும் உணர்வுவலியும் இருந்தனவென்பதூஉம், அவசர்ப்பிணியாகலின் இக்காலத்தோர்க்கு அவையில வென்பதூஉம், பெறப்பட்டன. இவ்விரண்டும் அவாவறுத்தன் முதற்பாட்டுரையிற் காணக. தேயவழக்கிற் படாததும் வருந்திக் கற்போர்க்கு மாத்திரம் புலப்படுவதுமாய் எல்லாமொழி கட்கும் முற்பட்டுக் கடவுண் மொழியாய் நிற்றலின், முதுமொழி யென்றார். அறமுதலிய நான்கும் பிரிவுபட்டுத் தோன்றுமையை உடைத்தாகலின், உள்ள வரிதாயிற்று. பழையவேதம் உளதாகவும் வேறிது சொல்லுதற்குக் காரணம் உணர்த்தியபடி. (கூகூ)

## மதுரைத் தமிழாசிரியர் சேந்தன்றூர்க்கிழார்.

கூஎ. புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்ப—னிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுந்
தறங் கிருண்மா லைக்கும் பெயர்.

(இ-ள்.) பூமேல் புலவர் திருவள்ளுவரன்றிச் சிலவர் புலவரெனச் செப்பல்—பூவுலகின் கண்ணே புலவரெனத் திருவள்ளுவரையன்றி வேறு சிலரையும்புலவரென்று சொல்லுதல்,—மாலைநிலவு பிறங்கு ஒளி மாலைக்கும் பெயர் மற்றும் கறங்கு இருள் மாலைக்கும் பெயர் (செப்பல்)=மாலையென்பது நிலவால் விளங்குகின்ற அந்திக்கும் பெயராக மற்றும் சூழ்கின்ற விருளையுடைய அந்திக்கும் பெயராகச் சொல்லுதல் போலும். எ-று.

செப்பலென்றது பின்னுங்கூட்டப்பட்டது. புலமையாவது பலவேறு

வகைப்பட்ட நூலுணர்ச்சிகளை யெல்லாம் ஒருங்கேகொண்ட பேரறிவுடைமையாம். உயர்வொப்பற்ற இவரது புலமையைக் குறித்து நோக்குங்கால் ஏனையோர் புலமை புலமையன்றாய் முடிதலின் இவ்வாறு கூறினர். புலவ ரென்பது நாயனர்க்கே காரணப் பெயராமென்றபடி (௩௪)

## மதுரை யறுவைவாணிகர் இளவேட்டனர்.

௩௫. இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு
மன்பதைக் கெல்லா மனமகிழ—வன்பொழியா
துள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

(இ-ள்.) இன்பமும் துன்பமும் என்னும் இவை இரண்டும் உள்ளி உணர=பின் வரக்கடவனவாய சுகமுந் துக்கமுமெனனப்பட்ட இவற்றினுடைய இருவகைக் காரணங்களையும் ஆராய்ந்தறியவும்,—அன்பு ஒழியாது



மனம் மகிழ=தம்மேலன்பு நீங்காமல் உள்ளங்களிகூறவும்,—மன்பதைக் கெல்லாம் ஓது சீர்வள்ளுவர் வாயுறை வாழ்த்து உரைத்தார்=மக்கட் பரப்புக கெல்லாம் புகழ்ப்படுஞ் சீரையுடைய திருவள்ளுவர் வாயுறை வாழ்த்தாகத் திருக்குறளைக் கூறினர். எ-று.

இன்பத்தின் காரணம் விதிக்குறளாலும், துன்பத்தின் காரணம் விலக்குக் குறளாலும், சொல்லப்பட்டன. முன்பறிதற்குப் பயன் அவற்றைச் செய்தலும் தவிர்தலுமாம். வேண்டுவனவெல்லாந் தொகுத்துணர்த்தலின், மன மகிழ்தல் சொல்லப்பட்டது. அவ்வேதம்போலாது பலர்க்கும் உபயோகியாகக் கூறலின், மன்பதைக் கெல்லாமென்றார். வாயுறை வாழ்த்தினியல்பு "வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்—வேம்புங் கடுவும் போலவெஞ்சொற்—றாங்குதலின்றி வழிநனி பயக்குமென்—றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தாலறிக. எதிர்கால வினை வுணர்ச்சி பயத்தல் சொல்லியபடி. (௩௫)

## கவிசாகரப் பெருந்தேவனார்.

௩௬. பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனத
மாவிற் கருமுனியா யானைக்—கமரரும்ப
ரேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா.

(இ-ள்.) *பூவிற்குத்தாமரை = மலர்களுக்குள்ளே தாமரை மலரும்,—பொன்னுக்குச் சாம்புனதம் = பொன்களுக்குள்ளே சாம்புனதப் பொன்னும், ஆவிற்கு அருமுனிஆ = பசுக்களுக்குள்ளே காமதேனுவும்—யானைக்கு அமரர் உம்பல் = யானைகளுக்குள்ளே ஐராவதமும்,—தேவில் திருமால் என—தேவர்களுக்குள்ளே திருமாலும் போல,—பாவிற்கு வள்ளுவர் வெண்பா சிறந்தது என்ப = நூல்களுக்குள்ளே திருவள்ளுவரது குறள்வெண்பாச் சிறந்தது என்று அறிவுடையோர் சொல்லுவர். எ-று.*

*ஏ அசை. பா ஆகுபெயர். பொன் ஆடகம், கிளிச்சிறை சாதரூபம், சாம்புனதம் என நால்வகைப்படும். காமதேனு வசிட்டமுனியினிடத்துள்ளதாதலின், அருமுனியாவென்றார். உவமான முகத்தால் இஃது பல நூல்களினும் சிறந்து நிற்கின்ற மாட்சிமை சொல்லியபடி.* (௩௬)

## மதுரைப் பெருமருதனார்.

௩௭. அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தாற் றெளிய—முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனா
ரோதவழக் கற்ற துலகு.



(இ-ள்.) *அறத்திறம் முப்பத்தெட்டால் = அறத்தின் கூறுபாடு முப்பத்தெட்டதிகாரங்களாலும்,—பொருட்டிறம் எழுபதால் = பொருட் கூறுபாடு எழுபததிகாரங்களாலும்,—இன்பத்திறம் இருபத்தைந்தால் = காமத்தின் கூறுபாடு இருபத்தைந்ததிகாரங்களாலும்,—தெளிய = தெளியும் பொருட்டு, முறைமையால் வேதவிழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார் ஓத = காரண காரியவொழுங்கால் வேதத்தினுண்மையாகிய பொருளைக் குறள்வெண்பாக்களாலே திருவள்ளுவனார் ஓதலால்,—உலகு வழக்கு அற்றது = உலகமானது*

வழுவுதலின்றும் நீங்கிற்று. எ-று.

திறமும் ஆலும் முனனும் கூட்டப்பட்டன. உயாவாகியபொருள் கரும காண்டம் பிரமகாணட மிரண்டினுள்ளும் சிறந்தபொருள் ஒழுகுதல் விதியை விலக்கென்றும் விலக்கை விதியென்றும் கோடல் உலகு மக்களை யுணாத்தி நின்றது. துணிவுபற்றி அற்றதென இறந்தகாலத்தாற் கூறினா. முன்னதின் வேறுபட்ட முப்பால்களினதிகாரத்தொகைகளோடு உலகிற்கு விளையும் கனமை சொல்லியபடி. (கூஎ)

## கோவூர்க்கிழார்.

கூஅ அறமுத னான்கு மகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தோந்து தெளியக்—குறளவெண்பாப
பன்னிய வள்ளுவனா பான்முறைநே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.

(இ-ள்) அறமுதல் நான்கும் அகலிடத்தோா எல்லாம் திறமுறத் தோநது தெளியக்குறள் வெணபாப் பன்னியவள்ளுவனா பான்முறை அறமுதலிய நான்குபொருள்களையும் மணணுலகததோரெல்லாம் வகைபபட ஆராயநது தெளியும் பொருட்டுக் குறள் வெணபாக்களாலே சொல்லப்பட்ட திருவள்ளுவநாயனாரது முப்பாலகளையுடைய புத்தகத்தின் கணணே—முன்னை முதுவோா மொழிநோ ஒவ்வாது—முற்காலத்துள்ள பெரியோரது நூல்களுக்கு நோதல் பொருந்தாது. எ-று

மொழி ஆகுபெயா. பெரியோராவா வடமொழியிலும் தெனமொழியிலும் பிறமொழிகளிலும், நூல செய்த முனிவரும், புலவரும், பிறரும். அந நூல்களாவன மனு முதலியோராலே செயயப்பட்ட அறநூன முதலியன இதன புத்தகத்தில் முன்னூல்களிலொன்றும் சோககபபடுதற்கு தகுவதன றென்று சொல்லியபடி. (கூஅ)

## உறையூர் முதுகூற்றனார்.

கூகூ. தேவிற் சிறந்த திருவள் ளுவாகுறள்வெண்
பாவிற் சிறநதிடுமுப் பால்பகரார்—நாவிற்

குயவில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு

(இ-ள்.) தேவிற் சிறந்த திருவள்ளுவர் குறள்வெண்பாவிற் சிறந்திடும்பால பகரார் = தெய்வத்தன்மையாற் சிறந்த திருவள்ளுவர் குறள்வெண்பாக்களோடு கூடிச் சிறந்து தோன்றா நின்ற முப்பால்களையும் ஓதாராது — நாவிற்கு இயல் இல்லை = நாக்கிற்கு இன்சொற் சொல்லி வாழ்தல் உண்டாகாது, — சொற்சுவை ஓர்வு இல்லை = மனத்திற்குச் சொற்களின் சுவையை அறிதல் உண்டாகாது, — மற்றும் செயல் இல்லை = இவையன்றியும் காயத்துக்கு நல்ல செயலுண்டாகாது — என்னும் திரு = என்று நினைத்துத் திருமகள் அவரிடத்துச் சேராள். எ-று.

அவையோர்தற்கும் செயலுக்கும் உரிய மனமும், காயமும் வருவிக்கப்பட்டன. திருமகள் சேராமையாகிய காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஓதார்க்குளவாகாமை கூறவே ஓதுவோர்க்கு இவையுளவாகலின், வாக்கிற்குக் கடுஞ்சொல், பொய், கோள், புறங்கூறல்களும், மனத்திற்குப் பிறனில் விழைதல், பிறன்பொருள் விழைதல், பிறன்பொருட்குக் கேடெண்ணல், பிறவுயிர்க்கிறுதி யெண்ணல்களும், காயத்திற்குப் பிறன்மனை புணர்தல் உயிர்க்கொலை செய்தல், பழியூணுணல், பிறர்பொருள் வௌவல்களும், ஆகிய குற்றங்களெல்லாம் நீங்குமென்பதும் பெறப்பட்டது. அறமின்பங்கட்குக் காரணமாகச் சிறப்புடைய பொருட்பேறு இஃதோதலின் உளதாமென்றபடி. (௩௯)

## இழிகட் பெருங்கண்ணனார்.

௪௦ இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற — மும்மையின்
வீடவற்றி னாக்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடினரின் குறள்வெண் பா

(இ-ள்.) இம்மை மறுமை இரண்டும் எழுமைக்கும் செம்மை நெறியின் தெளிவுபெற — இகபரங்கட்காவன விரண்டையும் வினைப்பயன் றொடர்தற்குரிய எழு பிறப்பிற்குமாகச் செவ்வையான வழியால் யாவரும் தெளிதல் பெறவும், — மும்மையின் அவற்றின் வீடு ஆக்கின விதிவழங்க = அறம்பொ

ருள் இன்பமென்னும் முப்பால்களுள் அம்முப்பாற் பொருள்களோடு வீடு மாகிய நாற்பொருள்கள் விதிகளும் வழங்கவும்,—வள்ளுவனார் இன்குறள் வெண்பாப் பாடினார் = திருவள்ளுவ நாயனார் இனிய குறள் வெண்பாவைப் பாடினார். எ-று

4



செவ்வையான வழி விதியும் பத்தியும் ஞானமும் நோயாளிக்கு மருந்தும் அனுபானமும் பத்தியமும் போல் ஒன்றற்கொன்று மாறாது கூடி நிற்கும் வழி. வீட்டு விதி துறவறத்திற் காண்க. இம்மை மறுமை வீடு மூன்றும் பயக்குமாறு சொல்லியபடி. (சா)

## சேயிர்க்காவிரியார்மகனார் சாத்தனார்.

சக. ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத்—தேவர்
திருவள் ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார்.

(இ-ள்.) ஆவனவும் ஆகாதனவும் அறிவுடையார் யாவரும் எடுத்தியம்ப வல்லார் = மக்களுக்கு ஆவனவற்றையும் ஆகாதவற்றையும் அறிவுடையார் யாவரும் இனி இதிலிருந்து எடுத்துச் சொல்லுதற்கு வல்லவராவார்;—தேவர் திருவள்ளுவர் செப்பியவே பொருவில் ஒழுக்கம் பூண்டார் செய்வார் = ஆதலால், தேவராகிய திருவள்ளுவராலே சொல்லப்பட்டவற்றையே ஒப்பில்லாத ஒழுக்கத்தை மேற்கொண்டவர் செய்வார். எ-று.

இங்ஙனம் கூறவே, அவ்வேதத்திலிருந்து உள்ளவாறு எடுத்துச்சொல்லுதல் அறிவுடையார்க்கு முடியாமையால், ஒழுக்கம் பூண்டதற்கு அதன் கண்ணே சொல்லப்பட்டபடி வழுவாமற் செய்தல் கூடாமை காட்டப்பட்டது. தாம், உம், அசைகள். ஆவன இன்பத்தைத் தருவன. ஆகாதன துன்பத்தைத் தருவன. ஒப்பில்லாத ஒழுக்கம் கொல்லாமை முதலியன. போதகாசிரியருக்கும் கேட்டு ஒழுகுபவர்க்கும், வரும் நன்மை சொல்லியபடி. (சக)

பெரும்பாரமாதலினுக்கி. பறை ஒருவன்கையாற் றன்னையறிவித்ததொன்றனை இடந்தோறுங்கொண்டுசென்று யாவரையுமறிவிக்குமாகலான், இது தொழிலுவமம். இதனால் அவரது செறிவின்மை கூறப்பட்டது. (௬)

விளக்கம் :— தம்மிடத்தே மேலோரும் சொல்லிய மறைவாகிய இரகசியங்களை ஒவ்வொரு இடமும் சென்று மற்றவர்களுக்குச் சொல்லுதலால், கயவர் என்று சொல்லப்படுபவர் ஊரார்க்கு அறிவிப்பதற்கு அடிக்கப்படும் பறை என்னும் வாத்தியத்திற்கே சமானமாவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆகவே, ஊரார் அறியும் வண்ணம் பறையடிப்பவன் ஒருவன் தனக்கு மேலோர் கட்டளையிட்டபடி இடந்தோறும் போய்ப் பறையை யடித்துச் சொல்லிய விஷயங்களைச் சொல்லுவது வழக்கம் ஆதலின், அதுபோலவே தன்னிடத்தே யாவரும் அறியாத வண்ணமாக மறைவாகிய விஷயங்களை எவனேனும் ஒருவன் சொல்லி விடுவானாயின் பிறர் அறிந்தால் குற்றம் வரும் என்று எண்ணி மறைவாகச் சொல்லிய அவ் விஷயத்தைக் கேட்டவனாகிய கீழ் மகன் தான் கேட்டதாகிய அதனை வேறொருவருக்குச் சொல்லாவிடில் தனக்குப் பெரும் பாரமாகத் தாங்க முடியாதவனைப்போல் விரைந்து சென்று ஒவ்வோரிடமும் சொல்லி வெளிப்படுத்தி சொன்னவனுக்குக் குற்றத்தினை உண்டாக்குவான் என்று அறிந்தோம். இதனால், அக்கீழ்மக்களிடத்து நெருங்குதல் ஆகாது என்றும் அறிந்ததாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கீழ் மகன் ஒருவன் தன்னிடத்துள்ள பொருளை ஏதேனும் பிறர்க்கு உதவுவானோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்

## 1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
## கூன்கைய ரல்லா தவர்க்கு.

(பரி.) இ-ள். கயவர் கொடிறு உடைக்கும் கூன் கையர் அல்லாதவர்க்கு= கயவர் தங்கதுப்பினை நெரிப்பதாக வளைந்த கையினையுடையரல்லாதார்க்கு—ஈர்ங்கை விதிரார்= தாமுண்டு பூசிய கையைத் தெறித்தல் வேண்டுமென்பிரக்தாலுந் தெறியார். எ-று.

விளைந்த கை = முறுக்கிய கை. மெலியோர்க்கு யாதுங்கொடார், வலி யோர்க்கு எல்லாம் கொடுப்பரென்பதாம். (எ)



விளக்கம் :— கீழ்மக்களானவர் தம் கழுத்தினை ஒடிப்பதாக வளைந்த கைகொண்டு தம்மிடத்தே வருகின்றவர்களுக்கு அல்லாமல் மற்றவர்க்குத் தாம் உணவினை உண்டு நக்கிய கையையும் தெறிக்கவேண்டுமென்று யாசித்தாலும் தெறிக்கமாட்டார்கள் என்று இத்திருக்குறள் கூறுவதால், கீழ்மக்கள் முறுக்கிய கைகொண்டு தம்மை வதைப்புடைப் பார்க்கே கொடுப்பர் அல்லாமல் வறிஞராய் உள்ளவர்க்கும் ஒழுக்கத்தால் சிறந்தவர்க்கும் ஒன்றுங் கொடார் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாறைக்கர், "கீழ்மகனது கொடுக்கும் தன்மையும் சான்றோரது கொடுக்கும் தன்மையும் ஆகிய இரண்டையும் ஒன்றாகவே எடுத்துக் காட்டல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1078. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

(பரி.) இ-ள். சொல்லப் பயன்படுவர் சான்றோர் = மெலியார் சென்று தங்குறையைச் சொல்லியதுணையானே இரங்கிப் பயன்படுவர் மேலாயினோர்;— கீழ் கரும்புபோல் கொல்லப் பயன்படும் = மற்றைக் கீழாயினோர் கரும்புபோல வலியார் நைய நெருக்கிய பின் பயன்படுவர். எ-று.

பயன்படுதல் = வேண்டியதனைக் கொடுத்தல். கீழாயினாரது இழிவுதோன்ற, மேலாயினாரையும் உடன்கூறினார். இவ்விரண்டுபாட்டானும் அவர் கொடுக்குமாறு கூறப்பட்டது. (அ)

விளக்கம் :— வறிஞர் சென்று அவர்களுடைய குறையைத் தம்மிடத்துச் சொல்லிய அவ்வளவிலேயே இரக்கப்பட்டு வந்த வறிஞர்க்குப் பயன்படும்படித் தம்மிடத்துள்ள பொருளை மேலாயினோர் கொடுப்பர்

என்றும், மற்றைய கீழானவர்கள் கரும்பைப்போல வலிமையுடையவர் நைய நெருக்கியகாலத்து ஏதேனும் தருவர் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், சான்றோராவார் தம்மிடத்தேயுள்ள பொருளை வந்து கேட்பவருக்குக் கேட்ட அளவிலேயே அன்பின் மிகுதியால் கொடுத்து விடுவார்களென்றும், கீழாயினோர் தரித்திரர் முதலாயினோர்க்கு ஓர் இம்மியளவுங்கொடாது சேர்த்துவைத்து கள்வர் முதலாயினோர் நையப்புடைக்கின்ற காலத்து அவர்களுக்கு முற்றுங்கொடுத்து விடுவாராவார் என்றும் அறிவதுடன் கரும்பானது தன்னிடத்தேயுள்ள இரசத்தினைத் தொட்ட அளவில் கொடாமல் ஆலையிலிட்டு நன்முக நசுக்கிய காலத்துக் கொடுப்பதுடன் தன் உருவத்திற்கும பழுது தேடிக்கொள்ளுவது



போல கள்வர் முதலாயினோர் பொருளைப் பறிக்கின்ற காலத்துப் பொருள் வைத்திருந்த கீழ்மகனை அவன் உறுப்புக்களைச் சிதைத்து உயிரையுங் கொள்ளைகொண்டு போவர் என்றும் சண்டோர் சுன்றனர். அதுகேட்ட மாணக்கர், "கீழாயினருடைய கொடையினது இழிவை நன்றாக அறிந்தோம். இனிக் கீழ்மக்கள் பிறர் செல்வத்தைப் பார்ப்பாராயின் என் செய்வர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்

## 1079. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல் வடுக்காண வற்றாகுங் கீழ்

(பரி.) இ-ள். உடுப்பதூஉம் உண்பதூஉம் கீழ் காணின் = பிறர்செல்வதாற் பட்டோ துகிலுமுடுத்தலையும் பாலோடடிசிலுண்டலையுங் கீழாயினான் காணுமாயின்—பிறர்மேல் வடுக் காண வற்றாகும் = அவற்றைப் பொறாது அவர்மாட்டு வடுவில்லையாகவும் உண்டாக்கவல்லனாம். எ-று.

உடுப்பது உண்பதென்பன ஈண்டவ்வத்தொழின்மேனின்றன: அவற்றாற் பூண்டல் ஊர்தன்முதலிய பிறதொழில்களுங் கொள்ளப்படும். அவற்றைக் கண்டதுணையானே பொறாமையெய்தலிற் 'காணின்' என்றும், கேட்டார் இது கூடுமென்றியையப் படைத்தல் அரிதாகலின் 'வற்றாகும்' என்றுங்

கூறினர். இதனாற் பிறர்செல்வம் பொறாமை கூறப்பட்டது (கூ)

**விளக்கம்** :—பிறர் தாமுடைய செல்வத்தால் பட்டையும் துகிலையும் உடுத்தலையும், பாலோடு அன்னம் உண்டலையும் கீழாயினான் காணானாயினால், அவ்வுடுத்தலையும் உண்டலையும் காணப்பொறாது அவரிடத்தே யாதொரு குற்றமுமில்லாமலிருக்கவும் குற்றம் உள்ளதாகச்செய்ய வல்லவனாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால், கீழ்மகனானவன் தானும் உடுக்காதும் உண்ணாதும் இருப்பதுடன் நல்வினைப் பயனால் மற்றவர்கள் செல்வத்தை யடைந்து உண்ணலையும் உடுத்தலையும் செய்வாராயின் அச்செயலைக்கண்ட அளவிலேயே மனம்பொறாது பொறாமையினை அடைவான் என்றும், மேலும் அவரிடத்து யாதொரு குற்றமும் இல்லாதிருக்கவும் குற்றம் உண்டு என்று பலரும் நம்பும்படிக் குற்றத்தை உண்டுபண்ணித் தூற்றுவான் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் கீழ்மகன் பிறர் செல்வங்கண்ட இடத்துப் பொறாமைப்படுவான் என்று அறிந்தோம். இனி, இவ்விதக் கீழ்மகன் தனக்கு ஏதேனும் ஒரு துன்பம் வந்தால் என் செய்வன்?" என்கையும், ஆசிரியர் கூறுவாராயினர்



1080. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

(பரி.) இ-ள். கயவர் ஒன்று உற்றக்கால் விரைந்து விற்றற்கு உரியர் = கயவர் தம்மை யாரானுமொரு துன்பமுற்றக்கால் அதனைப் பற்றுக்கோடாக விரைந்து தம்மைப் பிறர்க்கு விற்றற்குரியர்:—எற்றிற்கு உரியர் = அதுவன்றி வேறெத்தொழிற்குரியர்! எ-று.

உணவின்மையாகப் பிறிதாக ஒன்றுவந்துற்ற துணையானென்பது தோன்ற 'ஒன்றுற்றக்கால்' என்றும், சொன்கின்றார் தங்கயமை யறிந்து வேண்டாவென்றற்கு முன்னேவிற்றுநிற்றலின் 'விரைந்து' என்றும் கூறினார் ஒருதொழிற்கு முரியரல்லரென்பது குறிப்பெச்சம். இதனாற் றம் பிறர்க்

கடிமையாய் நிற்பரென்ப து கூறப்பட்டது. (ய)

விளக்கம் :—கீழ்மக்கள் தமக்கு ஏதேனும் ஒரு துன்பம் வந்து விடுமாயின், அத்துன்பத்தையே தமக்கு ஒரு முதலாகக் கொண்டு விரைந்து சென்று தம்மைப் பிறர்க்கு விற்றுவிடுவதற்கே தகுதியாவர் என்றும், அதுவல்லாமல் அவர் வேறு எந்தத் தொழிற்கும் உரியராகார் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், கீழ்மக்களானவர்கள் தமக்குத் தம்மைக் காப்பாற்றிக்கொள்ள உணவு கிடைக்காமையினாலேயோ வேறு எதனாலேயோ ஒரு துன்பம் வருங்காலத்து அத்துன்பத்தினைத் தாம் முயன்று நீக்கிக்கொள்ளாது பிறரிடத்தே சென்று அவர்கள் 'இவர் கயவர்; இவர் சொல் கேட்டலாகாது' என்று விலக்குவதற்கு முன்னே தமக்கு வந்த துன்பத்தினை அதிசீக்கிரமாகச் சொல்லித் தம்மைத் தாழ்வு படுத்திக்கொண்டு அவர்க்கு அடிமைபோலும் இருப்பர் என்றும், அதுவல்லாது அவர் வேறு எத்தொழிலையும் செய்யத் தகுந்தவர் அல்லர் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் தம் ஆசிரியரை நோக்கிப், "பெரியோய்! இதுவரையும் அறமும் பொருளும் உணர்ந்தோம். இனிக் காமம் என்பது எதனை விளக்கும் காமத்துப்பாலையும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் அன்புடன் கூறுவாராயினர்.

ஒழிபியல் முற்றிற்று.

பொருட்பால் முற்றிற்று.